12th December 1961]

been purchased for the library. If so, will the Government look into the matter?

THE HON. SRI C. SUBRAMANIAM : I said that particulars had been called for. If what the hon. Member represented now is true, we will look into it.

DEPUTY SPEAKER : Questions are over.

[*Note.*—**An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.**]

II GENERAL DISCUSSION ON THE BUDGET FOR THE YEAR 1962–62—*cont.*

DEPUTY SPEAKER : We will now continue the discussion on the Budget for 1962–63. Sri P. S. Chinnadurai will now speak.

**SRI P. S. CHINNADURAI** : மதிப்பிற்குரிய உதவி சபாநாயகர் அவர்களே, கனம் நிதி அமைச்சர் அவர்கள் கடைசியாக இந்தச் சபையில் சமர்ப்பித்திருக்கிற தற்காலிக பட்ஜெட்டைக் குறித்து விரிவான முறையில் விவாதிக்க வகை செய்யப்படவில்லை. அதற்குப் போதுமான அவகாசமும் கொடுக்கப்படவில்லை. ஆகவே விரிவாகப் பேசுதவற்கு அவகாசம் இல்லாவிட்டாலும் மேலெழுந்த வாரியாக சில கருத்துக்களைச் சொல்லிக்கொள்ளக்கூடிய ஒரு நிலைமையில்தான் நான் இருக்கிறேன் என்பதை தெரிவித்துக் கொள்ளுகிறேன். அதிக நேரமும் பேசுவதற்கு ஒதுக்கப்பட வில்லை. ஆகையால் சுருக்கமாக எனது கருத்துக்களைச் சொல்ல விரும்புகிறேன்.

இந்த தற்காலிகமான பட்ஜெட்டில் 100 புதிய திட்டங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. இதைத்தான் மிகவும் பிரமாதமாக விளம்பரப்படுத்தப்பட்டிருக்கிறது. இந்த 100 திட்டங்களில் உருப்படியான திட்டங்கள் ஒரு சில இருக்கின்றன என்றாலும் பல திட்டங்களை மக்கள் முன்னால் சொல்லி பிரசாரம் செய்வதற்குத்தான் பயன்படும் என்பதை நான் இங்கு குறிப்பிட விரும்புகிறேன். அங்கங்கே ஓய்வு விடுதிகளைக் கட்டுவது உள்பட பல திட்டங்கள் சேர்க்கப்பட்டிருக்கின்றன. தாலூகா ஆபீஸ் களுக்கு சில விஸ்தரிப்புத் திட்டங்கள் நடத்துவது என்று சொல்லி சில அறைகட்டுவது போன்ற திட்டங்கள்தான் இங்கே விவரிக்கப்பட்டிருக்கின்றன. இவைகள் எல்லாம் அதிகமாக வெளிப்படாமல் வயோதிகர்களுக்குக் கொடுக்கப்போகும் பென்ஷன் திட்டமும் தொழில் கல்வி பெறுகிற ஏழை மாணவர் களுக்கு கடன் உதவி அளிக்கும் திட்டமும் இப்படிப்பட்ட இரண்டொரு திட்டங்களை மாத்திரம் பொதுவாக எடுத்துச் சொல்லி நாங்கள் 100 திட்டங்களை இந்த ஆண்டில் நிறைவேற்றுகி றோம் என்பதாக மக்களிடத்தில் தவறாகப் பிரசாரம் செய்வதற்குத் தான் இந்த நிதி நிலை அறிக்கை பயன்படும் என்பது எனது கருத் தாகும். வயோதிகர்களுக்கு பென்ஷன் கொடுக்கிற விஷயம் வரவேற்கத்தக்கதுதான். அதில் இருக்கிற குறைபாடுகள் உண்மை யிலேயே நீக்கப்படவேண்டும். இந்தத் திட்டத்தை இந்த

ராஜ்யத்தில் புதியதாக நமது நிதி அமைச்சர் அவர்கள் கொண்டு வந்து நிறைவேற்றிவிடுகிறுர் என்று நினைக்க முடியாது. அவர் அப்படி நினைக்க மாட்டார் என்றும் நான் நினைக்கிறேன். ஏற் கனவே நம்முடைய தென் நாட்டைப் பொறுத்த வரையில் கேரளாவில் இந்தத் திட்டமானது அமுலில் இருக்கிறது. தொழில் கல்வி கற்கும் ஏழை மாணவர்களுக்கு கடன் உதவி கொடுக்கக் கூடிய திட்டமும்கூட ஏற்கனவே கேரளா மாகாணத்தில் அமுலுக்கு கொண்டுவரப்பட்டிருக்கிறது. இப்படிப்பட்ட திட்டங்களை அங்கே நிறைவேற்றிய பிறகு தான் நாம் இங்கே கொண்டு வந்திருக்கிறோம். அங்கே நிறைவேற்றி அங்கே கிடைத்திருக்கிற அனுபவத்தை வைத்துக்கொண்டு அதற்குப் போதிய மாறுதல்களைச் செய்ய முன் வந்திருக்கலாம். அப்படிச் செய்வதும் அவசியமானதுதான். ஆனல் அப்படிப்பட்ட மாறுதல்களைச் செய்யவில்லை. அப்படிச் செய்திருப்பின் அது அவசியமாக இருந்திருக்கும். தொழில் கல்வி கற்கிற ஏழை மாணவர்களுக்கு கடன் உதவி கொடுப்பது என்பதை ஏன் ஒரு தனிப்பட்ட மாணவர்களுக்கு மட்டும் நிறுத்திக்கொண்டார்கள் என்பது எனக்குப் புரியவில்லை. உண்மையிலேயே அதிகாரிகளுடைய மாணவர்களுக்கு மட்டும் கொண்டு வந்திருப்பது என்பது இல்லாமல் பொதுவாகவே ஏழைப் பிள்ளைகள் அவ்வளவு பேர்களுக்கும் இதை விஸ்தரித்தால் எவ்வளவோ நலமாக இருந்திருக்கும் என்பதைச் சொல்ல விரும்புகிறேன்.

விவசாயக் கல்லூரிகளை அமைக்கப் போவதாகச் சொல்லப்படு கிறது. அவற்றில் ஒவ்வொரு மாணவனும் படிக்க வாய்ப்பு ஏற்பட வேண்டும். குறிப்பாக விவசாயிகளுடைய பிள்ளைகள் அதில் படிக்க உதவி அளிக்கும் அளவில் இந்தத் திட்டத்தை விஸ்தரித் திருந்தால் எவ்வளவோ நலமாக இருந்திருக்கும். விவசாயி களுடைய பிள்ளைகளுக்கு இதை விஸ்தரிப்பதுதான் மிகவும் அவசியமாக இருக்கும். பொதுவாக இப்பொழுது நமது நாட்டில் கால்நடை வைத்தியர்கள் கிடையாது. இன்றைக்கு விவசாயக் கல்லூரிகளை அமைத்து விவசாயப் பிள்ளைகளுக்கு இந்தத் திட்டத்தை விஸ்தரித்துக் கொடுத்தால் நமக்கு வேண்டிய விவசாய நுட்பம் தெரிந்த அறிஞர்களும் கால்நடை வைத்தியர்களும் அநேகமாகக் கிடைப்பதற்கு வாய்ப்பு ஏற்படும். ஆகவே விவசாயம் தெரிந்தவர்களும், கால்நடை வைத்தியர்களும் நமக்கு அவசியம் வேண்டியதாக இருப்பதால் விவசாயிகளுடைய பிள்ளை களுக்கு இந்தத் திட்டத்தை கொடுத்தால் மிகவும் உபயோகமாக இருக்கும் என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக, வயோதிகர்களுக்கு பென்ஷன் கொடுக்கும் திட்டம். ஒருவர் அறுபது வயது வரையில் கஷ்டப் பட்டு பல துன்பங்களுக்கு ஆளாகி 65 வயது ஆன பிறகு அவருக்கு இந்தச் சலுகை கிடைக்கப் போகிறது. அதன் பிறகு ஒருக்கால் சர்க்கார் கொடுக்கப்போகிற இந்தச் சலுகையைப் பெறலாம் அதுவரையிலும் அவர் இருக்க

12th December 1961] [Sri P. S. Chinnadurai]

வேண்டும். மக்களிடத்தில் கல்லடி பட்டு பல இன்னல்களுக்கு ஆளாகி இதை வாங்கிக் கொள்வதற்கு இருக்கவேண்டும். அதற்குப் பதிலாக அங்கஹீனர்களுக்குக் கொடுக்கலாம் என்று இருக்கலாம்.

THE HON. SRI C. SUBRAMANIAM : வயோதிகர்களை கல்லால் அடிக்கக்கூடிய மனப்பான்மையுடைய சமூகம் நம்முடைய சமூகம் அல்ல என்பதை நான் தெரிவித்துக் கொள்ளுகிறேன். அவ்வளவு கொடூரமான சமூகம் அல்ல நமது சமூகம்.

SRI P. S. CHINNADURAI : இந்தச் சலுகையை குஷ்டரோகிகளுக்கும் வியாதியஸ்தர்களுக்கும் விஸ்தரிக்கலாம். சமுதாயம் அப்படி கொடூரமில்லாத சமுதாயமாக இல்லாமல் இருந்தால் அப்படிப்பட்ட சமுதாயத்திற்கு பிரதிநிதியாக வந்து அதிலும் அமைச்சர்களாக வந்து இங்கே வரவேண்டிய அவசியமே இல்லை. அப்படிப்பட்ட சமுதாயத்தின் பிரதிநிதியாகத்தான் இந்த அமைச்சர்களும் இருக்கிறார்கள். ஆகவே இந்தத் திட்டத்தை இன்னும் விரிவாக்க வேண்டியது அவசியமாக இருக்கிறது என்பதை இந்த நேரத்தில் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். அதற்குரிய ஏற்பாடுகளை இப்பொழுதே செய்வதற்கு முன்வரவேண்டும் என்பதை இந்த நேரத்தில் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

நம்முடைய ராஜ்ஜியத்தின் பொதுவான நிதி நிலையை எடுத்து ஆராயும்போது கடந்த பத்து ஆண்டு காலமாக கனம் நிதி அமைச்சர் அவர்கள் மிகத் திறம்பட இந்த நிதி நிர்வாகத்தை நடத்தியிருக்கிறார்கள் என்று பொதுப்படையாகக் கூறப்படுகின்றது. எனக்கும்கூட அதிலே கொஞ்சம் பெருமையாக இருக்கும், என்னுடைய மாவட்டவாசி நிதி அமைச்சர் அவர்கள் என்ற முறையிலே. ஆனால், உண்மையிலே பார்க்கும்போது, இந்த ராஜ்யத்தினுடைய நிதி நிர்வாகத்தை நம்முடைய நிதி அமைச்சர் அவர்களுடைய காலத்திலே எப்படி நாம் உருவாக்கியிருக்கிறோம் என்று ஆராய்கிறபோது, ராஜ்யத்தைப் பெரிய கடனிலே அமுத்தி வைத்திருக்கிறார் நிதி அமைச்சர் என்றுதான் நாம் கூறவேண்டியிருக்கிறது.

THE HON. SRI C. SUBRAMANIAM : சுதந்திராக் கட்சியின் வாதத்தை.........

SRI P. S. CHINNADURAI : சுதந்திராக் கட்சி வாதத்தை நான் கடன் வாங்கவேண்டிய அவசியமில்லை. பொதுவாக உள்ள நிலையைத்தான் சொல்கிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : எலெக்ஷன் மாறுதல் என்று நினைக்கிறேன்.

SRI P. S. CHINNADURAI : உண்மையான நிலையைத்தான் சொல்கிறேன். உண்மை நிலைமையைச் சொல்லி, 'இதுதான் உண்மை நிலை, இதை மாற்ற ஏற்பாடு செய்யுங்கள்' என்று மக்களைக் கேட்டுக்கொள்ள வேண்டுவதுதான் நிதி அமைச்சருடைய பொறுப்பு என்று நான் எதிர்பார்க்கிறேன். இராஜ்யத்திலே இன்றைக்கு மொத்தக் கடன் தொகை 200 கோடி ரூபாய்க்கு

மேலே இருக்கிறது. வருஷா வருஷம் கிட்டத்தட்ட எட்டு கோடி ரூபாய் வரை வட்டி கட்டவேண்டிய நிலைமையில் இருக்கிறோம். புதிய திட்டங்கள் ஏதாவது போடவேண்டுமென்றால் என்ன செய்கிறோம்? வருஷா வருஷம் கடனை நாடி ஓடிக்கொண்டிருக்கிறோம். ஒவ்வொரு ஆண்டிலும் நிதிப் பற்றாக்குறை ஏற்படுவதும், அதைச் சமாளிப்பதற்காகக் கடன் வாங்குவதற்கு அரசாங்கம் ஆலோசனை செய்து செயல்படுவதும் மிகவும் வருந்தத்தக்க அம்சம் என்று நான் சொல்ல விரும்புகிறேன்.

இன்றைக்கிருக்கும் நிதி நிலைமை மிகப் பயங்கரமாக இருக்கிறது. ஏதோ சொல்லலாம், கடன் வாங்கினாலும் அதை முதலீடு செய்திருக்கிறோம் என்று. சிமெண்ட் ரோடு போட்டால், அதை முதலீடு என்று நினைத்துக்கொண்டு நாம் திருப்தியடைந்துவிட முடியாது. பிரும்மாண்டமான கட்டிடங்களைக் கட்டி, அவற்றுக்காக நாம் செலவழித்திருக்கிறோம் என்றால், அந்தக் கட்டிடங்களை உடனே நாம் விற்றுக் கடனைக் கட்ட முடியாது. கடன் கொடுத்தவர்கள் கடனைத் திருப்பிக் கேட்கின்றபோது அவர்களுக்குப் பணமாகக் கொடுக்கவேண்டும். வட்டியையும் சேர்த்துக் கடனைத் திருப்பிக் கொடுக்க வேண்டும். சிமெண்ட் பாதைகளை விற்றோ, மாளிகைகளை விற்றோ நம்மால் கடனை அடைக்க முடியாது. ஆகையால், முதலீடுகள் செய்திருக்கிறோம் என்றுகூட நாம் திருப்தி அடைய முடியாத நிலவரத்தைப் பார்க்கிறோம். என்னுடைய அபிப்பிராயத்தில், நிதி நிலைமையைச் சரிப்படுத்த வருமானத்திற்கு ஏதாவது வகை செய்திருக்க வேண்டும் என்றுதான் நான் நினைக்கிறேன். வருமானத்திற்கான வகை செய்வதற்குக் கடந்த பத்து ஆண்டுக் காலத்திலே சரியான முறையில் திட்டங்கள் போடப்படவில்லை என்பதையும் நான் இங்கே எடுத்துக்கூற விரும்புகிறேன். ஒவ்வொரு ஆண்டிலும் சிறிது சிறிதாக வருமானத்தைப் பெருக்க ஏற்பாடு செய்யப்பட்டிருக்குமானால் மிக அனுகூலமான சூழ்நிலை ஏற்பட்டிருக்கும், இன்றைக்கு ராஜ்யத்தின் நிதி நிலைமை பாராட்டத்தக்கதாக இருந்திருக்கும் என்றுதான் நான் இந்த நேரத்திலே சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

நம் ராஜ்யத்திலே பொதுவாக ஏழை மக்களுக்கு ஊக்கம் அளிக்கும் முறையில் காரியங்கள் செய்யப்பட்டிருந்தால்கூட, கடன்களை அடைப்பதற்கு அவர்களுடைய உழைப்பை மிகத் தாராளமாக நாம் எதிர்பார்க்க முடியும். உதாரணமாக, ஹரிஜனங்களுக்கு உதவி செய்வதை எடுத்துக் கொள்வோம். இருநூறு கோடி ரூபாய்க்குமேல் கடன் பட்டிருந்தாலும், ஹரிஜனங்களுக்காகப் பத்து கோடி ரூபாய் கடன் பட்டிருந்தால் உண்மையிலேயே அவர்கள் சமூகத்தில் நல்ல ஏற்றமான நிலைமையிலே இருந்திருப்பார்கள், அவர்களுக்குப் புதிய ஊக்கம் பிறந்திருக்கும், அவர்கள் உழைப்பின் பலனை இந்தக் கடனையும் நாம் சமாளிக்க முடியும் என்ற ஒரு அதிருஷ்டவசமான நிலைமையிலே நம்முடைய ராஜ்யத்தைக் கொண்டுவர முடியும். நாம் இவ்வளவு கடன் பட்டும்கூட, ஏழை ஹரிஜனங்கள் நம் ராஜ்யத்தில் பத்து

12th December 1961] [Sri P. S. Chinnadurai]

ஆண்டுகளுக்கு முன்னல் என்ன நிலைமையில் இருந்தார்களோ அதே நிலைமையில்தான் இன்னும் இருக்கிருர்கள் என்பதைப் பார்க்கிறோம். இந்த நிலைமையில் அவர்களை நாம் விட்டு வைப்பது துர்பாக்கியவசமானதுதான். ஹரிஜனங்களுக்குப் போதிய அளவு வீடு கட்டிக் கொடுப்பதற்காகக் கடன் பட்டிருந்தாலும்கூட அவர் களுக்கு நல்ல ஊக்கம் ஏற்பட்டிருக்க முடியும். ஆனல், அதை நாம் ஏனே கொஞ்சமும் செய்யவில்லை.

சர்க்காருடைய நிர்வாக இயந்திரம் சரிவர செயல்படுவதற்கு இன்னும் கொஞ்சம் அதிகமான ஊக்கத்தை சர்க்கார் உத்தியோ கஸ்தர்களுக்கு நாம் கொடுக்க முயன்றிருக்கிறோமா என்று பார்த் தால், இராஜ்ய சர்க்கார் ஊழியர்களுடைய சம்பள விகிதத்திற்கும் மத்திய சர்க்கார் ஊழியர்களுடைய சம்பள விகிதத்திற்கும் உள்ள ஏற்றத்தாழ்வு இன்னும் அப்படியே வைக்கப்பட்டிருக்கிறது. மத்திய சர்க்கார் சிப்பந்திகளுக்கும் ராஜ்ய சர்க்கார் சிப்பந்திகளுக்கும் மத்தியிலே சம்பள விகிதத்தில் இருக்கும் ஏற்றத்தாழ்வைப் போக்குவதற்கு நாம் இதுவரை எடுத்துக்கொண்ட நடவடிக்கைகள் ஒன்றும் பாராட்டத்தக்கதாக இல்லை. இன்றைக்கும் ஏற்றத்தாழ்வுகள் இருக்கத்தான் செய்கின் றன. செக்ரடேரியட் சிப்பந்திகளுக்கும் மற்ற சிப்பந்திகளுக்கும் நம் ராஜ்யத்திலேயே சம்பள விகிதத்தில் ஏற்றத்தாழ்வுகள் இருக் கின்றன. இந்த நிலைமையைப் போக்க நம்முடைய ராஜ்ய சர்க்கார் ஒரு நல்ல கொள்கையை அனுசரிக்கவில்லை என்று நான் வருத்தத் தோடு குறிப்பிடவேண்டியிருக்கிறது.

பஞ்சாயத்துக்களில் இப்பொழுது தலையாரிகள் வரி வசூல் செய்வதற்கு ஒத்தாசையாக இருக்கவேண்டுமென்று கருது கிறோம். அப்படித் தலையாரிகள் வரி வசூல் செய்வதற்காக அவர் களுக்கு உதவித் தொகைக் கொடுக்கவும் தீர்மானித்திருக்கிறோம். நான்கு தலையாரிகளில் ஒரு தலையாரிக்கு மூன்று ரூபாய் கொடுப் பது என்று முடிவு செய்திருக்கிறோம். ஒரு தலையாரி பெறும் இந்த மூன்று ரூபாயை நான்கு பேர்களும் பங்கிட்டுக்கொள்ள வேண்டுமா, ஒருவரே எடுத்துக்கொள்ள வேண்டுமா என்பதைப் பற்றி நாம் கொஞ்சங்கூடச் சிந்தித்ததாகத் தெரியவில்லை. நான்கு பேர்களும் இதைப் பங்கிட்டுக்கொள்ளவேண்டுமென்ருல், குறிப்பிடுவதற்கே முடியாத ஒரு மோசமான தொகை இது என்று நான் சொல்லத் தேவையில்லை. ஆகையால், ஏதாவது உதவி செய்வ தென்ருல், தலையாரிகள் எல்லோருக்கும் கிடைக்கும்படியான நிலைமையில் வைக்கவேண்டுமென்று நான் தெரிவித்துக் கொள்கின்றேன்.

கிராம அதிகாரிகளுடைய பொறுப்புக்கள் மிக அதிகரித்திருக் கின்றன. அவர்களுடைய பொறுப்புக்கள் அதிகரித்திருப்பதற் கேற்ற அளவு அவர்களுடைய ஊதிய விகிதம் திருத்தி யமைக்கப்படவில்லை என்பதையும் நாம் பார்க்கிறோம். இப்படிப் பல விஷயங்களை நான் சொல்லிக்கொண்டே போகமுடியும். சர்க்கார் உத்தியோகஸ்தர்களுக்கும் சரியான முறையில் நல்ல

ஊதியத்தைக் கொடுக்க முன்வரவில்லை. அவர்களிடமிருந்து வேலைகளை மாத்திரம் அதிகமாக எதிர்பார்க்கிறோம். செக்ர டேரியட் சிப்பந்திகளுக்கு ஒரு வகை சம்பளம், மற்ற சிப்பந்தி களுக்கு இன்னொரு வகை சம்பளம் என்று இருக்கும்போது சம்பளத்திற்குப் பதிலாக வேறு வகையான ஊதியங்கள் எதிர் பார்க்கும் நிலைமை உண்டாகிவிடுகிறது. ஏற்கனவே இதே சபையில் குறிப்பிட்டிருக்கிறேன், நம்முடைய ராஜ்யத்தில் அதிக மாகச் சிபார்சு முறையில்தான் காரியங்கள் நடைபெறுகின்றன என்று. அந்த ஒரு நிலைமைக்கு நாம் ஊக்கம் கொடுக்கின்றவர் களாகத்தான் சம்பள நிலைமையையும் வைத்திருக்கிறோமோ என்று நான் ஐயப்படுகிறேன். ஆகவே, அதை மாற்றியமைக்க ஏற்பாடு செய்வது மிக அவசியம் என்று நான் குறிப்பிட விரும்பு கிறேன்.

நம்முடைய நிதி நிலைமையைப் பொதுப்படையாக வைத்துப் பார்க்கும்போது, நிதி அமைச்சர் அவர்கள் கடன் அமைச்சராக இருக்கிறார். நல்லமுறையில் கடன்கள் வாங்குவதற்கு முயன் றிருக்கிறார். இனிமேலும் கடன் வாங்கவேண்டுமென்பதற்கான ஆலோசனைகளையும் சொல்லியிருக்கிறார். அடுத்த ஆண்டில் இரண்டு கோடி ரூபாய் மின்சார போர்டும், அரசாங்கம் ரூ. 10.5 கோடியும் கடன் வாங்கலாம் என்று ஆலோசனை சொல்லியிருக் கிறார். அடுத்த ஆண்டில் அவர் இங்கே இருந்து நிதி நிர்வாகப் பொறுப்பை வகிக்காது போனாலும் வர இருக்கும் அமைச்சர்கள் கடன் வாங்குவதற்கான ஆலோசனைகளை ரொம்பத் தாராளமாகச் சொல்லிவிட்டுப் போக இருக்கிறார்கள். ஆகையால், நிதி அமைச் சர் அவர்களைக் கடன் வாங்குவதிலே இருக்கும் திறமைக்காகப் பாராட்டலாமே தவிர, மற்ற வகையிலே பாராட்டுவதற்கு இயலாத நிலைமையில் இருக்கிறேன் என்று நான் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

புது வரிகள் சம்பந்தமாக மூடு மந்திரமாக பட்ஜெட்டிலே ஒன்றுமே குறிப்பிடாமல் விட்டிருக்கிறார். ஒருக்கால் அந்தப் பொறுப்பை பின்னால் வருகின்றவர்கள் ஏற்றுக்கொள்ளட்டும் என்று விட்டிருக்கிறார்களோ என்னவோ தெரியாது. கனம் விவசாய அமைச்சர் அவர்கள் சமீபத்தில் ஒரு கூட்டத்தில் பேசிய போது, மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் புது வரிகள் 35 கோடி ரூபாய் வரை போடவேண்டிய அவசியம் இருக்கலாம் என்று சொன்னார்கள். உண்மையிலேயே அவர்கள் அப்படிக் கூறியது அவருடைய துணிவைக் காட்டுகிறது. அதை நான் பாராட்டுகிறேன். அப்படித்தான் சொல்லவேண்டும். எங்கே புது வரிகள் போடவேண்டிய அவசியம் இருக்கிறது, இன்ன இன்ன முறையில் அந்த வரிகள் வரக்கூடும் என்று மக்களுக்கு முன்ன தாக எச்சரிக்கை செய்வது நிதி அமைச்சருடைய பொறுப்பு தான் என்று நான் இங்கே குறிப்பிட விரும்புகிறேன். அப்படிப் புது வரிகள் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் வருவதாக இருந்தால், அம்மாதிரி வரக்கூடிய வரிகள் ஏழை எளியவர்கள்,

12th December 1961] [Sri P. S. Chinnadurai]

உழவர்கள், மற்றும் சாமான்ய நிலையிலும் நடுத்தர நிலையில் இருப்பவர்களையும் பாதிக்காத வகையில் இருக்கவேண்டும். எங்கே பணம் குவிகின்றதோ அங்கிருந்து வரியை எடுத்துக்கொள்ளத் தக்க வகையில் புது வரிகள் அமையவேண்டும், சாமான்ய ஏழைகளைப் பாதிக்கக்கூடிய அளவில் ஏற்படக்கூடாது என்ற கவலை நாட்டு மக்களுக்கு நிச்சயமாக இருக்கிறது. நிதி அமைச்சரிடம் இயல்பாகவே அதைத்தான் மக்கள் எதிர்பார்க்கிறார்கள். அதைப் பற்றி இதில் குறிப்பிடாமல் விட்டது வருந்தத்தக்கது.

புதியவரிகள் 1,600 கோடி ரூபாய் வரை தேசம் முழுதுக்குமாக விதிக்கப்படும்போது, நம்முடைய ராஜ்யத்திற்கும் அதை வசூலிக்கக்கூடிய பொறுப்பு வரும். அப்படி வரும்போது அந்த வரி ஏழை மக்களைப் பாதிக்காத முறையில் அமையவேண்டுமென்ற கவலையை நிதி அமைச்சர் அவர்கள் கவனிக்கவேண்டும். அவர்கள் இந்த சர்க்காரில் இருந்தாலும், வேறு இடத்திற்குப் போவதாக இருந்தாலும் உண்மையிலேயே நாட்டு நலனில் அக்கறை இருப்பதால், வரி விதிப்பைக் குறித்து வெளிப்படையாகச் சொல்லியிருக்கவேண்டுமென்று நான் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

நம்முடைய ராஜ்யத்தில் உர விநியோகம் சம்பந்தமாக இரண்டொரு வார்த்தைகள் சொல்லி என்னுடைய உரையை முடித்துக்கொள்கின்றேன். உர விநியோகத்தில் கடந்த பத்து ஆண்டுக் காலத்தில் நாம் எதிர்பார்த்த, அல்லது நாம் விரும்பிய அளவுக்கு விவசாயிகளுக்கு உதவி செய்ய முடியவில்லை. நாம் ஏதோ திட்டம் போட்டோம். நாம் போட்ட திட்டமே தேவையில் கால் பங்கு தான். அந்தக் கால் பங்கைக்கூட நம்மால் சரிவர வாங்கி விநியோகிக்க முடியவில்லை. 1½ லட்சம் டன் ரசாயன உரம் வேண்டும் என்று திட்டம் போட்டும், நமக்குக் கிடைத்தது 80 ஆயிரம் அல்லது 90 ஆயிரம் டன் தான். நாம் நினைத்ததைக்கூட நம்மால் சாதிக்க முடியவில்லை. நினைத்ததே குறைவு. இந்த நிலைமையைப் போக்குவதற்குச் சர்க்கார் வருகிற ஆண்டுகளிலாவது சீரான நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ள வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன். தங்கம் வாங்கிவிடலாம், வைரம் வாங்கிவிடலாம் பணம் இருந்தால். ஆனால், பணம் இருந்தாலும் அதைக் கொண்டு கடை வீதியில் ரசாயன உரம் வாங்க முடியாத கேவலமான நிலைமை இருக்கிறது. தங்கத்தையும் வைரத்தையும் காட்டிலும் அதிக முக்கியத்துவம் உள்ளதாக ரசாயன உரம் ஆகிவிட்டது. விவசாயிகள் படும் அல்லல் கொஞ்ச நஞ்சமல்ல. ஏதோ அவ்வப்போதுள்ள நிலைமையை விவசாய அமைச்சரிடத்தில் சொல்வதால் ஆங்காங்கு சில இடங்களில் சீரான முறையில் அவர்கள் உதவி செய்திருக்கிறார்கள். அதற்காக அவருக்கு நன்றி தெரிவித்துக்கொள்கிறேன். இருந்தாலும், பொதுவாக ராஜ்யத்தில் இருக்கும் நிலைமை அவ்வளவு ஊக்கம் அளிப்பதாக இல்லை. விவசாயிகளுக்கு ஊக்கம் கொடுத்து, உணவு உற்பத்தியைப் பெருக்கவேண்டுமென்றும் உணவுப் பற்றாக்

[Sri P. S. Chinnadurai] [12th December 1961

குறையைப் போக்கவேண்டுமென்றும் நாமெல்லோரும் ஆசைப் படுகிறோம். அது கட்சிப் பிரச்சனை அல்ல. அரசியல் பிரச்சனை அல்ல. இவைகளுக்கெல்லாம் அப்பாற்பட்ட பொதுப் பிரச்சனை இது என்பதை நாம் உண்மையாக நம்புகிறோம். ஆகவேதான் வலியுறுத்திச் சொல்கிறேன். ரசாயன உரம் பெரும் அளவில் கிடைக்கத்தக்க ஏற்பாடு செய்யவேண்டும். அப்படிக் கிடைக்கின்ற உரம் சுலபமாக விவசாயிகளுக்குக் கிடைக்கவேண்டும். சிரமம் இல்லாமல் கிடைக்க வகை செய்யவேண்டும். இன்றைக்கு விவசாயிகள் படும் தொல்லை கொஞ்சம் நஞ்சமல்ல. இவைகளை நாங்கள் சொல்லித்தான் தெரிந்துகொள்ள வேண்டும் என்ப தல்ல. விவசாயிகளைக் கூட்டி, விவசாய அமைச்சர், அவர்களைக் கேட்டால் சட்டசபை அங்கத்தினர்களைக் காட்டிலும் நேரடியாக விவசாயிகளே இந்தப் பிரச்னையைக் குறித்து மிகத் தெளிவாக எடுத்துச் சொல்வார்கள். மிகவும் அருமையாக எடுத்து அவர்களால் விளக்க முடியும். இன்னும் நீர்ப்பாசன விஷயத்தில் நல்ல அக்கறை எடுத்துக்கொள்ள வேண்டும். சிறிய நீர்ப்பாசனத் திட்டங்களிலும் கவனம் செலுத்த வேண்டும். குளங்களுக்குத் தூர் எடுத்தல், ஆழப்படுத்துதல், சிறு சிறு ஆறுகளில் மழை காலங்களில் வரும் தண்ணீரை மடக்கித் தேக்கி நீர்பாசனத்திற்கு பயன்படுத்துதல் ஆகிய விஷயங்களில் ஊக்கம் காட்டவேண்டும். அப்படி ஊக்கம் காட்டுகின்ற வேளை யில், பவானி, நொய்யல் போன்ற பல புதிய திட்டங்களையும் சேர்க்க முடியும். அதன்மூலம் நீர்ப்பாசனத்திற்குத் தேவையான தண்ணீரைப் பெற முடியும் என்று சொல்லிக்கொண்டு பொது வாக இந்த நிதி நிலை அறிக்கையைப் பொறுத்த வரையில் நிதி அமைச்சர் அவர்களைப் பாராட்டுவதோடு நிதி இலாகா அதிகாரி களையும் பாராட்டவேண்டும் என்று நான் நினைக்கிறேன். கடன் வாங்கியோ எப்படியோ அவர்கள் சமாளித்திருக்கிறார்கள். நமது ராஜ்யத்தில் மாத்திரம் அல்ல. எல்லா ராஜ்யங்களிலும் இதே போன்ற நிலைமைதான் இருக்கிறது. பிற ராஜ்யங்களைக் காட்டிலும் நம் ராஜ்யத்தில் இந்த நிர்வாகம் நல்லதாக இருக் கிறது. நல்ல நிர்வாகம் என்று சொல்கிறபோது நிதி இலாகா நிர்வாகத்தைப் பொறுத்துச் சொல்கிறேன். புதிது புதிதாகக் கடன் வாங்கி வருங்கால வம்சா வழியினருக்கு ஒரு பளுவைச் சுமத்தியிருந்தாலும்கூட இப்போதைக்கு வரவுசெலவைச் சரிக் கட்டி, திறம்பட மூடி மறைத்திருக்கும் திறமையை அந்த அளவுக்குப் பாராட்டத்தான் வேண்டும். அந்த சாமர்த்தியத்தை மெச்சி இதோடு என் வார்த்தைகளை முடித்துக்கொள்கிறேன்.

*Sri K. R. VISWANATHAN: கனம் அவைத் தலைவர் அவர்களே, கனம் நிதி அமைச்சர் அவர்கள் 1962-63-ஆம் ஆண்டுக் குச் சமர்ப்பித்திருக்கிற இடைக்கால நிதி நிலை அறிக்கையைப் பற்றிக் கூறும்போது—இந்த இடைக்கால நிதி நிலை அறிக்கையை இறுதியாகச் சமர்ப்பித்திருக்கிற கனம் நிதி அமைச்சர் அவர்களைப் பாராட்டாமல் இருக்க முடியாது. நிதி அமைச்சர் அவர்களால் இந்தச் சபையில் இறுதியாகச் சமர்ப்பிக்கப்பட்டிருக்கிற நிதிநிலை

12th December 1961] [Sri K. R. Viswanathan]

அறிக்கை இது என்று சொன்னாலும் அவர்கள் மத்திய சர்க்காருக்குச் செல்லலாம், பிறகு இந்த மாநிலத்திற்கும் வரலாம், இதைப்போல இன்னும் எத்தனையோ நிதி நிலை அறிக்கைகளை அவர்கள் சமர்ப்பிக்கக்கூடும் என்று நான் நம்புகிறேன். ஆகவே இன்றையதினம் இந்த நிதி நிலை அறிக்கையையொட்டிப் பேசும் போது அவர்கள் இதுவரை தாங்கி நின்ற கல்வித்துறை இருக்கிறதே அதைப்பற்றி புகழாமல் இருக்க முடியாது. 1951-52-ஆம் ஆண்டிலே கன்னடம், தெலுங்கு, மலையாளம், தமிழ் ஆகிய நான்கு மொழி பேசுபவர்களும் ஒன்றுகச் சேர்ந்த பெரிய ராஜ்யமாக நம்முடைய மாநிலம் இருந்தபோது கல்விக்காகப் பத்து கோடி ரூபாய்தான் செலவழிக்கப்பட்டது. ஆனல் மொழி வழியாக ராஜ்யங்கள் பிரிந்து இன்று தமிழ்பேசுபவர்கள் மட்டும் தனித்து இருக்கக்கூடிய தமிழ்நாட்டு அரசாங்க பட்ஜெட்டில் கல்விக்காக 23 கோடி ரூபாய் செலவழிக்கிறோம் என்றால் இது மிகவும் பெருமைப்படத்தக்கதாகும். அந்த அளவுக்கு நம்முடைய கல்வித்துறை விரிவு அடைந்திருக்கிறது. ஆசிரியர்களுடைய நிலைமை ஓரளவு உயர்ந்திருக்கிறது என்பதையும் யாரும் மறுக்க முடியாது. இன்னும் அவர்கள் நிலைமை உயரவேண்டும். ஆனாலும் இன்றையதினம் பத்து ஆண்டு காலத்திற்கு முன் இருந்ததைவிட மிக உயர்ந்த நிலையில் அவர்கள் இருக்கிறார்கள் என்பதை எண்ணும்போது நிதி அமைச்சர் அவர்களைப் பாராட்டாமல் இருக்க முடியாது. அதுபோலவே மாணவர்களுடைய நிலையை எடுத்துக்கொண்டாலும் இப்போது எண்ணிக்கை மிக அதிகமாக இருக்கிறது. கட்டாயக் கல்வியைப் புகுத்தியிருப்பதும், இலவசக் கல்வி அளிப்பதும், இலவச மதிய உணவு அளிப்பதும் மிகமிகச் சிறப்பான திட்டங்கள். மதிய உணவு திட்டத்தை இன்றைக்கு இந்திய அரசாங்கமும் ஏற்றுக்கொண்டு இதை எல்லா மாநிலங்களுக்கும் பரப்பவேண்டும் என்று நினைக்கிற போது நம் மாநிலம் பிற மாநிலங்களுக்கு எல்லாம் வழிகாட்டியாக இருக்கிறது என்று இரும்பூதெய்தவேண்டியிருக்கிறது என்பதைச் சொல்ல ஆசைப்படுகிறேன்.

அதுமாத்திரம் அல்ல. தமிழ்மொழிக்குக் கடந்த பத்து ஆண்டு காலங்களிலே கொடுத்திருக்கக்கூடிய ஏற்றம் இருக்கிறதே அதை மறுக்க முடியாது. எல்லா அலுவலகங்களும் தமிழிலேயே அலுவல் நடக்கவேண்டுமென்ற ஒரு நிலைமையை உண்டாக்காவிட்டாலும் தமிழ் நிர்வாக மொழி என்று ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளது. அதுமாத்திரம் இல்லாமல் கல்லூரிகளில் தமிழ் மொழியிலேயே போதனை நடத்தவும் ஏற்பாடாகியிருக்கிறது. இன்னும் சில நாட்களில் அதுவும் அடுத்த ஐந்தாண்டுத் திட்டத்திலே எங்கே பார்த்தாலும் தமிழ்மொழி முழங்கும் என்ற நம்பிக்கை மக்களிடத்தில் ஏற்பட்டுள்ளது என்பதை நினைக்கும் போது நமது கல்வி அமைச்சரின் சாதனை புகழ்ந்து பாராட்டத் தக்கது என்று சொல்ல ஆசைப்படுகிறேன்.

[Sri K. R. Viswanathan] [12th December 1961

இந்தச் சமயத்தில் நமது கல்வி இலாகா இருக்கிறதே அதைப் பற்றியும் சில வார்த்தைகள் சொல்லிக்கொள்ள ஆசைப் படுகிறேன். இப்போது கல்வி இலாகாவுக்குத் தலைவர் ஒருவராக இருக்கிற காரணத்தினால் பள்ளிச் சீரமைப்பு, சீருடைய வழங்கும் விழா முதலியவற்றுக்கும், இன்னும் சிறப்புக்கூட்டங்களுக்கும் அவர் ஊர்தோறும் சென்று கலந்துகொள்ளவேண்டிய நிலைமை இருக்கிறது. அவர் அப்படிப் போய்விடுவதனால் தலைமை அலுவலகத்தில் அவர் பார்க்கவேண்டிய காரியங்கள் எல்லாம் அப்படியே தாமதப்பட்டுவிடுகின்றன. ஆகையால் நான் அரசாங்கத்திற்கு எடுத்துக் கூறிக்கொள்ள விரும்புவது ஒரு தலைவருக்குப் பதிலாக கல்வி இலாகாவுக்கு மட்டும் இன்னொரு வரையும்—ஜாயின்ட் டைரக்டர் என்று கூட்டாகப் போட்டு பொறுப்பைக்கொடுத்தால் ஒருவர் வெளிநாடு உள்நாட்டுச் சுற்றுப்பயணம் முதலியவற்றுக்கு சென்றாலும், இன்னொருவர் காரியாலயத்தில் உட்கார்ந்து காரியங்கள் தாமதப்படாமல் கவனித்துக்கொள்வதற்கு உதவியாக இருக்கும். இன்றைக்கு கல்வி இலாகாவைப் பொறுத்த வரையில் நிர்வாகத் திறன் குறைந்து வருவதைப் பார்க்கிறோம். அவ்விலாகாவுக்கு எழுது கின்ற கடிதங்களுக்கு இரண்டு மூன்று ஆண்டுகள் ஆனாலும் கூடப் பதில் கிடைப்பது இல்லை. ஒரு வேளை அவை புறக்கணிக்கப்பட்டு விடுகின்றனவோ என்னவோ. செய்தி தருவது கிடையாது.

உதாரணமாக மற்றொரு விஷயத்தையும் எடுத்துக்கூற விரும்புகிறேன். மத்திய சர்க்காரிலே இருந்து ஏழை இளம் குழந்தைகளுக்கு 'பப்ளிக் ஸ்கூலில்' சேர்ந்து படிப்பதற்கு உதவி வழங்குவதற்காக ஒரு போட்டி தேர்வு நடத்தி அதில் முதன்மை யாக வருகிறவர்களுக்கு அந்த உதவியை வழங்குவது என்று தீர்மானம் செய்தார்கள். இந்தச் சுற்றறிக்கை மற்ற மாகாணங் களில் சரியான முறையில் விளம்பரப்படுத்தப்பட்டதனால் அதிக மான இளம் குழந்தைகள் அவ்வித உதவியைப் பயன்படுத்திக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் நம்முடைய மாநிலத்திலே அவ் வறிக்கை சரியான முறையில் விளம்பரப்படுத்தப்படாமையினால் ஒருசில மாணவர்களே இவ்வாண்டு பயன்படுத்திக்கொள்ள முடிந்தது. நம்முடைய இலாகா தலைவர் அவ்விஷயத்தில் சரியாகக் கவனம் செலுத்தவில்லை. ஆகவே இரண்டு தலைவர்களாகப் போட்டு இரண்டு பேர்களிடத்திலும் பொறுப்பைச் சுமத்தி யிருந்தால் ஒருவர் கூட்டங்களுக்கும், விழாக்களுக்கும் செல்கிற நேரத்தில் மற்றொருவர் அலுவலக காரியங்களை நன்றாகத் திறம் படப் பார்க்கவாவது முடியும்.

அதுமட்டுமல்ல. இன்றைக்கு கல்வி இலாகாவில் பல அலு வலர்கள் இருக்கிறார்கள். அவர்கள் மேலே குற்றம் சாட்டப் படுகிறது. அந்தக் குற்றங்களைச் சுமத்தி இரண்டு மூன்று ஆண்டு களாக அவர்கள் 'சஸ்பென்ஷனில்' இருக்கிறார்கள். வேலை செய்யாமல் குறைத்த சம்பளத்தில் அவர்கள் இருந்துகொண்டிருக் கிறார்கள். அந்தக் குற்றச்சாட்டுகள் இன்னமும் விசாரிக்கப் பட்டுத் தீர்க்கப்படாமலேயே இருக்கின்றன.

12th December 1961] [Sri K. R. Viswanathan]

10–00 a.m.

அவர்கள் செய்கிற விண்ணப்பங்கள் உடனடியாக கவனிக்கப் படவில்லையென்றுதான் சொல்லவேண்டியிருக்கிறது. அதுமட்டு மல்ல. டெப்டி இன்ஸ்பெக்டர்கள் இருக்கிறார்கள். இன்று பல இடங்கள் காலியாகயிருக்கின்றன. பல உயர்தர பதவிகள் காலியாக இருக்கின்றன. கீழ் பதவியில் இருப்பவர்கள், தகுதி யுடையவர்களாக இருந்தாலும் அவர்களுக்கு உயர் பதவிகள் கொடுப்பதற்கு காலமில்லாது, அதைக் கவனிக்க முடியாதிருக்கிற நிலை காரணமாக உயர் பதவிகள் காலியாக வைக்கப்பட்டிருக் கின்றன. இந்நிலையைக் கவனிக்கும்போது இந்த இலாகாவின் தலைவரின் கவனம் வேறு இடங்களுக்கு செலுத்தப்படுவதால் இவர்களால் எல்லாவற்றையும் கவனிக்க முடியவில்லை. ஆகவே ஒரு கூட்டுத் தலைவரை ஏற்படுத்தி அவர்கள் நிர்வாகத்தை மட்டும் கவனித்துக் கொள்ள வேண்டியது, இதர விஷயங்களை கவனிக்க இப்பொழுதுள்ள தலைவரோ அல்லது வேறு தலைவரிடமோ ஒப்பு விக்கப்படவேண்டும்.

அடுத்தபடியாக, கதர் இலாகா என்றதொரு இலாகா அரசாங் கத்தோடு சேர்த்து வைக்கப்பட்டிருந்தது. இன்று ஒரு ஆண்டுக்கு மேலாக அவ்விலாகா அரசாங்க மேற்பார்வை யிலிருந்து தனி ஒரு குழுவாக, காதி போர்ட் என்று பிரிந்து நிற்கிறது. கதர் இலாகாவில் இருந்த உத்தியோகஸ்தர்கள் என்ன நினைத்துக்கொண்டிருந்தார்கள் என்றால், நாம் அரசாங்க உத்தி யோகஸ்தர்கள், அரசாங்க உத்தியோகஸ்தர்களுக்குள்ள சலுகை கள் நமக்கு வழங்கப்படும் என்று நினைத்துக் கொண்டிருந்தவர் களுக்கு இடையில் ஒரு குறை ஏற்பட்டது. கதர் போர்ட் என்ற போர்டின்கீழ் அவர்கள் விலக்கப்பட்டார்கள். இன்று முடிவான தொரு நிலைமையில் அவர்களது நிலை இல்லை. அவர்கள் மிகவும் இரக்கப்படத் தக்க நிலையில் இருக்கிறார்கள், இன்று. அரசாங்கத் தில் இருந்தபோது அவர்களுக்கு கொடுக்கப்பட்ட சலுகைகள் காதி போர்டிலும் கொடுக்கப்படுமென்ற உறுதி அவர்களுக்கு கொடுத்தல் வேண்டும். அல்லது அவர்களை அரசாங்க அலுவலர் களாக மற்ற இலாகாக்களில் எடுத்துக் கொள்ளக்கூடிய ஒரு சலுகையாவது அவர்களுக்கு வழங்கப்படவேண்டும். இது இரண்டும் இல்லாத நிலையில், குழப்பமானதொரு நிலையில் கவலை தரும் நிலையில் அவர்களது நிலையிருக்கிறது. இதைக் கவனித்து ஆவன செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, பிற்பட்ட வகுப்பினர் குறித்து அரசாங்கம் செய்திருக்கிற ஏற்பாட்டைக் கவனிக்கிறபோது அவர்களின் கவனம் மேற்போக்காகவே இருக்கிறதே தவிர உள்ளூர வேண்டிய கவனம் செலுத்தப்படவில்லை என்றுதான் நான் கூற ஆசைப் படுகிறேன். மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் "other Backward Class"- க்காக 40 லட்சம் ரூபாய் ஒதுக்கி வைத்திருக் கிறார்கள். 1962-63-க்கு மட்டும் கணக்கிட்டுப் பார்க்கிறபோது 10 லட்சம் ரூபாய் ஒதுக்கியிருக்கிறார்கள். ஐந்தாண்டுகளுக்கு 40 லட்சம் ரூபாய் ஒதுக்கியிருக்கிறார்கள். ஆனால் ஒரு ஆண்டுக்கு 10 லட்சம் ஒதுக்கியிருக்கிறார்கள். ஆகவே 40 லட்சம் மூன்றாவது

[Sri K. R. Viswanathan] [12th December 1961]

ஐந்தாண்டுத் திட்ட காலத்திற்கு போதாது, என்ற நிலைமை தெரிந்திருந்தும் அதிகப்படியான பணம் ஒதுக்குவதற்கு அவர்கள் மனம் தாராளப்படவில்லை. அரைகுறையாக ஒதுக்கியிருக்கிறார்கள் என்றுதான் சொல்ல வேண்டியிருக்கிறது. பிற்பட்ட வகுப்பைச் சேர்ந்த மாணவர்கள் இன்று ஏராளமாக படிக்க முன்வருகிறார்கள், கெட்டிக்காரர்களாக படிக்கிறார்கள். ஆனால் அவர்கள் ஏழ்மை நிலையில் இருப்பதால் அவர்கள் தங்கள் படிப்பை முடிக்க முடியாது மிகவும் துன்பப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். ஆகவே அவர்களுக்கு கல்விச் சலுகையில் அதிகப்படியான பணம் ஒதுக்கி உதவி செய்யவேண்டுமென கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக, மிகவும் பின்தங்கிய வகுப்பினர், **'most Backward Class'** என்றதொரு பகுதியை பிரித்து வைத்திருக்கிறார்கள் நம் மாநிலத்தில் மட்டும். அவர்களுக்கு அதிகப்படியான சலுகை காட்டவேண்டுமென்பது அரசாங்கத்தின் நோக்கம். நோக்கம், விருப்பம் எப்படியிருந்தாலும் வேண்டிய தொகை அவர்களுக்காக ஒதுக்கப்படவில்லை என்பதைக் கவனிக்கும்போது வருத்தப்பட வேண்டிய நிலையில்தான் இருக்கிறோம்.

அடுத்தபடியாக, கல்விச் சலுகை பொறுத்த மட்டில், பிற்பட்ட வகுப்பினரைச் சேர்ந்தவர்களின் பெற்றோர்கள் வருவாய் ஆண்டு ஒன்றுக்கு 1,200 ரூபாய்க்கு உள்பட்டிருக்கவேண்டுமென்று ஒரு திட்டம் எந்தக் காலத்திலேயோ இருந்தது. அதை மாற்றி அந்த வருவாயை குறைந்தது 3,000-க்கு மேற்படாதிருந்தால் தேவலை என்று கேட்டுக் கொண்டிருந்தும் அது மாற்றியமைக்கப் படாதிருந்து கொண்டிருப்பது வருந்தத் தக்கது. சமீபத்தில் ஆசிரியர்களுக்கும், கெஸட் பதிவில்லாத உத்தியோகஸ்தர்களுக்கும் மாதம் வருவாய் 300, 400 இருந்தாலும் அவர்களுக்கு இந்தச் சலுகை வழங்கப்படுமென்று அரசாங்கம் அறிவித்திருந்தார்கள். அதேபோன்று குடியானவர்களுக்கும், பிற்பட்ட வகுப்பினருக்கும் அதே சலுகையை அரசாங்கம் வழங்க முன்வரவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். இறுதியாக பாசன வசதி சம்பந்தப்பட்ட மட்டில் உடையார்பாளயம் தாலுகா மிகவும் வறண்ட பிரதேசமாக இருப்பதால் மருதையாறு திட்டம் என்ற திட்டம் 2 கோடி ரூபாய் செலவில் நிறைவேற்றப்படுமென்று முதலாவதாக வாக்களித்திருந்தார்கள். ஆனால் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் செலவுத்தொகை குறைந்த காரணத்தால் அத்திட்டத்தை பிற்பாடு கவனிக்கலாம் என்று ஒதுக்கி வைத்திருந்தார்கள். அது குறித்து இந்த நிதிநிலை அறிக்கையில் ஒன்றுமே சொல்லப்படவில்லை. அதை மறந்து விட்டு விடாது அடுத்த ஆண்டிலாவது கொண்டு வரவேண்டுமென்று வற்புறுத்த நான் ஆசைப்படுகிறேன்.

அடுத்தபடியாக, வறண்ட பிரதேசங்களுக்கு 'சப் ஆர்டீஷ்யன் வெல்ஸ்' வெட்ட 50 லட்சம் ரூபாய் சென்ற ஆண்டு ஒதிக்கப்பட்டிருந்தது. அதில் 10 லட்சம் கூட செலவிடப்படவில்லையென்று

12th December 1961] [Sri K. R. Viswanathan]

பார்க்கும்போது மிகவும் வருத்தப்படவேண்டியிருக்கிறது. அப்படிச் செலவிடாத காரணம் என்னவென்று பார்த்தால் 'சப் ஆர்டிஷியன் வெல்ஸ்' தோண்டுவதற்கு வேண்டிய 'பவர் ட்ரில்ஸ்' கிடைக்காத காரணத்தினுல் ஆகும். அவைகளை துரிதத்தில் கொண்டு வர ஏற்பாடு செய்து வரண்ட பிரதேசங்களில் அக் கிணறுகளை வெட்டித் தருவதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்து பாசன வசதியை அதிகப்படுத்தித் தரவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். இறுதியாக, 1952-53-ல் என்று நினைக் கிறேன், எங்கள் பகுதியில் செந்துரை என்ற ஊரில் ஒரு சப் ரிஜிஸ்ட்ரார் ஆபீஸ் திறக்க வேண்டும் என்று அப்பொழுதே கேட் டோம். பத்து ஆண்டுகள் ஆகியும் அது நிறைவேற்றப்படவில்லை. அப்பொழுது நிதியமைச்சர் அவர்கள், இது ஒரு அவசா மான வேலையில்லை, துரிதமான வேலைகளை, அவசரமான வேலை களைச் செய்ய இத்திட்டச் செலவுப் பணத்தை செலவிடவேண்டும், பின்னர் பார்த்துக் கொள்ளலாம் என்று சொன்னுர்கள். பத்து ஆண்டுகள் ஆகிவிட்டது, இப்பொழுதாவது அதை அவசரமான வேலையென கருதுகிறுர்களா இல்லையா என்று கேட்கிறேன். அங்கு 'சப் ரெஜிஸ்ட்ரார் ஆபீஸ்' இல்லாததால் 20, 25 மைல் தூரம் சென்று அங்குள்ள மக்கள் தங்கள் வேலைகளைக் கவனிக்கவேண்டி யிருக்கிறது. ஆகவே செந்துரையில் ஒரு 'சப் ரெஜிஸ்ட்ரார் ஆபீஸ்' திறப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளை செய்ய இந்த அறிக்கையிலேயே இடம் கொடுக்கவேண்டுமென்று கேட்டுக கொண்டு மறுபடியும் நிதி அமைச்சர் அவர்களையும், அரசாங்கத் தையும் பாராட்டிக்கொண்டு என் பேச்சை முடிக்கிறேன்.

* SRI S. NAGARAJA MONIGAR: கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த நாடு சுயராஜ்யம் பெற்ற பின் நடந்து வரும் இந்த புனித யாத்திரையில் ஐந்தாண்டுகளுக்கு ஒரு முறை சற்று நின்று கணக்குப் பார்க்கும் ஒரு நேரத்தில் ஐந்தாண்டுகளுக்கு நம்மை அனுப்பி வைத்த வாக்காளர்களின் கருத்துப்படி பணி எப்படி ஆற்றியிருக்கிறேம், இனிமேல் என்ன செய்யவேண்டு மென்று இருக்கிற இந்த நேரத்தில் வரப் போகிற நான்கு மாதங் களுக்கு குறுகிய கால ஒரு வரவு-செலவுத் திட்டத்தை நாம் சமர் பிக்க வேண்டிய நிலையில் இன்று இருக்கிறேம். அந்நேரத்தில் நாம் பார்க்க வேண்டிய கணக்குகளை இங்குள்ள 206 பேர்களும் நாமே நன்கு பார்த்துக் கொள்ள வேண்டிய நிலையில் இருக்கிறேம், இப்பொழுது தவறினுல் மறுபடியும் நேரம் கிடைக்காது. ஆளும் கட்சியிலுள்ள நாங்கள் எதிர்கட்சியில் இல்லையே அல்லது ஆளும் கட்சியைத் தவிர்த்து வேறு ஒரு கட்சியில் இல்லையே என்று கூட நினைக்கத் தோன்றுகிறது. மனிதன், உண்மை நிலை தெரிந்த பிறகும் அதை மறுத்துப் பேச கூடியதொரு நிலை இல்லாதிருக்க வேண்டும். ஒரு சிலர் ஆரம்ப காலத்தில் நிலைமை தெரியாத காரணத்தினுல் இந்த சர்க்காரோ அல்லது இருந்து வருகிற நடை முறையோ சரியில்லை என்ற குறைபாட்டைச் சொல்லிக் கொண் டிருந்திருக்கக்கூடும். கவர்னருக்கு சம்பளம் கொடுப்பது தவறு, வெளியே போய்விடுகிறேம் என்று கூறினுர்கள். ஆனல் என்

[Sri S. Nagaraja Monigar] [12th December 1961

சகோதரர்கள் சிலர், ஐந்தாண்டுகள் அரசியல் பாதையில் ஈடுபட்ட பின்னரும் உள்ளத்தில் உள்ளதை மறைக்க முடியாத நிலையில் தத்தளிக்கும் ஒரு பகுதி சென்ற இரண்டு ஆண்டுகளுக்கு முன்னமேயே வந்து விட்டது. கடைசி நேரத்திலாவது, இத்திட்டத்தை சிறிது நன்றாக இன்னும் செய்திருக்கக்கூடாதா? அப்படிச் செய்திருக்கக்கூடாதா? இப்படிச் செய்திருக்கக்கூடாதா? ராசிபுரத்தில் இந்த அணையைக் கட்டியிருக்கக் கூடாதா? என்று தேர்தல் வருகிறது இதற்காக சொல்கிறார்கள் என்று சொல்லக் கூடிய நிலையில் வெட்கப்படாது நாட்டுக்கு நன்மை கிடைத்தால் போதும் என்று இப்படி ஒரு எதிர்கட்சி அங்கத்தினர் சொல்லக் கூடிய வாய்ப்பை கொடுத்திருக்கிறது. மேல் சபையிலே இந்திய மருத்துவத்தின் நலனை கவனித்துக்கொள்ள ஒரு அங்கத்தினர் நியமிக்கக் கூடாதா என்பதைப் பற்றியெல்லாம் இந்த அரசாங்கம் கவனித்துச் செய்யும், இவைகளை ஓரளவுக்காவது நன்றாகச் செய்யும் என்று நினைக்கும் அளவுக்கு எதிர்கட்சி மாறி வந்திருக்கிறது. இங்குள்ள அமைச்சர் அவை மிகவும் பாராட்டக் கூடியது என்பதை நான் கொஞ்சம் பயத்தோடு சொல்லவேண்டியவனாக இருக்கிறேன். உலகத்தில் பத்திரிகைகளெல்லாம் சொல்லுகின்றன. வெளி நாட்டுத் தொழிலதிபர்கள் இந்தியாவுக்கு வருவதானால்—இந்தத் தென்னகம் தேய்ந்து கிடக்கிறது என்று ஒரு சிலர் சொல்லுகிறார்கள்—தேய்ந்து கிடப்பதை மேலோங்கச் செய்ய நான் முந்தி, நான் முந்தி என்று தென்னகத்தைத் தேடி வரும் நிலையை அவர்களே அறிவார்கள்—அவர்கள் பத்திரிகையில் இடம் கொடுக்கவில்லையானாலும். இன்று தென்னகமானது மற்ற மாகாணங்களை விட பல முறைகளில் முன்னோடியாக இருந்து கொண்டிருக்கிறோம். சற்று முன்பு பேசிய கனம் சின்னதுரை அவர்கள் இவைகள் எல்லாம்—சில திட்டங்களைக் குறிப்பிட்டு—மற்ற மாகாணங்களிலிருந்துதான் எடுத்துக்கொண்டிருக்கிறோம், புதிது இல்லை என்று சொன்னார்கள். அப்படியும் எடுத்துக் கொள்ள வேண்டியது தானே? எல்லாவற்றிலும் நாமே முன்னோடியாக இருக்க முடியுமா? ஒரு பகுதியை மட்டும் சொல்லி மற்ற முன்னேற்றப் பகுதிகளைச் சொல்லாமல் விடுவதற்கு இது சந்தர்ப்பமா? என்னுடைய தகப்பனார் சொன்னார்—இவ்வளவு பணம் லேவாதேவி, சொத்து இருக்கிறதே என்று நினைத்தபோது—அப்படி இல்லை, எவ்வளவு சொத்து இருந்தாலும், அதோடு கொஞ்சம் கடனும் இருக்க வேண்டும் என்பது எங்களுடைய பெரியவர்களுடைய சாஸ்திரம் என்று. 14 கோடி ரூபாய் வரவு செலவு இருக்கும் மாநிலத்தில் 90 கோடி ரூபாய்—இன்னும் கொஞ்சம் போனால் 100 கோடி ஆகப் போகிறது—கடன் வாங்கியிருக்கிறோம். இவ்வளவு வாங்கி விட்டார்களே என்றால் எதற்காக வாங்கியிருக்கிறார்கள்? இந்த கடன் இல்லாமல் தற்போதைய நிலை வந்திருக்க முடியாதா? இப்படி வாங்கியிருப்பதன் நோக்கம் என்ன? கடன் வாங்கியிருக்கக்கூடாது என்று இன்றைக்குச் சொல்லக்கூடியவர்கள் அப்போதே ஒத்துழைக்காமல் சத்தியாக்கிரகம் செய்திருக்கக்கூடாதா? அது வேறு

12th December 1961] [Sri S. Nagaraja Monigar]

விஷயம். இவ்வளவு முன்னேற்றத்திற்கு வந்து விட்டதே, வயோதிகர்களுக்கு பென்ஷன் கொடுக்கப் போகிறார்களே, படிக்கின்ற பிள்ளைகளுக்கு கடன் கொடுக்கும் திட்டம் வந்த விட்டதே, 100 திட்டங்கள் இருக்கின்றன என்றெல்லாம் அட்வர்டைஸ்மெண்ட் மாதிரி இருக்கிறதே என்ற நிலையில் சொல்லக் கூடியதாகத்தான் இருக்கிறது. நேற்றைய தினம் மவுண்ட் ரோடில் வந்துகொண்டிருக்கும்போது 55 வயது இருக்கக்கூடிய பெரியவர் ஒருவர், அவரும் கதர் போட்டிருந்தார். நாமம் போட்டிருந்தார். நான் கதர் சட்டை போட்டுக்கொண்டிருப்பதைப் பார்த்து என்னைப் பிடித்துக்கொண்டு, அடிக்காததுதான் பாக்கி, அந்த அளவுக்கு "அனாதை என்று சொல்லுகிறார்களே, யார் அனாதை" என்று கேட்டார். அவருக்கு கோபம் எதனால் வந்தது என்று என்னால் முதலில் கண்டுபிடிக்க முடியவில்லை. ஆனால் தெரியும். அவரிடமிருந்து தப்பிக்கொண்டு வருவதே கஷ்டமாக இருந்தது. இம்மாதிரி ஒரு நிலைமை நாட்டிலே இருக்கிறதே இந்த நிலைக்கு நம் மக்களை — ஓட்டளித்தவர்களை — பாராட்டவேண்டும். சபையிலே இருக்கும் நாமும் எந்தவித குழப்பமும் தகராறும் இல்லாமல் இருந்து கொண்டிருக்கிறோம். முறையில் தவறுகள் எப்படியெப்படியோ இருக்கலாம். இந்த அரசாங்க உத்தியோகஸ்தர்களையும் நாம் இந்த நேரத்தில் பாராட்டவேண்டும். இந்த நேரத்தில் முதலில் சபாநாயகருக்கு வந்தனத்தை தெரிவித்துக் கொள்கிறேன். இது கடைசி கூட்டம் ஆனதால், இம்மாதிரி போய்க்கொண்டிருக்கின்ற நேரத்தில் எல்லோரையும் பாராட்டி இந்த சபைக்கு வந்திருக்கிற இந்த வரவுசெலவுத் திட்டத்தையும் ஏற்றுக்கொண்டு இன்னும் இம்மாதிரி நாட்டிலே பல முறையில் முன்னேறவேண்டிய புதுத் திட்டங்களைச் சொல்ல எல்லோரும் முன் வருவார்கள் என்று எதிர்பார்க்கிறேன்.

ஒன்றிரண்டு திட்டங்களைப் பற்றி சொல்ல ஆசைப்படுகிற போது, எங்கள் சேலம் ஜில்லாவில் என்ஜினீரிங் கல்லூரி என்று காகிதத்திலே—இந்த அறிக்கையிலே—வெளியிட்டிருப்பதைப் பார்த்தோம். அதற்காக பணம் 100 ரூபாய் ஒதுக்கியிருப்பதையும் பார்த்தேன். இதைக் கண்டு சந்தோஷப்படுகிறேன். வடக்கு-தெற்கு என்று பேசுகிற நேரத்தில், இந்த நேரத்திலே இப்படிப் பேசுவது சரியல்ல, நல்லதைத்தான் பேசவேண்டும், நான் வடக்கு சேலத்தில் இருக்கிறேன். எங்கள் பகுதி பாதி ஜில்லாவில் 23 அங்கத்தினரில் 7 அங்கத்தினர்கள்தான் இருக்கிறோம். இதிலிருந்து எவ்வளவு பாக்வேர்ட் என்று பார்த்துக்கொள்ளவேண்டும். எங்கள் வடக்கு பின் தங்கியிருக்கிறதே, எங்கள் ஜில்லாவிற்கு ஒரு மந்திரி இல்லையே என்று எவ்வளவோ சொல்லிக்கொண்டிருக்கலாம்—ஆதியிலிருந்து எவ்வளவோ சொல்லலாம். நாம் அடைந்திருக்கிற முன்னேற்றங்களைப் பார்க்கும்போது, ஒன்றும் இல்லாத இடத்தில் மூன்று பயிற்சிப் பள்ளிகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன எங்கள் பகுதியிலே. ட்ரையின்ட் டீச்சர்ஸ் இல்லாமல் பள்ளிகள் திறக்க முடியாமல் இருந்தது. இந்த நிலையில் மூன்று பள்ளிகள் ஏற்படுத்திக் கொடுத்திருப்பதை நான் முக்கியமாகக் கருதி திருப்தி அடைகிறேன். வெள்ளம் வந்ததில்—கெடுதலிலும்

நல்லது இருக்கின்ற மாதிரி—ஹோகனேகலில் அணை கட்டுவதாகத் தகவல் கிடைத்திருக்கிறது. மேகதாட் என்ற இடத்தில் கட்டப் போவதாகத் தெரிகிறது. பெண்ணாகரம் என்ற இடத்தில் மேகதாட் என்ற இடம் இருக்கிறது. முப்பது மைல் மேலே அஞ்செட்டி பிராந்தியத்திலே மைசூர் பார்டருக்கும் நம் பார்டருக்கும் மத்தியில் ஒரு மின்சார நிலையத்தைத் துவக்க இந்த அரசாங்கத்திற்கும், மைசூர் அரசாங்கத்திற்கும் இடையே பேச்சுவார்த்தை நடந்து நின்று விட்டது. அதற்கும் மேகதாட் என்றுதான் பெயர். அஞ்சட் என்ற இடத்தில் கட்டப்படுமானால், எங்கள் பின் தங்கிய பகுதியாகிய நான்கு தாலூகாக்களுக்கும், தண்ணீர் இல்லாமலேயே பாலாறு பேசினில் நல்ல விளைச்சல் இருக்கிறது. தண்ணீர் அறிப்போமானால் வேலூருக்கு அல்லது குடியாத்தத்திற்குத் திரும்புவதைக் காட்டிலும் மேலேயே வாணியம்பாடி, ஆம்பூர் பகுதியில் திரும்பினால் நன்றாக இருக்கும் என்று சொல்லி பல முக்கிய முன்னேற்றங்களுக்கு பாராட்டுதல் தெரிவித்து இந்த வரவு-செலவுத் திட்டத்தை அங்கீகரிக்குமாறு கேட்டுக்கொண்டு நான் எனது வார்த்தைகளை முடித்துக் கொள்கிறேன்.

SRIMATHI SATHIAVANIMUTHU : சட்டமன்றத் தலைவர் அவர்களே, 1962-63-ம் ஆண்டு நிதி நிலை அறிக்கையைக் குறித்து சில வார்த்தைகளை நான் கூற விரும்புகிறேன். இந்த மன்றத்தில் ஆளுகிற கட்சியைச் சேர்ந்தவர்கள் பேசும்போதெல்லாம் நிதி அமைச்சர் அவர்கள் நிச்சயமாக டில்லிக்குச் சென்று விடுவார் என்றும், அவருக்கு வழியனுப்பு விழாவில் பேசுகிறார் போலச் சிலர் பேசி இருக்கிறார்கள். கடந்த முறை பாராளுமன்றத்திற்கு நின்று வெற்றி பெற்று டில்லி செல்ல வேண்டிய அமைச்சர் வெங்கட்ராமன் இந்த அமைச்சர் அவையில் இருக்க வேண்டுமென்று இங்கேயே நிறுத்தி வைக்கப்பட்டிருக்கிறார். அதே போல—தேர்தலுக்கு இரண்டு மாத காலம் இருக்கிறது—நிதி அமைச்சர் அவர்கள் முடிவை மாற்றிக்கொண்டு இங்கேயே இருக்கக்கூட நினைக்கலாம், அதற்குள் அத்தனை அங்கத்தினர்களும் டில்லிக்குப் போகிறார் என்று பேசிப் பேசி வழியனுப்புவதை நான் நிச்சயமாக விரும்பவில்லை. ஆனால் வேறு ஒரு சமயத்தில் அவர் டில்லி செல்வதை நான் வரவேற்பேன். அவர் தயார் செய்திருக்கிற இந்த அறிக்கையில் விளக்கமாக "விரைவில் சமர்ப்பிக்கவுள்ள நிதிக் கமிஷன் அறிக்கை தக்க முறையில் மாநிலங்கட்கு நீதி வழங்கும் என்று எதிர்பார்க்கப் படுகிறது. நம் மாநிலத்தின் நிதி நிலைமையை இதற்குப் பின் ஆராய்ந்து பார்ப்பது தான் பொருத்தமாக இருக்கும்" என்று கூறியிருக்கிறார். தக்க முறையில் மாநிலங்களுக்கு நீதி வழங்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது என்ற வாசகம், நீதி கிடைக்கவில்லை என்று நீண்டகாலமாகச் சொல்லிவந்ததை மெய்பித்துக் காட்டுகிறது. நீதி கிடைக்கவில்லை என்று சொல்லி, வடக்குக்கு ஒரு நீதி, தெற்குக்கு ஒரு நீதி என்று இருக்கிறது என்று நாங்கள் சொல்லி வந்தபோதெல்லாம் சரி சமமான நீதி பெற்று வருகிறோம் என்று இந்த மன்றத்தில் வாதாடி வந்தவர்களுக்கு இது ஒரு சரியான

12th December 1961] [**Srimathi** Sathiavanimuthu]

பதிலாக இருக்கும் என்று நினைக்கிறேன். எங்களோடு ஒத்துழைப்பு தந்தால், முன்னேற்றத் திட்டங்களில் ஈடுபட்டு ஒத்துழைப்பு தந்தால் நாடு செழிப்படையும் என்று பேசி, 10 ஆண்டுகளுக்குப் பின்பு வெற்றி அடையவில்லையென்ருல் நானும் உங்கள் பக்கத்தில் வந்து நிற்கிறேன் என்று சொன்ன அமைச்சர் ஐந்து ஆண்டுகளுக்குள் நீதி கிடைக்கவில்லையென்ருலும், வழங்கப்படும் என்று எதிர்பார்க்கப்படுகிறது என்றும் சொல்லும் வாசகத்தில் நம் நிலைமையை ஓரளவு உணர்ந்து இருக்கிருர் என்றும், உணர்ந்து வாங்குகிற இடத்தில் இருக்கிற அவர் கொடுக்கும் இடத்திற்குச் செல்லுகிறபோது, அங்கே சென்று கொடுக்கும் கொடுப்பாருடன் இருந்து அதிகமான முறையில் வழங்குவார், நீதி அளிப்பார் என்று எதிர்பார்த்து, அவர் செல்லுவதில் நாடு மகிழ்ச்சி அடையும் சிறப்பு அடையும் என்று மகிழ்ச்சியுடன் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

இந்த அறிக்கையில் எல்லோரும் பாராட்டக்கூடிய வகையில் முதியவர்களுக்கு ஓய்வுகால ஊதியம் என்றுள்ள அம்சத்தை நான் வரவேற்கிறேன். ஆனுல் அதிலே சில மாற்றங்களைச் சொல்ல விரும்புகிறேன். அறுபத்தைந்து வயதுக்கு மேற்பட்ட அனுதையான முதியவர்களுக்கு 20 ரூபாய் ஓய்வு ஊதியம் தரப்படுகிறது என்று அறிவிக்கப்பட்டிருக்கிறது. அனுதையாக விடப்பட்ட ஆணுக இருந்தாலும், பெண்ணுக இருந்தாலும் 65 வயதாகி விட்டபிறகு, 20 ரூபாயை மட்டும் வாங்கிக் கொண்டு சோறு சமைத்து சாப்பிட்டுவிட்டு அன்ருட வாழ்க்கையை அவர்கள் நிம்மதியாக நடத்த முடியாது. யாராக இருந்தாலும், இந்த 20 ரூபாயை மட்டும் வைத்துக்கொண்டு எப்படி அவர்கள் வாழ்க்கையை நடத்த முடியும்? அவர்களுக்கு இந்த 20 ரூபாய் என்ன பயனை அளிக்கும்? எனவே, சர்க்கார் மனப்பூர்வமாக அப்பேர்ப்பட்ட வயதானவர்களுக்கு நன்மை செய்யவேண்டுமென்ற எண்ணம் இருக்குமானுல், 65-க்கு மேற்பட்ட அனுதைகள் என்று சொல்லப்படுவோருக்கு தனியாக வீடுகள் அமைத்து, அந்த வீடுகளிலே அவர்களைப் பராமரிப்பதற்கு ஏற்பாடு செய்ய வேண்டும். இப்படி இல்லாமல், அனுதைகள் என்று சொன்னுல், பலபேர் அனுதைகள் என்று சொல்லிக்கொண்டு முன் வரவே மாட்டார்கள். அனுதை இல்லங்களில் வந்து சேருங்கள் என்று சொன்னுல்கூட, எனக்கு மகன் இருக்கிருன், மகள் இருக்கிருள், தங்கை இருக்கிருள், தம்பி இருக்கிருன் என்று சொல்வார்களே தவிர, அனுதைகள் என்று சொல்லிக்கொள்ள மாட்டார்கள். ஆளும் கட்சியைச் சேர்ந்த ஒரு அங்கத்தினர் அவர்கள் கூறியது போல, பலர் அனுதை என்று சொல்லிக் கொள்ளவே பிரியப்பட மாட்டார்கள். ஆகவே, இப்படிப்பட்ட ஒரு இல்லத்தை, விடுதியை சர்க்காரே ஏற்படுத்திஞல், அதிலே உண்மையாகவே அனுதைகளாக உள்ளவர்கள் வந்து சேருவதற்கு வாய்ப்பு ஏற்படும். அதனுலே, அப்படிப்பட்டவர்களுக்கு ஒரு நிரந்தரமான வசதி செய்வதாகவும் அமைய முடியும். இதைத் தவிர, கண் இழந்தவர்கள், ஊமைகள், தொழு நோய்க்காரர்கள், பிற அங்கங்கள் ஊனமடைந்தவர்கள், முடமாக இருப்பவர்கள் போன்றவர்கள் விஷயத்

திலே 5 வயதைக் குறைத்திருக்கிறார்களே தவிர, அவர்களுக்கும் ஒரு சரியான திட்டத்தை வகுக்கவில்லை. இப்படிப்பட்டவர்களுக்கு ஆளுக்கு 20 ரூபாயைக் கையில் கொடுத்து தனித்து வாழுங்கள் என்று சொன்னால், பல குருடர்களும், முடவர்களும் கையிலே ரூபாயை வாங்கிக் கொண்டு, "சங்கரா, சிவ சங்கரா" என்று தெருவிலே பாட்டுப் பாடிக்கொண்டு செல்வார்களே தவிர, அனைவரும் ஆளுக்கு 20 ரூபாய் வாங்கிக்கொண்டு ஒரு இடத்தில் சாப்பிடுவதற்கோ அல்லது வேறு நல்ல வகையில் பயன்படுத்திக் கொள்ளவோ முடியாது. எனவே அப்பேர்ப்பட்டவர்களை எல்லாம் ஒன்று சேர்த்து, அவர்கள் தங்குவதற்கு, வாழ்வதற்கு இடம் தந்து, அவர்களுக்கு வேறு பல தொழில்களையும் கொடுத்து, சிறு கைத்தொழில்களிலே ஈடுபடுத்தி, அவர்கள் வாழ்க்கையை நல்ல முறையிலே அமைக்க சர்க்கார் உதவலாம். அதனாலே சர்க்காருக்கும் ஓரளவு வருமானம் செய்து கொள்ளலாம். ஆனால், சிறு சிறு தொழில்களையெல்லாம் குடும்பங்களிலே இருக்கிற தலைவனும், தலைவியும்தான் செய்து வருகிறார்கள். இன்று காலையில்கூட, நான் கேள்வி கேட்ட நேரத்தில் அமைச்சர் அவர்கள் பதில் சொல்கின்ற நேரத்தில், என்னுடைய தொகுதியிலே உள்ள தீப்பெட்டித் தொழிற்சாலையில் போதுமான மக்கள் வராத காரணத்தால், வருமானம் இல்லாத காரணத்தால், அது காஞ்சியிலே மாற்றப்பட்டிருக்கிறது என்று சொன்னார்கள். ஆனால் இன்றைக்கு இருக்கிற நிலைமையில், அந்த ஏழைத் தொழிலாளர்களுக்கு தரப்படுகின்ற ஊதியம் போதுமானதாக இல்லை என்ற காரணத்தால், பெரும்பாலானோர் அந்தத் தீப்பெட்டித் தொழிற்சாலையில் வேலை செய்யவில்லை. ஆனால் ஓரளவு தறி நெசவுத் தொழில் நடைபெற்று வருகின்ற காஞ்சிபுரத்து வாசிகளுக்கு, இந்தத் தொழில் எந்த அளவுக்கு உதவி புரியும் என்பது விளங்கவில்லை. எனவே, இப்படிப்பட்ட முடம், கண் இழந்தவர், ஊமை ஆகியவர்களைச் சேர்த்து, அவர்களுக்கு ஓர் இல்லம் அமைத்து, அங்கு சிறிய சிறிய கைத்தொழில்களை ஏற்படுத்தி, கற்றுக் கொடுத்தால் அவர்கள் பிழைப்பதற்கும் வசதி செய்தவர்களாவோம், அரசாங்கத்திற்கும் ஓரளவு ஊதியம் கிடைக்கும். எனவே, இப்படிப்பட்டவர்கள் ஒன்று சேர்த்து ஒரு காகிதத் தொழிற்சாலையோ, காகித பூத் தொழிற்சாலையோ, பாய் பின்னுதல் போன்ற சிறு சிறு கைத்தொழில்களையோ ஏற்படுத்திக் கற்றுக் கொடுத்தால், அவர்களும் நல்ல முறையில் வாழ்க்கை நடத்த முடியும்; அதன் மூலமாக அரசாங்கத்திற்கும் வருமானம் வரும். ஆகவே, இப்படிப்பட்ட ஒரு திட்டத்தை அவர்களுக்கு ஏற்படுத்துவதன் மூலமாக நாம் அவர்களுக்கு ஒரு நிரந்தரமான வழிவகைச் செய்தவர்களாவோம். அந்தப் பகுதியிலே பிச்சைக்காரர்களையும் வேண்டுமானால் சேர்த்துக் கொள்ளலாம். பிச்சைக்காரர்கள் என்று சொல்லப்படுவோர் பெரும்பாலும் போதிய வருமானம் வராத காரணத்தால், நல்ல முறையிலே வாழ்க்கை நடத்த முடியாத காரணத்தால்தான் பிச்சை எடுக்கும் நிலை ஏற்படுகிறது. எனவே, பிச்சைக்காரர்களையும் அந்த பட்டியலிலே சேர்த்து, 'நிரந்தரமான முறையிலே ஒரு திட்டத்தை வகுத்தால்,

12th December 1961] [Srimathi Sathiavanimuthu]

உண்மையிலேயே நாம் மக்களுக்கு நன்மை செய்தவர்களாவோம். அதை விடுத்து, 60 வயதுக்கு மேற்பட்டவர்களுக்கு, 65 வயதுக்கு மேற்பட்டவர்களுக்கு ஓய்வு ஊதியம் ரூ. 20 தருகிறோம் என்று சொல்வது, படிக்கும்போது இனிக்கிறதே தவிர, உண்மையிலேயே யாராக இருந்தாலும், இந்த 20 ரூபாயை வாங்கிக்கொண்டு இந்த சர்க்காரை வாழ்த்தமாட்டார்கள். இது எதிர்க் கட்சி அங்கத்தினர்கள் கூறுவதுபோல், தேர்தல் பிரசாரமாக இருக்குமே தவிர, உண்மையிலே மக்களுக்கு இதனால் எவ்வித நன்மையும் கிடைக்காது. எனவே, இப்போது போடப்படும் திட்டங்கள் போல் திட்டங்கள் போடுவதால், பணம் செலவழிகிறதே தவிர, அதிலே இருந்து வருமானம் வரக்கூடிய திட்டமாக இருக்கிறதா என்று பார்த்தால், நிச்சயமாக இல்லை. இந்த நிதி நிலை அறிக்கையோடு கொடுக்கப்பட்டுள்ள வெள்ளை அறிக்கையைப் பார்த்தால், மத்திய சர்க்காரிலே இருந்து, இந்த சர்க்கார் நீண்டகாலமாக வாங்கி வந்த கடனில், கடைசியாக கொடுக்கப்பட்டதில் 31-வது மார்ச்சு, 1961 வரையிலே கொடுக்க வேண்டியது 127 கோடி என்று கணக்கிடப்பட்டு இருக்கிறது. அதேபோல், தனிப்பட்ட ஸ்தாபனங்கள் மூலம் 133 கோடி இருப்பதாகத் தெரிகிறது. இப்படி கோடி கோடியாக கடனை வாங்குகிறோம். திட்டங்களை அழகாகத் தீட்டுகிறோம். இவைகளை நிறைவேற்றுவதற்கு சர்க்கார் இருக்கிறது. ஆனால் தீட்டிய திட்டங்கள் நிறைவேற்றப்பட்ட பிறகு, இந்தத் திட்டங்கள் மூலமாக கடனைத் திருப்பிக் கொடுப்பதற்கான வருமானம் நமக்கு வருகிறதா என்று பார்த்தால், வருமானம் வரவில்லை. ஒவ்வொரு திட்டத்திற்கும் கோடிக் கணக்கிலே செலவழிக்கின்றோம். அணைக்கட்டுகள் கட்டி, நீரைத் தேக்கி வைக்கிறோம். அப்படி தேக்கி வைப்பதன் மூலம் பெருவாரியான நிலங்களுக்கு நீர்ப்பாசன வசதி அளிக்கிறோம். அப்படி நீர்ப்பாசனம் அளிப்பதன் மூலம் விளைச்சலை அதிகம் செய்கிறோம். விளைச்சல் அதிகம் ஆகிவிட்டதால், விலைவாசி இறங்கி விட்டது என்று வந்தால், அதன்மூலம் மக்கள் தரம் உயரும். அப்படிப்பட்ட ஒரு நிலைமை ஏற்படும்போது, கடனைத் திருப்பிக் கொடுக்கின்ற நிலைமை ஏற்படும். ஆனால், இன்றைக்கு அணைக்கட்டுகள் கட்டினாலும், மின்சாரத் திட்டங்கள் பல நிறைவேற்றினாலும், வேறு எந்தத் தொழிற்சாலைகளை ஆரம்பித்தாலும் அந்தத் தொழில்கள் மூடப்படுகின்ற நிலையைத்தான் பார்க்கின்றோம். காரணம், அதற்குப் போதுமான வருமானம் இல்லை. வரியையும் மேலும் விதிக்க முடியாது. மேலும் கொடுக்கிற அளவிலும் மக்கள் நிலை இல்லை. இதை நிதிக் கமிஷனுக்கு அழகாக எடுத்துக் கூறியிருக்கிறார்கள். எனவே, வரி போடவும் முடியாது. ஆனால் கடன் வாங்குகிறோம். இப்படி கடன் மட்டும் வாங்கி, மக்களுக்காகத் திட்டங்கள் போட்டு, அதிலே வருமானம் வரவில்லை என்றால், சர்க்காரின் நிலைமை என்ன என்பதை சற்று ஆலோசித்துப் பார்க்கவேண்டும். பலபல தொழிற்சாலைகள் நமது மாகாணத்தில் உருவாக்கப்பட்டிருக்கிறது. அழகியத் திட்டங்களின் மூலமாக நாம் பெருமை மட்டும் அடைந்துக் கொள்கிறோம். ஆனால் வருமானம் எங்கே? மாதாவரம் பால் பண்ணைக்கு அமைச்சர்கள் அடிக்கடி படை

[Srimathi Sathiavanimuthu] [12th December 1961

யெடுக்கிறார்கள். அந்தப் பால் பண்ணையைப் பற்றி நாம் பேசுகிறோம். அதனால் பால் கிடைக்கிறதா? அந்தப் பால் மக்கள் அனைவருக்கும் போதுமானதாக இருக்கிறதா? என்று பார்த்தால், அது மக்களிடையே நல்ல முறையிலே விநியோகிக்கப்படவில்லை. பம்பாயிலிருந்து ஆரே பால்பண்ணையில் தயாராகும் பால்பண்ணையிலிருந்து உற்பத்தியாகும் "அமுல்" பால்பவுடர் டப்பாக்களில் அடைக்கப்பட்டு விற்பதைத்தான் இன்றைக்குப் பார்க்கிறோம். மாதாவரம் பால் மக்களுக்கு கிடைக்கவில்லை. மக்களுக்குத் தேவையான பொருள்களை அதிகமாக உற்பத்தி செய்து, வாங்குகிற ஆசையை ஏற்படுத்தினால் அதன்மூலம் வருமானம் பெருகும். இந்த வகையிலே தொழிற்சாலைகள் ஏற்படுத்தினால், வருமானம் பெருக முடியும்; வேலை இல்லாத மக்களுக்கு வேலை தர முடியும்.

10–30 a.m.

அதுபோலவே நம்முடைய நாட்டில் 134 ஆலைகள் இருப்பதாக கடந்த முறை அமைச்சர் அவர்கள் புள்ளிவிவரம் தந்திருக்கிறார்கள். நூற்று முப்பத்திநான்கு ஆலைகளில் 109 நூற்பு ஆலைகள் இருக்கின்றன. இருபத்தைந்து ஆலைகள்தான் நெசவு ஆலைகள். நெசவு ஆலைகள் அதிகமாக இருந்தால், துணிகள் அதிகமாக உற்பத்தி செய்ய முடியும். சாதாரண பொது மக்கள் துணிகளை அதிகமாக வாங்குவார்களே தவிர நூல்களை வாங்கமாட்டார்கள். எனவே நூற்பு ஆலைக்குப் பதிலாக நெசவு ஆலைகளை அதிகப்படுத்தினால், நம் நாட்டில் ஓரளவுக்கு வருமானம் அதிகமாகும் என்பது என்னுடைய தாழ்மையான கருத்து.

THE HON. SRI C. SUBRAMANIAM: அப்பொழுது கைத்தறிகள் நிலை.........

SRIMATHI SATHIAVANIMUTHU: கைத்தறியையும் பூர்த்தி செய்யவேண்டும். அதுபோலவே ஆலைகளையும் பூர்த்தி செய்ய வேண்டும். நாம் இப்பொழுது செய்கின்ற முறையிலே அதிகப்படியான சலுகைகளும் அதிகப்படியான ஒரு நல்ல கருத்தும் ஆலைக்கு இருக்கிறதே தவிர, கைத்தறிக்கு இருப்பதை நாம் காண முடியவில்லை. எனவேதான் எங்களைப் போன்றவர்கள் ஆலைகள் அதிகமாக இருப்பதினால், ஆலைகளிடம் சர்க்காருக்கு அதிக அக்கறை இருப்பதினால், அப்படிப்பட்ட ஆலைகளையெல்லாம் தேசியமயமாக்க வேண்டும், அதன் மூலம் அதிகப்படியான வருமானத்தை இந்த சர்க்கார் அடைய முடியும் என்று எடுத்துக் காட்டுகிறோம். தேசியமயமாக்க வேண்டும் என்று சொன்னால், தேள் கொட்டியதைப் போல் சர்க்கார் துள்ளுகிறதே தவிர, வருமானம் வருகிறதே என்று எண்ணிப் பார்ப்பதில்லை. வருகிற வருமானம் சர்க்கார் மூலம் மக்களுக்கு வருகிறது. எனவேதான் தேசியமயமாக்கவேண்டும் என்று சொல்லுகிறோம். ஆலைகளை தேசியமயமாக்க வேண்டும், அதன் மூலம் அதிகப்படியான வருமானத்தை நாம் ஏற்படுத்திக் கொள்ள முடியும்.

அதே போன்று இயற்றுகிற திட்டங்களிலே பண விரயம் ஆவதைக் குறித்து, பல துறைகளிலே பல முறையிலே விரயம் ஆவதைக் குறித்து நான்கூட இங்கே பேசி இருக்கிறேன். ஹரிஜன

12th December 1961] [Srimathi Sathiavanimuthu]

மக்களுக்கு கோடி கோடியாகப் பணத்தை ஒதுக்குகிறோம் என்று இந்த மன்றத்தில் அடிக்கடி பேசப்பட்டாலும், ஒதுக்கப்படுகின்ற பணம் ஒழுங்கான முறையிலே செலவழிக்கப்படுகின்றதா என்றால், செலவழிக்கப்படவில்லை. எனக்கு தேதி தெரியவில்லை. இதற்கு முன்பு நான் ஒரு தினம் பேசும்பொழுது எனது தொகுதியிலிருக்கிற ஆதி திராவிட மக்களுக்கு வீடுகளை கட்டித் தருவதாகச் சொல்லி, அதற்கு முன்னாலே புறம்போக்கு நிலத்தில் வீடுகளைக் கட்டியிருந்தவர்களிடம் "சர்க்கார் வீடுகளை கட்டித் தருகிறது, பக்கத்தில் இருக்கிற சர்க்கார் நிலத்தில் வீடுகளைக் கட்டி உங்களுக்கே சொந்தமாக்குகிறோம்" என்று ஏமாற்றி, நிலத்திற்கும் வீட்டுக்கும் சொந்தக்காரர்களாக இருந்து, வாடகை இல்லாமலே இலவசமாக குடும்பத்தோடு வாழ்ந்து வந்த ஏழை ஆதித் திராவிட மக்களிடம் 'உங்களுக்கு வீடுகள் கட்டித் தருகிறோம், அழகாக வீதிவீதியாக அமைத்து மின்சார விளக்குப் போட்டு, 3,000 ரூபாயில் வீடுகள் கட்டித் தருகிறோம்" என்று சொல்லி, ரூ. 2,000-க்கு வீடுகளைக் கட்டி, ரூ 12-8-0 வாடகை தர வேண்டும் என்று சொல்லி, இப்பொழுது வாடகை வாங்கி, வாடகையை மொத்தமாக செலுத்த வேண்டுமென்று சொல்லுகிறார்கள். ஆறு மாதம், எட்டு மாதம், பத்து மாதம் ஏறத்தாழ ஒரு ஆண்டுக்கு மொத்தமாக வாடகை கட்டவேண்டும், அல்லது வீட்டை விட்டு வெளியேறவேண்டும் என்று நோடீஸ் கொடுக்கப்பட்டிருக்கிறது. பதினைந்து தினங்களுக்குள் பணத்தைக் கட்டாவிட்டால், குடிசை வீட்டை பிரித்துப் போடுவோம் என்று சொல்லக்கூடிய அளவுக்கு இன்றைக்கு அவர்களுக்கு நோட்டீஸ் அனுப்பப்பட்டிருக்கிறது. நான் அப்பொழுதே சொன்னேன் ஆதித்திராவிட மக்களுக்கு வீடுகள் கட்டித்தரவேண்டும் என்ற நல்லெண்ணம் உங்களுக்கு இருந்தால், அவர்களுக்குச் சொந்தமாக வீடுகளைக் கட்டித் தாருங்கள், நிலம் சர்க்காருக்குச் சொந்தமாக இருக்குமானால் அவர்களுக்குத் தாருங்கள் என்று நிலம் தனிப்பட்டவர்களுக்கு சொந்தமாக இருந்தால், அந்த இடங்களிலே சுகாதார வசதி கிடையாது, ரோடு வசதி கிடையாது, குழாய் கிடையாது, குடிதண்ணீர் வசதி கிடையாது, தனிப்பட்டவர்களுக்கு நிலம் சொந்தமாக இருப்பதால் நகராண்மைக் கழகமும் வசதிகள் செய்யமுடியவில்லை, ஆளுகின்ற சர்க்காரும் நடவடிக்கை எடுக்கக் காணோம். அப்பேர்ப்பட்ட திட்டங்களை தீட்டி அந்த மக்களை வஞ்சிக்காமல் அவர்களுக்கு வீடுகளை சொந்தமாக்கவேண்டும் என்று பல முறை சொன்னோம். ஐந்தாண்டு பூர்த்தியாகப் போகிறது. இனி சொல்லி பயன் இருக்குமோ, இருக்காதோ தெரியவில்லை. இருந்தாலும், என்னுடைய கடமை என்ற காரணத்தினால், நான் இங்கு அதனை சொல்லிவிடுகிறேன்.

இறுதியாக ஏழை ரிக்ஷாக்காரர்களுக்கு சமீபத்தில் எங்கள் இயக்கத்தைச் சேர்ந்த ஒரு நடிகர் மழை அங்கி வழங்கினார், ஏழைகள் படுகின்ற துயரம் காரணமாக, தன்னால் இயன்றவரை அவர்களுக்கு உதவி செய்யவேண்டும் என்று கருதி, நடிகர் செய்த உதவியைப் பெற்ற ரிக்ஷா தொழிலாளர்களின் இல்லம் தேடிச் சென்று, அவர்களுக்கு போலீஸார் தொல்லை தருகிறார்கள்.

[Srimathi Sathiavanimuthu] [12th December 1961

இப்படி ஏன் செய்யவேண்டும்? ஒரு நடிகர் தருகிற உதவி அவர் எந்தக் கட்சியைச் சான்றவரோ அந்தக் கட்சிக்கு கீர்த்தியும், கித்தாப்பும் தருகிறது. ஆகவே ஆளுகின்ற கட்சியினர் போலீஸ் இலாகாவை இப்படி ஏன் அக்கிரமமாக ஏவிவிட வேண்டும்? சர்க்கார் செய்யத் தவறிய அந்த உதவியை தனிப்பட்டவர் செய்தால் அது ஜனநாயக ஆட்சியில் தவறு? இந்த ரிக்‌ஷக்காரர்களுக்கு போலீஸார் ஏன் அதிகப்படியான தொல்லையை கொடுக்கவேண்டும்?

அதே போல்தான் சுவரொட்டி ஒட்டினால், ஆளுகின்ற கட்சியைச் சேர்ந்த அமைச்சர் சுப்பிரமணியம் பேசுகிறார் என்று சுவரொட்டி ஒட்டினால் போலீஸார் எந்தத் தடை செய்வதும் கிடையாது. அண்ணா அவர்கள் பேசுகிறார்கள் என்று சுவரொட்டி ஒட்டினால், அதைக் கிழித்து விடுகிறார்கள், ஒட்டுகிற ஆட்களை சிறைக்கு அனுப்புகிற அளவுக்கு போலீஸார் தொந்தரவு செய்கிறார்கள். இரண்டு தினங்களுக்கு முன்பு எனது தொகுதியில் 40-வது வட்டத்தில் அண்ணா மன்றத் தோழர்கள் சுவரொட்டி ஒட்டும்பொழுது, ஒட்டுகின்ற ஆட்களை போலீஸார் கைது செய்திருக்கிறார்கள். நேரு அவர்கள் வருகிறார் என்றால் கோட்டை எழுத்துக்களில் சுவர் ஒட்டிகள் ஒட்டப்படவில்லையா? அவைகளைத் தடுக்க எந்தப் போலீஸாருக்கும் கண் தெரியவில்லை. எதிர்க் கட்சி மாத்திரம் சுவர் ஒட்டிகள் ஒட்டினால் அதைத் தடுக்க போலீஸார் வருகிறார்கள். போலீஸ் ஆளும் கட்சிக்கு மாத்திரம் தானா? ஆபாசத் தடை மசோதா என்பது எதிர்க் கட்சிக்கு மாத்திரம் தானா? ஆளுகின்ற கட்சிக்கு கிடையாதா? இம்மாதிரி ஓரவஞ்சனை முறையில் ஆளும் கட்சியினர் செய்துகொண்டே போனால், நிச்சயம் ஒரு காலத்தில் பொது மக்கள் பதில் சொல்லித்தான் தீருவார்கள் என்பதை எடுத்துச் சொல்லி, நேரம் இல்லாத காரணத்தினால், இத்துடன் எனது உரையை முடித்துக் கொள்ளுகிறேன்.

* SRI R. KRISHNASAMI NAIDU : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, நமது நிதி அமைச்சர் அவர்கள் சமர்ப்பித்துள்ள அடுத்த ஆண்டுக்கான வரவு-செலவுத் திட்டத்தை ஆதரித்து சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். நம்முடைய நிதி அமைச்சர் அவர்கள் சமர்ப்பித்துள்ள நிதி நிலை அறிக்கையிலே இது இந்த மன்றத்திற்கு நான் சமர்ப்பிக்கும் கடைசி வரவு-செலவு திட்டமாகும் என்ற ஒரு வாசகம் காணப்படுகிறது. இதன் விளைவாக எதிர்காலத்தில் ஏற்படக்கூடிய பல மாறுதல்களைக் குறித்து பலவிதமாக நாம் கற்பனை செய்துகொள்ளக் கூடும். அந்தக் கற்பனைகள் மனதிற்கு இதம் தருபவைகளாகத்தான் இருக்கும். வேறு விதமாக யாரும் கற்பனை செய்து கொள்ளவே இயலாது. நமது நிதி அமைச்சர் அவர்கள் கடந்த 10 ஆண்டுகளாக சிறந்த சேவை செய்து, அவர்களுடைய ஆலோசனைகளைக் கொடுத்து, இந்தச் சபையில் அவர்களுடைய நிர்வாகத் திறமையையும் எடுத்துக் காட்டியிருக்கிறார்கள். இந்தச் சபையில் அலுவலாற்றுகையில் பல இக்கட்டான சந்தர்ப்பங்களில் அவர் எடுத்துக்

12th December 1961] [Sri R. Krishnasami Naidu]

காட்டாக நடந்துகொண்டு, நாட்டிற்கே புதிய விதங்களையும், புதிய மறபையும், புது விதத்தில் சம்பிரதாயங்களையும் இந்த சட்ட மன்றத்திலே உருவாக்கும் வழிவகைகள் என்ன என்பதைப்பற்றி பலரும் எதிர்காலத்தில் சிந்திப்பதற்கான வகையிலே பணியாற்றி வந்துள்ளார்கள். இந்த வாசகத்தையெல்லாம் பார்க்கும்பொழுது, இந்த சந்தர்ப்பத்தில் இப்படிப்பட்ட நினைவு வரும்பொழுது, மனதிற்கு ஒரு பக்கத்தில் சிறிது கஷ்டமாக இருக்கிறது. அவர்கள் கடந்த காலத்தில் ஆற்றி வந்த பணிகள் மிகவும் கஷ்டமானது. அவர்கள் இரண்டு துறைகளிலே பணியாற்றியிருக்கிறார்கள். கல்வித் துறையிலே, கல்விக் கொள்கை அடிக்கடி மாறுதல் அடைந்துவந்தபொழுது கஷ்டங்கள் என்னென்ன நேர்ந்தன என்பதைப்பற்றியெல்லாம் நாம் அறிவோம். அந்தத் துறையை அவர்கள் மிகவும் சிறப்பாக நல்ல விதத்தில் நிர்வகித்து வந்திருக்கிறார்கள். நிதித் துறையிலும் ஐந்தாண்டுத் திட்டங்களை நடத்தி, அதற்கான நிதிக்கு வேண்டிய ஆதார மூலங்களை தேடுவதற்கான வழிவகைகளில் அவர்களும், நிதி இலாகாவும் நல்ல வகையிலே பணியாற்றி வந்திருக்கிறார்கள்.

இந்தச் சபையில் கடந்த 10 ஆண்டுகளாக ஒவ்வொரு ஆண்டும் நிதிநிலை அறிக்கை சமர்ப்பிக்கப்படும்போதெல்லாம், அதைப் பற்றிய சாதகபாதகமான கருத்துக்கள் இங்கே கூறப்படும் பொழுது, நாம் கேட்கக்கூடிய வாசகங்கள் ஒரே மாதிரியாகத் தான் இருக்கும். ஆனாலும், கடைசி வருஷம் என்று கருதக்கூடிய இந்த நிதி நிலை அறிக்கையிலே துருவித் துருவிப் பார்த்து, எந்த முறையிலாவது, ஏதேனும் கண்டு பிடித்து சொல்லுவதற்கான வழி வகைகள் இருக்கின்றனவா என்பதைப் பற்றி ரொம்ப சிரமப் பட்டு, அதற்கான இடங்களைக் கண்டு பிடித்து, ஏதேனும் அம் மாதிரி பேசுவதற்கு சிரமப்படுகிறார்கள் என்பது அவ்வாறு பேசிவந்த வகையிலிருந்து நன்றாகத் தெரிகிறது; நேற்றும், இன்றைய தினமும். இந்த நிதி நிலை அறிக்கை சம்பந்தப்பட்ட வரையிலும், பாராட்டியும் பேசலாம்; எந்தக் கட்சியினாலும் சரி, சாதக பாதகங்களை பேசும் வகையிலே, உண்மையை எடுத்துக் கூறி, பாராட்டவேண்டிய சந்தர்ப்பங்களிலே பாராட்டி, குறைகளை எடுத்துக் காட்டவேண்டிய சந்தர்ப்பங்களில் அவ்வாறு எடுத்துக் காட்டுவதில் ஒரு தவறும் இல்லை. அரசியல் சம்பந்தப்பட்ட மட்டில் நம் நாட்டினுடைய அரசியல் ஒரு புதிய விதத்தில் இருக்க வேண்டும் என்று மகாத்மா காந்திகூட கூறினார்கள் என்பதை நம் பாரதியார்கூட நன்கு சொல்லுகிறார்.

"தன்னுயிர் போலே தனக்கழிவெண்ணும்,
பிறனுயிர் தன்னையும் கணித்தல்,
மன்னுயிரெல்லாம் கடவுளின் வடிவம்,
கடவுளின் மக்களென்றுணர்தல்,
இன்னமெய் ஞானத் துணிவினை மற்றங்கு,
இழிபடு போர், கொலை, தண்டம்,
பின்னியே கிடக்கும் அரசியலதனில்,
பிணைத்திடத் துணிந்தனை, பெருமான்",

என்று போற்றினர் பாரதியார். அரசியல் எப்படிப்பட்டது என்று கூறும்போது, போர், கொலை, வஞ்சம் எல்லாம் பின்னிப் பிணைந்து கிடப்பது அரசியல் என்று கூறினார். அப்படிப்பட்ட அரசியலில் உயர்ந்த குணங்களைப் பிணைத்திட்ட பெருமான் என்று காந்திஜியைப் போற்றுகிறார். அப்படிப்பட்ட அரசியல் நம் நாட்டு அரசியல்.

பல பிற நாடுகளில் அரசியல் வெவ்வேறு விதமாக உருவாகி யிருக்கலாம். நம் நாட்டு அரசியலை காந்தியடிகள் கற்பனை செய்ததும், அதைக் கண்டு போற்றிய பாரதியார் சொன்னதும் மிக்க உன்னதமானது. அதைத்தான் காந்திஜி பஞ்சசீலத்தில் சொல்லியிருக்கிறார்கள். வெளி நாடுகளில் அரசியலைப் பித்தலாட்டம் என்று சொல்வார்கள். ஆனால், அந்த வார்த்தை நம் நாட்டு அரசியலுக்குப் பொருந்தாது; பொருந்தாமல் செய்துக் கொண்டிருக்கிறோம்.

நிதி நிலை அறிக்கையைப் பற்றிப் பேசும்போது, நேற்றும் இன்றும் கூட எதிர்க்கட்சி நண்பர்கள், இவ்வறிக்கையிலுள்ள நல்ல அம்சங்களைக் கண்டு வயிற்றில் புளியைக் கரைக்கிறது என்பார்கள், அதையும்விட, கண்ணில் மிளகாயைக் கரைத்தது போல, குற்றங் குறைகளையே எடுத்துப் பேசினார்கள். நமக்குக் கூட தேர்தல் பற்றி நினைவு வருவதில்லை. அவர்கள் அடிக்கடி இது தேர்தல் விளம்பர அறிக்கையா, அல்லது நிதி நிலை அறிக்கையா என்று கேட்டுப் பேசுகிறார்கள். இதையெல்லாம் விட்டு, நான் முன் சொன்னதுபோல் உயர்ந்த எண்ணங்களையும், கருத்துக்களையும் தேடிப்பிடித்து நல்ல மரபைக் கடைபிடிக்க வேண்டும். திராவிட முன்னேற்றக் கட்சியைச் சேர்ந்த ஒரு நடிகர் எங்கோ ரிக்ஷாக் காரர்களுக்கு சட்டை கொடுத்தார்கள் என்றால், அங்கு என்னவோ போலீஸார்கள் ஏதோ காரியங்கள் செய்தார்கள் என்று சொல்லி, அங்கே கிடைக்காத விளம்பரத்தை, இந்த சட்ட சபையில் அதைக் குறிப்பிட்டு அந்தச் செய்கைக்கு விளம்பரம் தேடும் அளவிலதான் பேச்சு இருக்கிறது. அப்படித்தான் விளம்பரத்திற்காகப் பேசுகிறார்களோ என்றுதான் நினைக்க வேண்டி யிருக்கிறது.

நிதி நிலை அறிக்கையில், முக்கியமாக, கடந்த ஆண்டுகளில் செய்து வந்ததைவிட நம் தமிழ் ராஜியத்திற்கு இப்பொழுது, தொழில் பயிற்சிக் கூடங்கள், எஞ்ஜினியரிங் கல்லூரிகள், எஞ்ஜினியரிங் ஓர்க் ஷாப்புகள், இத்தகைய நிறுவனங்கள் சிறப்பாக ஏற்பட இருக்கின்றன. என்.ஜி.ஓ.-களின் பிள்ளைகளுக்கும், ஏழை மாணவர்களுக்கும், வட்டியில்லாமல் கடன் கொடுத்து தொழில் கல்வி முதலியவைகள் பெறும் வசதியையும் செய்யப் போகிறார்கள். ஆரம்ப ஆசிரியர்கள் மட்டுமின்றி, மற்ற ஆசிரியர் களுக்கும் வசதிகள் செய்து கொடுக்க இருக்கிறார்கள். அறுபத் தைந்து வயது ஆனவர்களுக்கு, அவர்களுக்கு உதவி செய்யக் கூடியவர்கள் யாரும் இல்லாவிட்டால், பென்ஷனைக் கொடுப்பது என்ற திட்டமும் போட்டு இருக்கிறார்கள். ராணுவப் பள்ளியை ஏற்படுத்துவது போன்ற காரியங்கள் கவர்ச்சிகரமானது. இப்படிப்

12th December 1961] [Sri R. Krishnasami Naidu]

பலவகையிலும் ராஜ்யத்திற்கு நன்மை பயக்கும் திட்டங்களைத் தீட்டியிருக்கிறார்கள். ஆகவே, இம்மாதிரித் திட்டங்கள் அவசியம் என்பதால் வந்திருக்கின்றன. இதை தேர்தல் காலத்திற்கு என்று தேடிப் பிடித்துப் போட்டதாகக் கூறுவது பொருத்தமில்லாதது. முக்கியமாக இந்த வயதான அனாதிகளுக்கு உதவி செய்வது என்பது இன்றைக்கு திடுமென்று வந்த திட்டம் அல்ல. இதைப் பற்றி அமைச்சர்கள் பல நாட்களாகவே பேசி வந்திருக்கிறார்கள். அதிலும் பிச்சைக்காரர்களைப் பாகுபாடு செய்கிறார்கள் என்று சொல்வது குற்றம் கண்டுபிடிக்க வேண்டுமென்பதற்காகவே சொல்வதுதான். மறுபடியும் ரூ. 20 போதுமா என்கிறார்கள். எந்த எந்த வகையில் உதவி அளிக்கலாமோ அந்த வகையில் அளிக்கப் படுகிறது. கொடுக்கும் உதவி போதாது என்றால், அதைப் பின்னால் கவனிக்காமல் இருந்து விடுவோமா? எதிர் காலத்தில் வருமானம் அதிகமாகி, இன்னும் அதிக உதவிகள் செய்ய முடியுமென்றால், அரசாங்கம் அதையும் கவனிக்கத்தான் செய்யும்.

அதிகமாக கடன் வாங்கிக்கொண்டே போகிறோம், அவற்றைத் திருப்பிக் கொடுக்கவேண்டாமா, திட்டங்கள் கட்டுபடியாகும் திட்டங்களாக இருக்கின்றனவா என்று பார்த்துச் செய்ய வேண்டும் என்றெல்லாம் சொல்லப்படுகிறது. இன்றைக்கு நீர்ப் பாசனத் திட்டங்களை எடுத்துக் கொண்டால், தொழிற்சாலைகளை எடுத்துக் கொண்டால், அவை பலன் கொடுக்கச் சிலகாலம் ஆகலாம். சில சில திட்டங்கள் உடனடியாகப் பலன் கொடுக்கும். மற்றவை காலப் போக்கில் பலன் கொடுப்பதாக இருக்கும். அடுத்து சில ஆண்டுகளில் பலன் கிடைக்கும். ஆகவே, அம்மாதிரித் திட்டங்களுக்கு இன்றைக்கு வட்டி என்ன, வட்டிக்கு கட்டுகிறதா என்றால் அது பொருந்தாது. ஆகவே, அதைக் காகிதத்தில் எழுதிமட்டும் பார்த்துவிட முடியாது. சுக்கு, திப்பிலி இருக்கிறது என்றால், அந்த இடத்தில் உடனே பிள்ளை பெற்றுவிடலாம் என்று நினைக்கலாமா? அதற்கும் பருவம் வர வேண்டும் அல்லவா? மருந்துகள் தயார் என்றால், பிள்ளை பெறும் சந்தர்ப்பம் வர வேண்டாமா? அதேபோல, பணம் போட்டு, தொழில்கள் உருவாகிவிட்டன. வருமானம் வர சிலகாலம் பிடிக்கும். ஆகவே, இந்த திட்டங்களெல்லாம் பாராட்டப்பட வேண்டும், ஆதரிக்கப்பட வேண்டும். தொழில் துறையில் செலவழித்திருக்கும் பணத்திற்கெல்லாம் இன்னும் சில ஆண்டுகளில் பலன் கிடைக்கும். இன்றைக்கு கீழ் பவானித் திட்டத்தை எடுத்துக்கொண்டால், அந்தக்கால நிலைமையில் அது 10 கோடி ரூபாயில் செய்யப்பட்டது. சுமார் இரண்டு லட்சம் ஏக்கரா நிலம் பாசனத்திற்குக் கொண்டுவரப்பட்டிருக்கிறது. அது என்னுடைய தொகுதி இல்லை. ஆகவே என் பெருமைக்காகச் சொல்லும் பேச்சில்லை. அங்குள்ள நிலச் சொந்தக்காரர்கள், தங்கள் நிலங்களுக்குப் பாசனம் அடையக் கூடிய நிலைமை ஏற்பட்டது. திட்டமிட்ட அளவு நிலங்கள் இன்னும் பயனடையவில்லை. பல வருஷங்களில் அது இன்னும் அதிகமாகி, நல்ல பலன் கிடைக்கும் என்பது யாரும் மறுக்க முடியாது.

[Sri R. Krishnasami Naidu] [12th December 1961

கடைசியாக, நிதி அமைச்சர் கடந்த பல ஆண்டுகளில் இந்த சபைக்கும், இந்த ராஜ்யத்திற்கும் செய்துள்ள பணிகள் மிகவும் போற்றத் தக்கவை. எந்தக் கட்சிக்காரர்களாக இருந்தாலும் சரி, அவர்களுக்கெல்லாம் ஊக்கமளிக்கும் வகையில் நிதானமாகச் செயல்பட்டு வந்திருக்கிறார்கள். சில சில சந்தர்ப்பங்களில், நமக்கெல்லாம் ஆசிரியர் போலவும் இருந்து, இந்த சபையில் ஒழுங்குபட காரியங்களை நடத்துவதிலும், சிறந்த சம்பிரதாயங்களை உருவாக்குவதிலும் பல நற்பணிகள் புரிந்திருக்கிறார்கள். அவர்களைப் பாராட்டுவதோடு, அவர்களோடு, கல்வி இலாகா, நிதி இலாகா இவைகளில் அவர்களுக்குப் பக்க பலமாக இருந்த உத்தியோகஸ்தர்களையும் பாராட்டி, அமைச்சரையும் அவர்களுடைய சிறந்த சேவைகளுக்காகப் பாராட்டி, அவர்களுக்கு என் பாராட்டுதலைத் தெரிவித்துக்கொண்டு என் உரையை முடிக்கிறேன்.

* **SRIMATHI KAMALAMBUJAMMAL** : மதிப்பிற்குரிய உதவி சபாநாயகர் அவர்களே, இந்த சட்டசபையிலே கொண்டுவரப்பட்டுள்ள நிதி நிலை அறிக்கையானது நவரத்தினங்கள் பதித்த மாதிரி இருக்கிறது என்று சொல்லலாம். பல புதிய அம்சங்கள் அடங்கிய ஒரு நல்ல திட்டத்தை நமது நிதி அமைச்சரவர்கள் கொண்டுவந்திருக்கிறார்கள். இந்த கடைசி கூட்டத்திற்கு இது மிகவும் சிறப்புத் தருவதாகக்கூட அமைந்திருக்கிறது என்று சொல்லலாம். பல நல்ல புதிய திட்டங்களை வகுத்து, அத் திட்டங்களை செயல் முறையில் நடத்துவதற்கு வேண்டிய அளவுக்கு மத்திய அரசிடம் இருந்து மான்யத் தொகைப் பெற்று அந்தத் திட்டங்களையெல்லாம் நல்ல முறையிலே நடத்திக்கொண்டு வருகிறோம். அப்படியிருந்தும்கூட மதிப்பிற்குரிய அங்கத்தினர் திருமதி சத்தியவாணிமுத்து அவர்கள் இன்னும் நமது மாநிலத்திற்கு சரியான முறையிலே நிதி வழங்கப்படவில்லை என்று சொல்லக்கூடிய ஒரு வாக்கியத்தை மட்டும் படித்தார்கள். அந்த அம்மையார் அவர்கள் இன்னும் சற்று மேலே பார்த்தார்களேயானால், என்ன சொல்லப்பட்டிருக்கிறது என்பது தெரியவரும்.

"மேலும் மாநிலங்கட்கு மத்திய வருமானத்திலிருந்து கொடுக்கப்படும் பங்கைப்பற்றி மூன்றாவது நிதிக்கமிஷன் தற்போது ஆராய்ந்து வருகிறது. மாநில வரிகளில் பெரும்பாலானவை போதுமான அளவிற்கு விரிந்து கொடுப்பன அல்ல என்பதைப் பற்றியும், மக்களின் அடிப்படையான தேவைகளைப் பூர்த்தி செய்வதில் மாநில அரசாங்கங்கள் மேலும் மேலும் அதிகப்படியான பொறுப்புகளை ஏற்கவேண்டியிருக்கிறது என்பது பற்றியும் நிதிக் கமிஷனுக்கு எடுத்து விளக்கியுள்ளோம். விரைவில் சமர்ப்பிக்கவுள்ள நிதிக் கமிஷனின் அறிக்கை தக்க முறையில் மாநிலங்கட்கு நீதி வழங்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது" என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதைப் பார்க்கும் பொழுது ஒரு மாநிலத்திற்கு 30 லட்சம் என்று சொன்னால் அதே மாதிரி ஆந்திர மாகாணம், கேரள மாகாணம் எல்லாவற்றிற்கும் சராசரியாக 30 லட்சம் கொடுக்கவேண்டும் என்று அர்த்தமல்ல. இங்கு சொல்லப்பட்டிருப்பதுபோல் அந்தந்த மாநிலங்களின்

12th December 1961] [Srimathi Kamalambujammal]

தேவைக்கு தகுந்தபடி நிலப்பரப்பிலே வித்தியாசம் இருக்கும், ஜனத்தொகையிலே வித்தியாசம் இருக்கும். அந்த அடிப்படையிலேதான் நிதி கொடுக்கப்படுகிறது. ஆகவே பொதுவாக நமது மாநிலத்திற்கு நிதி வழங்கப்படவில்லை என்று சொல்வது சரியல்ல. இதை எத்தனையோ கூட்டங்களிலே நமது நிதி அமைச்சரவர்கள் எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள். இதற்கு முன்னால் நடந்த சட்ட சபை கூட்டங்களிலேகூட நமது நிதி அமைச்சரவர்கள் புள்ளி விவரங்களோடு இதைப்பற்றி எடுத்துச் சொல்லியிருந்தும்கூட, அதைப் புரிந்துக்கொள்ளாமல் திரும்பத் திரும்ப அதைப்பற்றியே சொல்வதானது இதை ஒரு பிரசாரத்திற்காக எதிர்க்கட்சியினர் வைத்துக்கொள்ளுகிறார்கள் என்றே நாம் நினைக்கவேண்டியிருக்கிறது. இப்போதாவது அதை திருத்திக் கொள்ளவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன். நல்ல பல திட்டங்களை நாம் போட்டு அவற்றை நடத்திக் கொண்டு வருகிறோம். திட்டத்தின் அடிப்படையைப் பற்றி யாரும் சரியில்லை என்று சொல்லமுடியாது. ஆனால் அவற்றை அமல் நடத்தும் முறையில் ஏதாவது குறைபாடுகள் இருக்கின்றன என்று சொன்னால் ஓரளவுக்கு ஒப்புக் கொள்ள முடியும். இப்படி பல நல்லத் திட்டங்களை அமல் நடத்தும்பொழுது சட்ட திட்டங்களிலே குறைபாடுகள் இருக்கின்றன என்று தெரிந்தால் அதை திருத்திக் கொள்வதற்கு இந்த சட்ட சபைக்கு உரிமை இருக்கிறது. விதிகளிலே குறைபாடுகள் இருந்தாலும் நாம் அவற்றை திருத்திக் கொள்ள முடியும்.

நமது நிதி அமைச்சரவர்கள் இன்றைக்குப் பல புதிய திட்டங்களை இதிலே சேர்த்துள்ளார்கள். அவைகளிலே இரண்டு முதல் ஐந்து வயது வரையுள்ள குழந்தைகளுக்கு பாமரிப்பு இல்லங்கள் ஏற்பாடு செய்யவேண்டுமென்பது ஒரு சிறந்த திட்டம். ஏனென்றால் கிராமங்களிலே ஏழைக் குடும்பங்கள் எங்கெங்கெல்லாம் இருக்கின்றார்களோ அங்கேயெல்லாம் குழந்தைகள் அதிகமாக இருக்கின்றன. பொதுவாகப் பார்க்குமிடத்து ஏழைக் குடும்பங்களில்தான் நிறைய குழந்தைகள் இருக்கின்றன. அவைகளை பராமரிப்பதற்கு பெற்றோர்களுக்கு போதிய வருமானம் இருப்பதில்லை. விவசாயக் குடும்பத்திலுள்ளவர்கள், தாயும் தகப்பனும் வெளியே நிலத்திற்குச் சென்று வேலை செய்யும் பொழுது, அவர்களுடைய குழந்தைகளுக்கு இதுவரையிலும் பராமரிப்பு வசதி இருந்தது கிடையாது. சென்ற நாலைந்து ஆண்டுகளிலே நமது மாநிலத்திலே சமூக நலத்திட்டம் ஒன்று உருவாக்கி அந்தத் திட்டத்தின் மூலமாக ஒரிரண்டு கிராமங்களிலே இம்மாதிரியான கேந்திரங்கள் ஏற்பாடு செய்யப்பட்டு நடந்து வருகின்றன. அதற்கு வேண்டிய மானியத் தொகையை கொடுப்பதற்கு அந்தந்த பிராந்தியத்திலுள்ள பொது நிறுவனங்களும், மாதர் சங்கங்களும் முன்வருமேயானால் அவற்றை அவர்களிடம் ஒப்படைத்துவிடலாம் என்றுகூட யோசித்துக் கொண்டிருக்கிறார்கள். இந்த நேரத்திலே அரசாங்கமே முன்வந்து அந்தக் குழந்தைகளுக்கு பராமரிப்புத் திட்டம் ஒன்று கொண்டுவருவது மிகவும் சந்தோஷப்பட வேண்டிய விஷயமாகும். இந்தக் குழந்தைகள் சரியான முறையிலே தாய் தந்தையரால் பராமரிக்கப் படாமல்

[Srimati Kamalambujammal] [12th December 1961

அழுக்குத் துணியுடன் ரஸ்தாக்களிலே விளையாடிக்கொண்டு, சுகாதார வசதி அற்ற முறையிலே இச் சின்னஞ்சிறுக்குழந்தைகள் சொறி, சிரங்கு முதலிய வியாதிகளால் அவதிப்படுவதை நாம் பார்க்கிறோம். இப்படிப்பட்ட குழந்தைகளை பராமரிப்பு சாலையில் வைக்கும்பொழுது அங்கே ஒரு கிராமசேவகி இருந்துகொண்டு அந்தப் பிள்ளைகளை பாதுகாப்பதற்கு வேண்டிய அளவுக்கு கண்காணித்து வருகிறார்கள். இது மிகவும் சிறந்த திட்டம். ஆகவே இந்தத் திட்டத்தை மிக விரைவில் எல்லா இடங்களிலும் விஸ்தரிப்பதற்கு வேண்டிய நடவடிக்கை எடுத்துக் கொள்ளுமாறு கேட்டுக் கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக ரூரல் ஹௌஸிங் ஸொசைட்டிகளை நாம் ஏற்பாடு செய்து கொண்டு வருகிறோம். நகர் புறங்களிலே ஒருவருக்கு பிளாட்டு மாத்திரம் சொந்தமாய் இருந்தால், அதன் பேரில் 4 அல்லது 5 மடங்கு கடன் கொடுக்கலாம் என்ற நிலைமை இருந்து வருகிறது. கிராமப் புறங்களில் அதே மாதிரி பிளாட்டு சொந்தமாய் இருந்தாலும், கடன் வாங்கக்கூடிய அளவுக்கு ஈடு காட்டக்கூடிய சொத்து இருக்கவேண்டும், என்று சொல்லக்கூடிய நிலைமை இருக்கிறது. வீட்டு மனை சொந்தமாக இருந்தால் கடை கால் போட்டவுடனே ஒரு கிராண்டு கொடுக்கிறோம். சுவர் எழுப்பிய பிறகு ஒரு தொகை கொடுக்கிறோம். பின்னர் கட்டிடம் முடிவடைந்த பின்னர் பாக்கியுள்ள தொகை கொடுக்கிறோம். மொத்தமாக கொடுப்பதில்லை. அப்படி இருக்கும்பொழுது கடன் வாங்கக்கூடிய நபர் கட்டிடத்தை கட்டாமல் சும்மா இருப்பாரா? கட்டடம் கட்டி முடிந்த பிறகு அந்தக் கட்டிடத்தையே செக்யூரிட்டியாக வைத்துக்கொண்டு கடன் கொடுக்க முன் வருவார்களேயானால் இந்த சொஸைட்டிகள் நல்ல முறையிலே வேலை செய்யும். அங்குள்ள ஏழைமக்களுக்கு ஒரு நல்ல வாய்ப்பை ஏற்படுத்திக் கொடுத்ததாகவும் இருக்கும். ஒரு ஏக்கர் அல்லது அரை ஏக்கர் நிலம் வைத்திருக்கக்கூடிய விவசாயி அந்த நிலத்தை அடமானமாக வைத்து ஏற்கெனவே கடன் வாங்கியிருந்தால், இந்த வீடு கட்டும் திட்டத்தின் கீழ் அவர் மறுபடியும் கடன் வாங்க முடியாது. தவிர மேலும் சில சிக்கல்களும் இருக்கின்றன. 26 வருஷ காலத்திற்கு வில்லங்க சர்டிபிகேட்டு வாங்கவேண்டும். அதுவும் 2, 3 முறைகள் வாங்கவேண்டியிருக்கிறது. ஆகவே இந்த மாதிரியான விதி முறைகளை தளர்த்தினல் கிராமப் புறங்களில் இருப்பவர்களுக்கு உதவி செய்தவர்களாக இருப்போம், என்று தெரிவித்துக் கொள்ளுகிறேன். இது விஷயமாக அரசாங்கம் கவனிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

இப்பொழுது அரசாங்கத்திலே டிராக்டர் கொடுக்கும்பொழுது ஒரு மணி நேரத்திற்கு 25 ரூபாய் சார்ஜ் பண்ணுவதாய் தெரிகிறது. இதை 35 ரூபாயாக ஆக்குவதற்கு யோசனை இருப்பதாக இருக்கிறது. நல்ல முறையிலே உற்பத்தி பெருக வேண்டுமென்று நாம் நினைக்கும்பொழுது ஒரு டிராக்டருக்கு 35 ரூபாய் சார்ஜ் செய்தால் அது எல்லா விவசாயிகளுக்கும் பாதகமாக இருக்கும். அதிகப்படியாக நிலம் வைத்துக் கொண்டிருப்பவர்கள் தான்

12th December 1961] [Srimathi Kamalambujammal]

டிராக்டர்களை வைத்துக் கொண்டு உழுகின்றார்கள். ஒரு மணிக்கு மேற்கொண்டு பத்து ரூபாய் அதிகமாக வாங்கினால் அது விவசாயத்தை பாதிக்கக்கூடிய அளவிலே இருக்கும். அதையும் கவனிக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

இன்று காலை கேள்வி நேரத்தில் கனம் அங்கத்தினர் திரு. கே. விநாயகம் அவர்கள் புலிதிவாக்கம் என்னும் ஊரில் ஒரு விதைப் பண்ணையை நிறுவினால் என்ன என்று கேட்டார்கள். எல்லா இடங்களிலுமே விதைப் பண்ணைகள் தேவையாயிருக்கின்றன. இன்றைக்கு நம்முடைய மாநிலத்திலே போதுமான அளவுக்கு விதைப் பண்ணைகள் இல்லை. விவசாயிகளுக்கு நல்ல விதைகள் கிடைப்பது அரிதாக இருக்கிறது. ஒவ்வொரு தாலுக்காவிற்கும் ஒரு விதைப் பண்ணை என்ற முறையிலே ஆங்காங்கு விதைப் பண்ணைகளை ஏற்படுத்திக் கொடுத்தால் உண்மையிலேயே மகசூலைப் பெருக்குவதற்கு உதவியாக இருக்குமென்று தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

இந்த சந்தர்ப்பத்தில் என்னுடைய தொகுதியிலுள்ள அம்யுனிஷன் டெப்போவைப் பற்றியும் அங்கேயுள்ள நிலங்களைப் பற்றியும் ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். மத்திய அரசாங்கத்தார் 2, 3 கிராமங்களை காலி செய்து அந்த இடத்தை எடுத்துக் கொண்டார்கள். ஆனால் இன்று அந்த இடம் மத்திய சர்க்கார் உபயோகத்திலும் இல்லை. நமது ராஜ்ய சர்க்கார் உபயோகத்திலும் இல்லாமல் அப்படியே பாழாக்கப்பட்டிருக்கிறது. உடனடியாக அதை விவசாயிகளுக்கு கொடுத்துவிடுவார்களேயானால் விவசாயிகள் நல்ல முறையில் உற்பத்தி செய்வதற்கு ஊக்கமளித்ததாக இருக்கும் என்பதைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். இல்லை என்று சொன்னால் இன்றைக்கு அவர்களுக்கு அன்று கொடுத்த பதினைந்து ரூபாய்தான் கொடுத்துக்கொண்டு வருகிறார்கள். இன்றைக்கு ஒரு ஏக்கரில் விளையக்கூடிய நெல் சுமார் 250 அல்லது 300 ரூபாய் வரையில் விற்கப்படுகிறது. அந்தக் காலத்தில் இருந்த விலைப்படியே இன்றைக்கும் கொடுத்து வந்தால் அவர்களுக்கு அதனால் பாதகம் ஏற்படுகிறது. இன்றைக்கும் அவர்களுக்கு 15 ரூபாயே கொடுத்துக்கொண்டிருப்பதால் அவர்கள் மிகவும் கஷ்டப்படுகிறார்கள். ஒன்று நிலங்களை அவர்களிடத்திலேயே கொடுத்து விடலாம். அப்படிக் கொடுத்து விட்டாலும்கூட அவர்கள் அதை வைத்துக்கொண்டு ஏதாவது ஜீவனத்திற்கு வழி தேடிக்கொள்வார்கள். ஆகவே மாநில சர்க்கார் மத்திய சர்க்காருக்கு எழுதி இதைப்பற்றி சிபாரிசு செய்ய வேண்டும் என்று இந்தச் சந்தர்ப்பத்தில் கேட்டுக் கொள்ளுகிறேன். 11 a.m.

இந்த பட்ஜெட்டில் இன்னொரு நல்ல திட்டம் இருக்கிறது. அதாவது 65 வயது வந்தவர்களுக்கு இருபது ரூபாய் உபகாரச் சம்பளமாகக் கொடுப்பது என்பது. வயோதிகர்கள் பிழைப்பதற்கு இது ஒரு நல்ல திட்டமாகும். சில இடங்களில் சம்பாதித்துக் கொண்டிருக்கக்கூடிய பிள்ளைகள் தாய் தந்தையர்

[Srimathi Kamalambujammal] [12th December 1961

களை கவனிக்காமல் விட்டு விடுகிறுர்கள். அப்படிப்பட்டவர்கள் பேரில் அரசாங்கமே தக்க நடவடிக்கை எடுத்து அவர்களுடைய சம்பாத்தியத்திலிருந்து ஒரு பகுதியை எடுத்து இந்த வயோதியர் களுக்கு கொடுக்கும் அளவில் ஒரு திட்டம் சர்க்காருடைய ஆலோசனையில் இருப்பதாகக்கூட கேள்விப்பட்டேன். இப்படிப் பட்ட ஒரு திட்டம் அரசாங்கத்தின் ஆலோசனையில் இருந்தால் அதை சீக்கிரத்தில் அமுலுக்குக் கொண்டு வரவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். இதனுல் சுமார் பத்தாயிரம் பேர் களுக்கு மேல் சலுகை கிடைக்கும் என்று இருப்பதால் இது ஒரு சிறந்த திட்டம் தான் என்றே சொல்லலாம். ஏனென்ருல் இப்படி பொறுப்பு இல்லாமல் இருக்கக்கூடியவர்களை கட்டுப்படுத்தி அவர் களுடைய சம்பாத்தியத்தில் ஒரு பகுதியை எடுத்து கொடுக்கும் அளவில் இருக்கவேண்டும். இப்படி எல்லாம் செய்யா விட்டால் வயோதிகர்களை கவனிக்கக்கூடிய பொறுப்பு பலருக்கு இல்லாமல் போய் விடும். ஆகவே இதை நல்ல முறையில் அமுல் நடத்து வதற்கு அனுதைக் குழந்தைகளுக்கு நாம் எப்படி விடுதிகளை அமைத்து அவர்களை பராமரிக்கினருேமோ அதேமாதிரி வயோதி கர்களுக்கும் விடுதிகளை அமைத்து அதில் வந்து சேரக்கூடியவர் களுக்குத்தான் உதவி தொகை கொடுக்கப்படும் என்று சொன்னுல் அதற்கு அதிகம் பேர்கள் வரமாட்டார்கள். அப்படி இல்லாமல் வீட்டிலேயே இருந்து கொண்டு இருக்கிறவர்களுக்குக் கொடுக்கப் படும் என்று சொன்னுல் அவர்கள் எப்படியாவது சர்ட்டிபிகேட் வாங்கி வந்து கொடுத்து விட்டு உதவி தொகையை பெற முன் வந்து விடுவார்கள். அவர்களைக் காப்பாற்றக்கூடிய பிள்ளை களுக்கும் பொறுப்பு இல்லாமல் போய் விடும். இதற்கு அரசாங் கம் இடம் கொடுக்கக்கூடாது. ஆகவே அவர்களுக்கு என்று தனியாக விடுதிகளை அமைத்தால் அவ்வளவாக அதில் வந்து சேர மாட்டார்கள். உண்மையாக இந்தச் சலுகை பெறக்கூடிய வர்கள்தான் அதற்கு தகுதி உடையவர்கள்தான் வருவார்கள். அந்த முறையில் இந்த திட்டத்தை மாற்றி அமைக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அதைப்போலவே அங்கஹீனர்கள் 60 வயது வாழ்வார்கள் என்பது இல்லை. ஆகவே அவர்களுக்கும் உதவி கொடுப்பதற்கு வயதை நிர்ணயம் செய்திருப்பது சரியல்ல. எவ்வளவோ அங்க ஹீனர்களுக்கு தொழில் செய்ய முடியாமல் இருக்கிறுர்கள். அவர் களைக் காப்பாற்ற வேண்டியது அவசியமாக இருக்கிறது. அதனுல் அவர்களுக்கு என்று தனியாக விடுதிகளை அமைத்து அவற்றில் அவர்களைச் சேர்த்து வைத்து அவர்களுக்கு வசதி செய்து கொடுக் கலாம். அவர்களுடைய வயதை நிர்ணயம் செய்வது சரியல்ல. எந்த வயதில் அங்கஹீன முள்ளவர்கள் ஆகிறுர்கள் என்று சொல்லமுடியாது. சிலர் பிறக்கும்போது அங்கஹீனமுள்ளவர் களாக இருக்கிறுர்கள். சிலர் பிறந்த பின் அங்கஹீனமடை கிறுர்கள். ஆகவே இதற்கு அரசாங்கம் உடனடியாக தனி விதி அமைக்க நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

12th December 1961] [Srimathi Kamalambujammal]

கனம் நிதி அமைச்சர் அவர்கள் இந்த நிதி நிலே அறிக்கையை கொண்டுவந்தபோது இது கடைசி அறிக்கை என்று குறிப்பிட்டார். இருந்தாலும் இந்த ஐந்து வருஷ காலமாக நமது ராஜ்யத்தில் நிதி நிலேயை அவர் நல்ல முறையில் கண்காணித்து வந்திருப்பதைக் கண்டு அவரை நாம் பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறோம். இந்த ராஜ்ய நிதி நிலேயை நல்ல முறையில் கண்காணித்து சட்டசபைக்கு நல்ல திட்டங்களைக் கொண்டுவந்து அவற்றையும் ஒழுங்கான முறையில் நிறைவேற்றியும் இருக்கிறார். அதற்கு அவரை பாராட்டுவதோடு அதற்கு உறுதுணையாக இருந்த அந்தந்த இலாகா அதிகாரிகளுக்கும் எங்களுடைய மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொண்டு, இத்துடன் என்னுடைய உரையை முடித்துக்கொள்கிறேன்.

* SRI V. SUBBIAH: கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த இடைக்கால நிதி நிலே அறிக்கையைப் பார்த்து எல்லோரும் கனம் நிதி அமைச்சரைப் பாராட்டுகிறார்கள். அவருடைய திறமையைக் கண்டு அவரைப் பாராட்டக்கூடியதாக இருக்கிறதே தவிர வேறு ஒன்றும் இல்லே. அவருடைய திறமையைத்தான் அதில் அவர் காட்டியிருக்கிறார். குறிப்பாக மூன்று ஐந்தாண்டு திட்டங்களைக் கொண்டு வந்து நிறைவேற்றி இருக்கிறார். பல துறைகளில் பல கோடி ரூபாய்களைச் செலவு செய்தாலும்கூட இன்றைக்கு விவசாயிகளுடைய நிலேமை எந்த அளவிலும் உயரவில்லே என்று தான் சொல்ல வேண்டும். விவசாயத்துறைக்கு ஒதுக்கப்பட்ட பணம் பூராவும் அந்த துறையில் இருக்கக்கூடிய விவசாயிகளுக்கு பயன் தரக்கூடிய அளவில் செலவு செய்யப்படவில்லே என்றுதான் சொல்ல வேண்டும். நடுத்தர விவசாயிகளுக்கு எந்த வகையிலாவது பயன்பட்டிருக்கிறதா என்று பார்த்தால் கிடையாது என்றுதான் சொல்ல வேண்டும். நான் பரம்பரை விவசாயியாக இருப்பதால் கிராமங்களில் இருக்கக்கூடிய விவரங்களை எடுத்துச் சொல்ல வேண்டியதாக இருக்கிறது. சுமார் பதினைந்து வருஷ காலமாக சுதந்திர ஆட்சி நடைபெற்று வருகிறது. பல துறைகளில் பணம் ஒதுக்கப்பட்டு செலவு செய்யப்பட்டும் வருகிறது. அப்படி செலவு செய்தும்கூட விவசாயிகளுக்கு வேண்டிய அளவில்—கேட்கக்கூடிய அளவில் உரம் கிடைக்கிறதா என்று பார்த்தால் கிடையாது. 100-க்கு பத்து பேர்களுக்குத்தான் கிடைக்கிறது என்று சொல்லலாம். அதுவும் சர்க்கார் நிர்ணயித்திருக்கிற கண்ட்ரோல் விலேக்குக் கிடைக்கிறதா என்றால் அதுவும் இல்லே. விவசாயிகளுக்கு என்று அநேகம் விவசாயக் கருவிகள் ஒதுக்கப்படுகின்றன. அவைகளாவது அவர்களுக்குக் கிடைக்கிறதா என்றால் அதுவும் இல்லே. எனக்குத் தெரிந்த வரையில் அவர்களுக்குக் கிடைக்கவில்லே. அந்த அளவில் கிராம வாழ்க்கையின் தரம் குறைந்து போய்விட்டது. ஆனால் நகரங்களில் இருக்கக்கூடியவர்கள் நல்ல வாழ்க்கை நடத்துகிறார்கள். தொழில் துறையில் வேலே செய்யக்கூடியவர்களுக்கு நல்ல கூலி கிடைக்கிறது. ஆனால் விவசாயத்தில் ஈடுபட்டவர்களுக்கு நல்ல கூலி கிடைப்பதாகவே இல்லே. அதனால்தான் கிராமங்களில்

[Sri V. Subbiah] 12th December 1961

உள்ள விவசாயிகள் நகரங்களை நோக்கிப் போய்க்கொண்டிருக்கிறார்கள். அப்படி விவசாயிகள் நகரங்களுக்குப் போனாலும் நல்லதுதான். இன்றைய தினம் அதற்கு வேண்டிய வசதி அவர்களுக்குக் கிடைக்கவில்லை. ஆனால் காந்தியடிகள் என்ன சொன்னார் என்பதை கவனிக்க வேண்டும். நாட்டில் தொழில் இருக்க வேண்டுமானால் அவைகளைப் பரவலாக கிராமப் பகுதிகளில் ஆரம்பிக்க வேண்டும் என்று சொன்னார். அப்படி நடக்கிறதா என்றால் எனக்குத் தெரிந்த வரையில் அப்படி நடக்கவில்லை. இன்றைக்கு கிராமத்திலுள்ள விவசாயிகளுக்கு என்ன கூலி கிடைக்கிறது என்பதையும் அதே மாதிரி நகரங்களில் வேலை செய்யக்கூடிய தொழிலாளர்களுக்கு ஒரு நாளைக்கு எவ்வளவு சம்பளம் கிடைக்கிறது என்பதையும் சிந்தித்துப் பார்க்க வேண்டும். நெற்றி வியர்வை நிலத்தில் விழ விவசாயி நிலத்தில் எட்டு மணி நேரம் பாடுபட்டால் அவனுக்கு பத்து அல்லது பனிரெண்டு அணா கிடைக்கிறது. அதே நேரத்தில் நகரங்களில் வேலை செய்யக்கூடிய தொழிலாளிகளுக்கு அதே எட்டு மணி நேரத்தில் ஐந்து ரூபாய் கிடைக்கிறது. அதனால் தான் கிராமங்களில் உள்ளவர்கள் நகரங்களை நோக்கி குடியேறுகிறார்கள். இதைக் கொஞ்சம் சிந்தித்துப் பார்க்க வேண்டும். நாட்டிலுள்ள எண்பது சத விகித விவசாயிகள் இந்த நிலைமையில் தான் வாழ்ந்து வருகிறார்கள். இன்றைக்கு அரசாங்கம் விவசாயத் துறையில் பல கோடி ரூபாய் ஒதுக்கினாலும்கூட விவசாயிகளுக்கு எந்தவிதமான பயனும் கிடைக்கவில்லை. இரண்டு ஐந்தாண்டுத் திட்டம் போட்டு நிறைவேற்றியும்கூட அவர்களுக்கு எந்த விதமான பயனும் கிடைக்கவில்லை. இன்னும் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் வேறு போட்டாகி விட்டது. அப்பொழுது என்ன செய்யப் போகிறார்களோ தெரியவில்லை. இப்பொழுதே விவசாயிகளுக்கு கிராமங்களில் போதிய கூலி கிடைப்பதில்லை. அதனால்தான் விவசாயிகள் நகரங்களில் குடியேறுகிறார்கள். இது நீடித்துக்கொண்டே போனால் அது எதில் கொண்டு போய்விடும் என்பதை சிந்தித்துப் பார்க்கவேண்டும். கிராமங்கள் அழிந்துதான் போகும். நகரங்கள் நன்றாக வாழும். அப்படி வாழ்ந்தால் அதைக்கண்டு நாங்கள் பெருமை தான் படுவோம். லட்சக்கணக்கான மக்கள் விவசாயத்தை நம்பி வாழ்ந்து வருகிறார்கள். அவர்களுக்கு இந்த பட்ஜெட்டில் ஏதாவது செய்யப்பட்டிருக்கிறதா என்பதை கொஞ்சம் சிந்தித்துப் பார்க்க வேண்டும். நகரங்களில் உள்ளவர்களுடைய வாழ்க்கைத்தரம் உயர்ந்துகொண்டே போய் கிராமங்களில் உள்ளவர்களுடைய வாழ்க்கைத்தரம் குறைந்துகொண்டே போனால் அது கடைசியில் எதில் கொண்டு போய் விடும் என்பதை சிந்தித்துப் பார்க்க வேண்டும். உண்மையிலேயே இந்த மந்திரி சபையை போற்றுகிறார்கள். ஆனால் அந்த அளவில் அது நடைபெறவில்லை என்றுதான் தோன்றுகிறது. இவ்வளவு பாராட்டுதலை பெற்ற அரசாங்கத்தின் இலாகாவில் எவ்வளவோ குறைபாடுகள் இருக்கின்றன. இன்றைக்கு நாட்டிலேயே மிகவும் முக்கியமான இலாகா ரிவினியூ இலாகா. அதில்

12th December 1961] [Sri V. Subbiah]

ஒரு பகுதி சர்வே டிபார்ட்மெண்ட் உத்யோகஸ்தர்களை அதில் டெம்பரவரியாகவே வைத்துக் கொண்டிருக்கிறார்கள். பத்து வருஷ காலமாகவே அவர்களுக்கு விமோசனம் கிடைப்பதாகவே இல்லை. திக்கற்ற முறையில் அவர்கள் இருக்கிறார்கள். அவர்களைப் பற்றி அரசாங்கம் கவனம் எடுத்துக்கொள்ள வேண்டும். மற்றும் எத்தனையோ இலாகாக்களில் வேலை செய்யக்கூடிய எத்தனையோ பேர்கள் திறமைசாலிகளாக இருக்கிறார்கள். அவர்களுக்கு எந்த விதமான ப்ரமோஷனும் கிடைக்கவில்லை. அவர்கள் வேலையில் திறமைசாலிகளாக இருந்தாலும்கூட அவர்களுக்கு ப்ரமோஷன் கிடைக்கவே இல்லை. அவர்களுக்கு எந்த விதத்திலும் சம்பள மாறுதல் கிடைக்காமல் இருக்கிறார்கள். பே கமிஷன் வந்தது. எவ்வளவோ சிபாரிசுகள் செய்திருக்கிறார்கள். ஆனால் அவர்கள் சர்வே டிபார்ட்மெண்டிற்கு எந்தவிதமான சிபாரிசும் செய்ததாகத் தெரியவில்லை. அவர்கள்தான் விட்டுவிட்டார்கள் என்றால் அரசாங்கமாவது அதைக் கவனித்து அவர்களுக்கு ஏதாவது செய்திருக்கலாம். ஆனால் அப்படிச் செய்ய அரசாங்கம் இது வரையிலும் முன்வரவில்லை.

என்னுடைய தொகுதியைப்பற்றிக் கொஞ்சம் சொல்லாமல் இருக்கமுடியவில்லை. என்னுடைய தொகுதியானது திருநெல்வேலி ஜில்லாவிலேயே வானம் பார்த்த பூமி; வரண்ட பிரதேசம். மழை பெய்தால்தான் அங்கு வாழ முடியும். இந்த நாட்டிலேயே உயர்ந்த ரக இழையுள்ள கருங்கண்ணிப் பருத்தி விளையும் இடம் எங்கள் பகுதியாகும். என்னுடைய தொகுதி மிக முக்கியமான தொகுதியாகும். சரித்திரத்திலேயே முக்கியத்துவம் வாய்ந்தது. மகாகவி பாரதியார் பிறந்த இடமாகிய எட்டையபுரம் என்னுடைய தொகுதியில் இருக்கிறது. கப்பலோட்டிய தமிழர் எங்கள் ஊரில் வக்கீலாகப் பல ஆண்டுகள் வாழ்ந்திருந்தார். எங்கள் தாலூகாவிலே பிறந்தவர் அவர். அது மட்டுமல்ல. வீர பாண்டிய கட்டபொம்மனும் எங்கள் தாலூகாவாசிதான். அந்த அளவிலே உள்ள ஒரு பெரிய தாலூகாவின் தலைநகரத்திற்கு இந்த அரசாங்கம் மூன்றாவது திட்டத்தில் என்ன செய்திருக்கிறது? கோயில்பட்டியில் 45 ஆயிரம் மக்கள் வாழ்கிறார்கள். பெரிய இயந்திரச் சாலைகள் இருக்கின்றன. இரண்டு நெசவு மில்களும் நூற்பு மில்களும் இருக்கின்றன. பிரிட்டிஷார் காலத்திலேயே கால்நடைப் பண்ணையும் விவசாயப் பண்ணையும், ஆராய்ச்சிப் பண்ணையும் இருந்திருக்கின்றன. தீப்பெட்டித் தொழிற்சாலை, போல்ட்டு நட்டு செய்யும் தொழிற்சாலை இருக்கிறது. காட்டன் ஜின்னிங் பாக்டரி, ஸ்பின்னிங், வீவிங் மில்கள் இருக்கின்றன. தொழிலாளர்கள் பெருத்த ஒரு பெரிய நகரம். தொழிலாளர் இன்ஷ்யூரன்ஸ் திட்டம்கூட அங்கே அமுலில் இருக்கிறது. அந்த இடத்தில் இருக்கும் ஆஸ்பத்திரி மிகப் பரிதாபகரமான நிலையில் இருக்கிறது. அதுபற்றி ஒரு கேள்வி இங்கே எழுப்பப்பட்டது. அந்த ஆஸ்பத்திரி ஐதர் காலத்தில் கட்டப்பட்டதோ என்று சொல்லக்கூடிய பழைய காலத்து ஆஸ்பத்திரி. ஜில்லா போர்டார் எப்பொழுதோ கட்டியது அது. அதில் படுக்கை வசதி கிடையாது

[Sri V. Subbiah] [12th December 1961

நாலரை லட்சம் மக்கள் அந்தப் பிராந்தியத்தில் இருக்கிறுர்கள். என்றுலும் தலைநகரத்திலுள்ள அந்த ஆஸ்பத்திரியின் நிலைமை மிக மட்டமாக இருக்கிறது. நோயாளிகள் வீட்டிலிருந்து பாய் எடுத்துக் கொண்டுவந்து வராந்தாவில் படுக்கிறுர்கள். மரத் தடியிலும் படுக்கக்கூடிய நிலை இருக்கிறது. அந்த ஆஸ்பத்திரியில் புதிய மாறுதல்கள் ஏற்படுத்துவதற்காக அதிகமான படுக்கை வசதிகள், ஆபரேஷன் தியேட்டர்கள், எக்ஸ்ரே மெஷின்கள் போன்றவை வைக்கவேண்டுமென்று டி.எம்.எஸ். அவர்கள் கை எழுத்திட்டு அனுப்பிய திட்டம் சென்ற வருஷம் அரசாங்கத்தினு டைய அங்கீகாரத்திற்காக அனுப்பிவைக்கப்பட்டது. இதுவரை அந்தத்திட்டம் அங்கீகாரம் செய்யப்படவில்லை. அந்தப் பேப்பர் எங்கே இருக்கிறது என்றுகூடத் தெரியவில்லை. இதெல்லாம் பார்க்கும்போது, தாமதத்திற்குக் காரணம் அரசியல் நோக்கமா என்றுகூட சந்தேகிக்கவேண்டியிருக்கிறது. அல்லது, அரசாங் கத்திலுள்ள அமைச்சர்களின் கவனக் குறைவா என்று கூடத் தெரியவில்லை. கிட்டத்தட்ட ஒரு வருஷ காலம் ஆகிறது. ஒரு பேப்பர் டி.எம்.எஸ்.-ஆல் கையெழுத்திட்டு அரசாங்கத்தின் அங்கீ காரத்திற்கு வந்திருந்தும் அதுபற்றி ஒன்றுமே தெரியவில்லை.

குடி தண்ணீர்த் திட்டம் எங்கள் பகுதிக்கு 30 மைல், 40 மைல் தூரத்திலுள்ள தாம்பிரபரணியிலிருந்து கொடுக்கலாம். பத்தா வது மைலில் வைப்பாறு இருக்கிறது. அங்கிருந்து தண்ணீர் கொடுக்கலாம். வருமானமே இல்லாத, ஜனத்தொகை குறைந்த சின்னப் பஞ்சாயத்துக்களுக்கெல்லாம் மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தில் குடி தண்ணீர்த் திட்டம் சேர்க்கப்பட்டிருக்கிறது, ஆனுல், கோவில்பட்டி நகரம் விடப்பட்டிருக்கிறது என்றுல், இது எவ்வளவு வருந்தத்தக்க நிலை என்பதை அமைச்சர் அவர்கள் மன தில் வைத்துக்கொண்டு இதற்கெல்லாம் எதிர்காலத்திலாவது ஏதா வது வழி செய்யவேண்டும்.

அதுமட்டுமல்ல. கிராமாந்திரத்திலே போக்குவரத்துக்கான ரோடுகள் மோசமாக இருக்கின்றன. பஞ்சாயத்து யூனியன் கவுன் சிலின் பொறுப்புக்கு கிராம ரோடு பராமரிப்பு வந்த பிற்பாடு, பல மைல் ரோடுகள் மராமத்து செய்யப்படாமலிருக்கின்றன. மழை காலத்தில் கட்டை வண்டியிலோ நடந்தோ கூட போக முடியாதபடி முழங்கால் அளவுக்குச் சகதி இருக்கிறது. மெடல் ரோடின் நிலையே இப்படி இருக்கிறது. இவைகளையெல்லாம் செப்பனிடுவதைவிட்டு எங்கெங்கோ அனுவசியமாகப் பணம் செலவழிக்கப்படுகிறது. லட்சக்கணக்கான ரூபாய்களைச் செல விட்டும் கிராமங்களில் விவசாயிகளுக்கு அனுகூலமாக நல்ல ரோடு போட முடியவில்லை. பஞ்சாயத்து யூனியன்கள் பராமரிப்பு செய்ய முடியாத அளவிலே இருக்கின்றன. அரசாங்கம் இதில் முக்கிய மாகக் கவனம் செலுத்தவேண்டும். மிகவும் பிற்போக்கான பகுதி களிலும், குறிப்பாக கரிசல் பகுதியிலும் நல்ல ரோடுகள் ஏற்படுத்தி நல்ல முறையில் பராமரிக்கவேண்டும். பஞ்சாயத்து களையே நம்பி இந்தப் பொறுப்புகள் எல்லாவற்றையும் அவர்களிடமே விட்டுவிடக்கூடாது.

12th December 1961] [Sri V. Subbiah]

கிராமங்களில் பஞ்சாயத்துக் கோர்ட்டுகள் இல்லாத குறை இருக்கிறது. சின்னச் சின்ன விவகாரங்கள், கொடுக்கல் வாங்கல்கூட, முன்சிப் கோர்ட்டுக்குப் போகக்கூடிய அளவுக்கு வந்துவிட்டது. இதற்கு அவசியம் ஏதாவது ஒரு ஏற்பாடு செய்ய வேண்டும். கிராமத்தில் ஏற்படும் கேஸ்கள் அங்கங்கேயுள்ள பஞ்சாயத்துக் கோர்ட்டிலே தீர்க்கப்படக்கூடிய அளவில் உடனடியாக ஏற்பாடு செய்யவேண்டும் என்று தெரிவித்துக் கொள்கிறேன். இப்படிப் பல சில்லரை விஷயங்களிலும் அரசாங்கம் கவனம் செலுத்தாமல் இருக்கிறது. பொதுவாகப் பார்த்தால், இந்த நிதி நிலை அறிக்கை நன்ருகத் தயாரிக்கப்பட்டிருக்கிறது என்பதைக் குறித்துப் பாராட்டாமல் இருக்க முடியவில்லை. ஆனல், எந்த நோக்கத்தோடும் இந்த பட்ஜெட் தயாரிக்கப்பட்டதோ அந்த நோக்கம் நிறைவேறவில்லை. காந்தியடிகளின் லட்சியத்தின்படி சர்வோதய வாழ்வு இந்த பட்ஜெட்டின் மூலம் ஏற்படும் என்பதை ஒப்புக்கொள்ள முடியாது. காந்தியடிகளின் கனவுக்கு மாறுபட்ட ஒரு நிதி நிலை அறிக்கை என்று இதைச் சொல்லி, என்னுடைய உரையை முடித்துக் கொள்கின்றேன்.

* SRI S. RAMALINGA PADAYACHI : *சட்ட மன்ற உதவித் தலைவர் அவர்களே 1962-63 ஆண்டுக்கான இடைகால வரவு செலவுத் திட்டத்தை ஆதரித்துச் சில வார்த்தைகள் நான் சொல்ல விரும்புகிறேன். நான் இந்தச் சபைக்கு வந்தபோது இருந்த நிதி நிலையைவிட இப்பொழுது ஏறத்தாழ இரண்டு மடங்கு உயர்ந்திருக்கிறது என்பதைக் குறித்து நான் மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன். சுமார் 99 கோடி 67 லட்ச ரூபாய்க்குத் திட்டமிடப்பட்டிருக்கிறது. இது 100 கோடியாகவில்லையே என்ற ஒரு எண்ணம் வருகிறது. இன்னும் ஒரு 33 லட்ச ரூபாய் வந்துவிட்டால் 100 கோடி ரூபாயாக இருக்குமே என்ற எண்ணம் வரத்தான் செய்கிறது. இப்படி எண்ணுவது இயற்கைதான். ஆனல், இந்த அளவுக்கு வரவு செலவுத் திட்டம் அமைத்திருப்பது போற்றத் தக்கது.*

இவ்வளவு சிறப்பாகத் திட்டமிட்டிருந்தபோதிலும், எதிர்கட்சியிலே இருப்பவர்கள் சிலர் முதலில் தூற்றியும் கடைசியில் பாராட்டியும் பேசியிருக்கிறார்கள். அவர்கள் தூற்றிப் பேசாமலிருக்க முடியவில்லை. காரணம் தேர்தல் சமீபத்தில் வருவதுதான். வேறொன்றுமில்லை. என்னதான் தூற்றிப் பேச வேண்டுமென்று ஆரம்பித்தாலும் கடைசியில் பாராட்டாமல் அவர்களால் இருக்க முடியவில்லை. அந்த அளவுக்குத் திட்டம் முன்னேற்றமாக இருக்கிறது. எதிர்கட்சியிலுள்ளவர்கள் சில குறைபாடுகளையும் சொல்ல நினைக்கிறார்கள்.

இந்த அறிக்கையில் 100 முக்கியமான திட்டங்கள் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. ஐந்து ஆண்டுக் காலத்திலே காண முடியாத ஒரு பெரிய அளவுக்கு—எல்லோரும் பெருமைபடக்கூடிய அளவுக்கு இந்த பட்ஜெட் அமைந்திருக்கிறது .சுமார் 100 கோடி ரூபாய் செலவிடுவதால் கஷ்டப்படுகிற மக்களும் சுக வாழ்வு வாழ வழி வகுக்கப்பட்டிருக்கிறது.

[Sri S. Ramalinga Padayachi] [12th December 1961

" இயற்றலும் ஈட்டலுங் காத்தலுங் காத்த
வகுத்தலும் வல்ல தரசு "

என்பது திருக்குறள். அந்த முறையில் பொருள் வரும் வழியைத் தேடி, தேடிய பொருளை நல்ல முறையில் செலவு செய்யத் திட்டமிடப்பட்டிருக்கிறது இந்த பட்ஜெட்டில். இதற்கெல்லாம் காரணம் நமது நிதி அமைச்சருடைய திறமைதான். அவருடைய திறமையினால் இந்த பட்ஜெட் நல்ல முறையில் அமைக்கப்பட்டிருக்கிறது. மக்களுக்குப் பயன்படக்கூடிய முறையில் செலவினங்கள் வகுக்கப்பட்டிருக்கின்றன. இதைக் குறித்து எதிர்க்கட்சியிலே இருப்பவர்களும் பாராட்டாமல் இருக்க முடியவில்லை.

" தக்கார் தகவிலர் என்ப தவரவர்
எச்சத்தாற் காணப் படும் "

என்றபடி யாரும் மதிக்கக்கூடிய முறையில் இந்தத் திட்டம் அமைந்திருக்கிறது. மக்களெல்லாம் புகழக்கூடிய முறையில் நடுநிலைமையிலிருந்து இந்தத் திட்டம் தயாரிக்கப்பட்டிருக்கிறது. சட்டசபையில் எதிர்கட்சியினர் இதைக் குறை சொன்னாலுங்கூட, இதைப்பற்றி முடிவு கூற வேண்டியவர்கள் பொது மக்கள். அவர்களுடைய முடிவுக்கு இதை விட்டுவிடலாம். இதற்குப் பொது மக்கள் ஆதரவு நிச்சயமாகத் தர இருக்கிறார்கள். ஒவ்வொரு ஆண்டிலும் அவர்கள் பார்த்துக் கொண்டுதான் இருக்கிறார்கள். இந்த பட்ஜெட்டைப் பற்றியும் அவர்கள் ஆராய்ந்து, வருகிற பிப்ரவரி மாதத்திலே முடிவு சொல்லத் தயாராயிருக்கிறார்கள். இந்த நிதி நிலை அறிக்கை நல்ல முறையில், மக்கள் வரவேற்கத் தக்க முறையில் அமைந்திருக்கிறது என்பதில் சந்தேகமில்லை.

ஆறு முதல் பதினோரு வயது வரையுள்ள பிள்ளைகளுக்குக் கட்டாயக் கல்வி கொடுக்கத் திட்டமிட்டிருப்பதைக் குறித்து நான் மிகவும் சந்தோஷப்படுகிறேன். மதிய உணவுத் திட்டத்தைக் குறித்து எனக்கு ஒருசிறு குறைபாடு தோன்றுகிறது. அதாவது, மதிய உணவு கொடுப்பதை இன்னும் சற்று விஸ்தரிக்கவேண்டும். எந்தவிதமான வருவாயும் இல்லாமல் இருப்பவர்கள், தினமொன்றுக்கு முக்கால் ரூபாய் கூலிக்கு உழைத்து ஜீவனம் செய்கிறவர்கள் இவர்களுடைய குழந்தைகளுக்குக் காலையிலும் உணவு கொடுக்கப்படவில்லையே என்ற ஒரு எண்ணம் எனக்கு இருக்கிறது. காலை உணவு கொடுக்கும் திட்டமும் இருந்தால் தேவலாம். இதில் ஒன்றும் அதிகமாகச் செலவாகாது. ஒரு ஊரில் 1,000 ஜனமிருப்பதாக வைத்துக் கொண்டால் 100 அல்லது 120 பிள்ளைகள் தான் படிக்கும் வயதில் இருப்பார்கள். இதில் பத்து அல்லது இருபது மாணவர்களுடைய பெற்றோர்கள் தான் நிலபுலம் இல்லாமல் கூலி வேலை செய்பவர்களாக இருப்பார்கள். ஒரு மாணவனுக்கு மதிய உணவு திட்டத்தில் கொடுக்கும் ரூ. 13.75 என்றால் இந்த நிலைமையில் இருக்கும் ஏழை பிள்ளைகளுக்கு ஆகும் செலவு ஒரு கோடி ரூபாய் ஆகும். ஒரு நாளைக்கு ஒரு படி, ஒன்னரைப்படி, கூலிக்கு வேலை செய்து புருஷன், மனைவி, குழந்தைகள் என்று எல்லோரும் சாப்பிடவேண்டும். இந்தக் கஷ்டத்தினால் பிள்ளைகயும்கூட

12th December 1961] [Sri S. Ramalinga Padayachi]

அடிமை வேலை செய்ய—பண்ணை வேலைக்கு, சாணம் வாற, மாடு மேய்க்க—அனுப்பிவிடுகிறார்கள். இன்னிலையில் இருக்கும் பெற்றோர்கள் மீது அந்தப் பிள்ளைகளைப் பள்ளிக்கு அனுப்ப வேண்டுமென்று கட்டாயக் கல்வியாக இருப்பதால் ஆசிரியர் வற்புறுத்தி நடவடிக்கை எடுப்பேன் என்றால் ஆசிரியருக்கும், பெற்றோர்களுக்கும்தான் சண்டை வரும். இப்போது பிள்ளைகளுக்கு மதிய உணவு கொடுக்கிறோம். இந்தக் காலை உணவும் கொடுக்க ஏற்பாடு செய்தால் 99.60 லட்சமாக இருக்கும் நமது பட்ஜெட் ஒரு நூறு கோடிக்கு மேல் பெருமைப்படத்தக்க அளவில் போகும். இதையும் கவனிக்க வேண்டும்.

இன்னொன்று. ஓய்வு பெறும் வயது எய்டெட் பள்ளி ஆசிரியர்களுக்கு 60 என்றும், ஸ்தல ஸ்தாபனங்களில் இருக்கக் கூடிய ஆசிரியர்களுக்கு 55 என்றும் தாரதம்மியம் காட்டப்பட்டிருக்கிறது. இது இருக்கக்கூடாது. அப்படியே எய்டெட் பள்ளி ஆசிரியர் ஸ்தல ஸ்தாபனத்திற்குப் போகும்போது இந்த சர்வீசைக் கணக்கு எடுத்துக்கொள்கிறார்கள். ஸ்தல ஸ்தாபன ஆசிரியர் எய்டெட் பள்ளிக்கு வரும்போது அந்த சர்வீசைக் கணக்கு எடுத்துக் கொள்வது இல்லை. இந்த தாரதம்மியம் கூடாது. ஐம்பது பேருக்கு வடை, ஐம்பது பேருக்கு அப்பளம் என்றால் வடை கிடைத்தவர் அப்பளம் கிடைக்கவில்லையே என்று வருந்துவார். அப்பளம் கிடைத்தவர் வடை கிடைக்கவில்லையே என்றுதான் ஏங்குவர்.

அடுத்தபடியாக இரண்டு வருஷத்திற்கு மேற்பட்டு ஐந்து வருஷத்திற்கு உட்பட்ட பிள்ளைகளுக்கு முன்னோடித் திட்டம் ஒன்றைக் கொண்டுவந்திருக்கிறார்கள். இங்கும் மதிய உணவுத் திட்டத்தோடு, காலை உணவுத் திட்டத்தையும் ஏழைப் பிள்ளைகளுக்கு ஏற்படுத்த வேண்டும். அதைப்பற்றி அறிக்கையில் இல்லை. எப்படியோ பெற்றோர்கள் இரவு உணவைப் போட்டுவிடுவார்கள். காலை உணவுத் திட்டம் வந்துவிட்டால் என் குறை நீங்கிவிடும்.

அடுத்தபடியாக முதியோர் பென்ஷன் திட்டத்தை இவ்வாண்டு கொண்டுவந்து இருக்கிறார்கள். யாரும் எதிர்பார்க்காத திட்டம் இது.

அறத்தின் குறள் கூறுமை நோக்கி குறிப்பறிவார்
எஞ்ஞான்றும் மாறுநீர் வைய்யத்துக் கணி

என்பர். முதியவர்களுடைய பசியாற்றக்கூடிய இந்தத் திட்டம் மிகவும் பெருமை படத்தக்க திட்டம்.

என்னுடைய தொகுதியைப் பற்றி ஒன்றிரண்டு வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். உடையார் பாளையம் தாலுகாவிற்கு மறுதையார் திட்டம் கொண்டுவரவேண்டும். முதலில் இதைப் பரிசீலனை செய்து 30 ஆயிரம் ஏக்கருக்குப் பாசனம் கிடைக்கக் கூடிய வகையில் இதைக் கொண்டுவரலாம் என்றார்கள். அப்புறம் இரண்டாம் முறை பரிசீலனைசெய்தபோது 15 ஆயிரம் ஏக்கருக்குப்

[Sri S. Ramalinga Padayachi] [12th December 1961

பாசனம் செய்யக்கூடிய வகையில் கொண்டு வரலாம் என்ருர்கள். மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தில் இதற்கு முதல் ப்ரையாரிடி கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆனுல் இப்பொழுது இல்லை. பரம்பிக் குளத் திட்டம் பெரியதாக இருந்ததினுல் அதை எடுத்துக்கொண்ட காரணமாக இதை ஒத்தி வைத்திருக்கலாம். உடையார்பாளையம் தாலுகா 40 மைல் நீளம் காவேரியால் பிரிக்கப்பட்ட வரண்ட பகுதி. கொள்ளிடம் ஓடுகிறது, அப்படியிருந்தும் அதனுல் பயனில்லை. உடையார்பாளையம் தாலுகா, மருதையாறு திட்டத்தோடு கொள்ளிடத்தில் உபரியாக வரும் நீரைப் பயன் படுத்திக்கொள்ள வழி செய்யும் இந்தத் திட்டத்தை 30 ஆயிரம் ஏக்கராவும் பாசனம் பெறத்தக்க வகையில் உடனடியாகக் கொண்டுவர முயற்சி செய்யவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக எங்கள் தாலுகாவில் முக்கியமாக முந்திரிப் பயிர் அதிகம். அங்கே வெறும் பொட்டக்காடு தான். மரங்கள் நன்ருக வளரும். அதிலும் முந்திரி நன்ருக வருகிறது. நல்ல காய்ப்புக் காய்க்கிறது. அந்தத் தாலுகாவில் முந்திரி உடைக் கும் ஒரு தொழிற்சாலையைக் கொண்டுவரவேண்டும் என்ருேம். தனியார் துறையில் முன் வந்தால் உதவி செய்வதாகச் சொன்னுர் கள். அரசாங்கத் தரப்பிலேயே அந்தத் தாலுகாவில் முந்திரி உடைப்புத் தொழிற்சாலையையும், வேறு தொழிற்சாலைகளையும் ஏற்படுத்தவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன் அது மிகவும் பிற்பட்ட பகுதி.

நம்முடைய மதிப்பிற்குரிய நிதி அமைச்சர் அவர்கள் பல நல்ல திட்டங்களைக் கொண்டு வந்திருக்கிருர்கள். அதுவும் யாரும் எதிர்பார்க்காத சமயத்தில் முதியோர் பென்ஷன் திட்டம் கொண்டு வந்தார்களே, அதற்காக வயது முதிர்ந்த ஏழை எளியவர்கள் எல்லாம் பாராட்டுவார்கள். இதில் இன்னென்று ஞாபகம் வரு கிறது. வசிஷ்டன் இராமனுக்குச் சொல்வதாக இராமாயணத்தில் ஒரு பாட்டு.

"அனைத்துயிர் நமதென்றெண்ணி அரும்பசி அதனை ஆற்றி.
மனத்துள்ள பேதா பேதம் வஞ்சகம் கபடுசூது—
சினத்தையும்விடுவாயானுல் செய்தவம் வேறுமுண்டோ—
உனக்கு நான்சொன்ன ஞானம் உபதேசம் இதுவே இராமா."

"இராமா உலகத்தில் பசியைப் போக்குவது போன்ற நல்ல தொரு தர்மம் கிடையாது" என்பதாக உபதேசிக்கிருர். அந்தக் காரியத்தை நமது நிதி அமைச்சர் செய்திருக்கிருர். பாராட்டு கிறேன். இவர் டெல்லிக்குப் போகவேண்டும். அங்கும் நிதி மந்திரியாகவே இருக்கவேண்டும். கல்வி மந்திரி பதவியையும் சேர்த்துக்கொடுத்தால் ஒப்புக்கொளளக்கூடாது. நிதி இலாகாவை மட்டும் ஏற்றுக்கொண்டு இங்குபோல அங்கும் பல நல்ல காரி யங்களைச் செய்தால் தமிழ்நாட்டவர்களாகிய நாம் எல்லாம்

பெருமைப்படலாம். ஆகவே நமது நிதி அமைச்சர் அவர்கள் மத்திய அரசாங்க நிதி அமைச்சராக வரவேண்டும் என்று சொல்லி வாழ்த்தி முடித்துக்கொள்கிறேன்.

11-30 a.m.

SRI G. ANNAMALAI MUTHURAJA : சட்டமன்ற உதவித் தலைவர் அவர்களே, 1962-63-ம் ஆண்டின் பட்ஜெட்டை சமர்ப்பித்திருக்கும் அமைச்சர் அவர்களைப் பாராட்டி நான் சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். எனது அந்தநல்லூர் தொகுதி காவேரிக் கரைப் பக்கத்தில் உள்ள தொகுதி. அங்கு அடிக்கடி வெள்ளம் வந்து கொண்டேயிருக்கிறது. வருடா வருடம் வெள்ளம் வந்து கொண்டிருக்கிறது. இந்த வருடமும் வெள்ளம் வந்து ஏராளமாகச் சேதம் ஏற்பட்டு சர்க்காரிலிருந்து ஏராளமாக உதவி செய்திருக்கிறார்கள். அப்படி வருடா வருடம் வெள்ளம் வந்து, ஒவ்வொரு வருடமும் சர்க்கார் வெள்ள நிவாரணம் அளிப்பதற்குப் பதிலாக வெள்ளம் வராது தடை செய்வதற்கு பட்ஜெட்டிலும் பணம் ஒதுக்கியிருக்கிறார்கள். 17 கோடி வரை ரிவர் சம்பந்தப்பட்ட திட்டங்களுக்கு ஒதுக்கப்பட்டிருக்கிறது. நல்லதொரு திட்டத்தை தயார் செய்து காவேரிக் கரை ஓரமாக, அங்கு உடைப்பு அடிக்கடி ஏற்படாதபடி பாதுகாக்க வேண்டியது அவசியம். காவேரிக்கரை பக்கத்தில் குடமுருட்டி ஆற்றின் கரையில் 5,000 ஏக்கர் வரை சாகுபடியாகிக் கொண்டு வருகிறது. அங்கு ஒவ்வொரு ஆண்டும் வெள்ளம் வரும்போது வெள்ளாமைக்குக் கெடுதல் உண்டாகிறது. வெள்ளம் வந்து அவை நாலைந்து நாட்கள் தங்கியிருப்பதால் வெள்ளாமைக்குச் சேதம் ஏற்படுகிறது. ஆகவே, காவேரி ஆற்றின் கரைகளை நன்கு வலிவு படுத்தி கட்டவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். பக்கத்தி லுள்ள வாய்க்கால்களுக்கும் கரை கட்டினால் நல்லது. ஏற்கனவே இரண்டு கரைகள் இருந்தது. அவை உடைப்பின் காரணமாகப் போய் சேதம் நிறைய ஏற்பட்டுக்கொண்டிருக்கிறது. அக்கரைகளை நன்கு கட்டி பந்தோபஸ்து செய்து கொடுக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். பக்கத்திலுள்ள கிராமங்களில் கொடிக் கால் பயிர் செய்து கொண்டு வந்தார்கள். அங்கு வெள்ளம் காரணமாக 25,000 ரூபாய்க்கு மேல் சேதம் ஏற்பட்டது. அதற்கு சர்க்காரிலிருந்து நிவாரணம் கொடுப்பது என்று சொல்லி, எவ்வளவு சேதம் ஏற்பட்டது என்று கிராமக் கணக்கு பிள்ளைகள் மூலம் கணக்கு எடுத்து சேதம் ஏற்பட்டவர்களுக்கு பணம் கொடுப்பது என்று சொல்லி கலெக்டர் வரை ரிப்போர்ட் வந்தது. அந்த ரிப்போர்ட் சர்க்காருக்கு வந்தும் இதுவரை பணம் சர்க்காரிலிருந்து வரும் என்று அவர்கள் காத்துக் கொண்டிருக்கிறார்கள். இன்னும், அவர்களுக்கு சர்க்காரிலிருந்து பணம் கிடைக்காததால் அவர்கள் மிகவும் கஷ்டப்படுகிறார்கள். தஞ்சை ஜில்லா கலெக்டர் ரிப்போர்ட் அனுப்பியிருக்கிறார், திருச்சி ஜில்லாக் கலெக்டரிடமிருந்தும் ரிப்போர்ட் வந்திருக்கிறது. திருச்சியிலிருந்து ஏக்கர் ஒன்றுக்கு 5,000 ரூபாய் வரை கொடுக்க வேண்டுமென்று ரிப்போர்ட் வந்திருக்கிறது, தஞ்சை ஜில்லா கலெக்டர் ரிப்போர்ட்டில் 2,000 ரூபாய் என்று எழுதியனுப்பியிருக்கிறார்கள். இதன்

[Sri G. Annamalai Muthuraja] [12th December 1961

காரணமாக விவசாயிகளுக்கு பணம் கொடுக்கப்படாமல் ஸ்டே செய்து நிறுத்தி வைத்திருக்கிறார்கள். எளிய ஜனங்கள்தான் கொடிக்கால் பயிர் செய்யமுடியும். அவர்களுக்கு கொடுக்கப்பட வேண்டிய பணம் கொடுக்கப்படாமல் இருப்பதால் அவர்கள் மிகவும் துன்பப்படுகிறார்கள். பெரிய மிராசுதார்கள் என்றால் வேறு பயிர் செய்துகொள்ளமுடியும். சாத்தனூர், கம்பாசம் பேட்டை, மருதாநல்லூர் போன்ற இம்மாதிரியிடங்களில் அடிக்கடி வெள்ளம் வருவதால் சேதம் ஏராளமாக ஏற்படுகிறது. அப்படி சேதம் அடையக்கூடியதின் விளைவாக பாதிக்கப் பட்டவர்களுக்கு, அப்படி பாதிக்கப்பட்ட விவசாயிகளுக்கு கடன் உதவி அளிக்கவும் சர்க்கார் சீக்கிரம் ஒரு உத்தரவு பிறப்பிக்கும்படி கேட்டுக்கொள்கிறேன். ஒருபுறம் தண்ணீர் ஏராளமாக வந்து பயிர்கள் சேதப்படுகின்றன. சில இடங்களில், விராலி மலை, இலுப்பூர் போன்றவிடங்களில் தண்ணீர் இன்றி மக்கள் கஷ்டப்படுகிறார்கள், ஜேடர்பாளையம் வழி ஒரு ஆறு வெட்டிக் கொடுக்கப் போவதாக இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சொல்லி வந்தார்கள். மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலாவது அதை ஆரம்பித்து நல்ல முறையில் கொண்டு வர வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். விவசாயிகளுக்கு உரம் கொடுப்பதில் பல இடையூறுகள் இருக்கின்றன. போன தடவை ஏக்கருக்கு ½ மூட்டை என்று கொடுத்து வந்தார்கள். இந்தத் தடவை கால் மூட்டை என்று கொடுப்பதால் விவசாயிகள் கஷ்டப் படுகிறார்கள். ஆகவே ஏக்கர் ஒன்றுக்கு ½ மூட்டையாவது கிடைக்கும்படிச் செய்யவேண்டுமென்று கேட்டுக் கொண்டு என் வார்த்தைகளை முடித்துக் கொள்கிறேன்.

*** SRI K. R. NALLASIVAM :** உதவித் தலைவர் அவர்களே, இந்த இடைக்கால நிதிநிலை அறிக்கைமீது நான் இரண்டொரு கருத்துக்களைக் கூற விரும்புகிறேன். இந்த இடைக்கால நிதிநிலை அறிக்கையில் புதுத் திட்டங்கள் என்ற தலைப்பின் கீழ் இரண்டு மூன்று புதுத் திட்டங்கள் அறிவிக்கப்பட்டிருக்கின்றன. அவை களில் ராணுவ கல்வி நிறுவனம் ஒன்று நம் ராஜ்யத்தில் நிறுவப் போவதாகவும் அதில் படிக்கக் கூடிய மாணவர்களுக்கு உதவித் தொகை கொடுக்கப் போவதாகவும் ஒரு குறிப்பிருக்கிறது. இன்று வரை ராணுவப் பள்ளிகளில் படிக்கும் மாணவர்கள் பெரிய பணக் காரர்கள் வீட்டுக் குழந்தைகளாகத்தான் இருக்க முடியும். ஆகவே இப்பொழுது சாதாரணமானவர்கள் குழந்தைகள் அங்கு படிப்பதற்கான வசதி செய்து கொடுத்திருப்பது பாராட்டுதற்குரி யது. முதியோர்களுக்கு உதவித் தொகை கொடுக்கப் போவதாக வும் அறிவிக்கப்பட்டிருக்கிறது. அதே நேரத்தில் நேற்றையதினம் பேசிய காங்கிரஸ் அங்கத்தினர், இந்தக் கருத்தையே காங்கிரஸ் தான் நாட்டின் முன்னால் கொண்டு வைத்தது, சட்டமாக்கயிருக் கிறது என்று பெருமையாகச் சொல்லிக் கொண்டார்கள். 1957-ம் ஆண்டு இந்தியன் சோஷியலிஸ்ட் கட்சியானது அகிலஇந்திய அடிப்படையில் 18 கோரிக்கைகளை வைத்து சர்க்கார் கவனத்திற்கு கொண்டு வந்து அத்துறையில் சர்க்கார் காரியங்கள் செய்யவேண்டு மென்ற நோக்கத்தோடு ஒரு பெரிய இயக்கத்தையே நடத்தியது.

12th December 1961] [Sri K. R. Nallasivam]

அவ்வியக்கத்தில் 1957-ல் சோஷியலிஸ்ட் கட்சியினரில் சிறை சென்றவர்கள் 17,000 பேர்கள். அந்த 18 அம்சக் கோரிக்கைகளில் முதியோர்களுக்கு உதவித் தொகை கொடுக்க வேண்டுமென்ற கோரிக்கையும் ஒன்ருகும். இந்தக் கோரிக்கையையும் வைத்து போராட்டம் நடத்தியது சோஷியலிஸ்ட் கட்சி. அதனுல் உத்தரப் பிரதேச சர்க்கார் 58-ல் அதைச் சட்டமாக்கியது. அவ்வழியில் தமிழ் நாட்டு அரசாங்கமும் செய்ய இருக்கிருர்கள். அடுத்தபடி யாக ஒரு விஷயத்தை ஞாபகமூட்ட விரும்புகிறேன். சோஷிய லிஸத்தை நோக்கிச் செல்லக்கூடிய எந்த அரசாங்கமும் ஒன்றைச் செய்கிறது. அதாவது, வேலை இல்லாதவர்களுக்கு மான்யத் தொகை கொடுக்கும் முறை. முதலாளித்துவ அரசாங்கங்கள் இருக்கும் நாடுகளில்கூட இது நடக்கிறது. வேலையில்லாதவர் களின் எண்ணிக்கை நம் நாட்டில் பயங்கரமான அளவில் வளர்ந்து கொண்டிருக்கிறது. வேலை தேடிக் கொடுக்கும் ஸ்தாபனங்களில் மூன்று ஆண்டுகளுக்கு குறையாமல் பதிவு செய்து கொண்டிருப்ப வர்கள் இருப்பார்களேயானுல் அவர்களுக்கு ஒரு உதவித் தொகை கொடுக்கக்கூடிய முறையை ஏற்படுத்த வருகிற ஆண்டிலாவது அரசாங்கம் முயற்சி செய்ய வேண்டும். வேலையில்லாத் திண்டாட் டம் காரணமாக லட்சக் கணக்கான வாலிபர்கள் பெரும் தொல்லை களுக்கு ஆளாகிருர்கள், சந்தர்ப்பம் கிடைக்கும்போது அவர்கள் ஆரம்ப காலத்திலேயே தங்கள் வாழ்க்கையை முடித்துக் கொள்ள வேண்டியவர்களாக இருக்கிருர்கள். ஆகவே, வருகிற ஆண்டி லாவது, தொழிலாளர்களுக்கும், வேலை தேடிக் கொடுக்கும் நிறுவனங்களில் மூன்று ஆண்டுகளுக்கு மேல் ஒருவரின் பெயர் இருந்தால் அவருக்கு ஒரு குறைந்தபட்சத் தொகையாவது கொடுப்பதற்கு சர்க்கார் ஒரு திட்டத்தைக் கொண்டு வர வேண்டும். அடுத்தபடியாக, பரம்பிக்குளம் திட்டம் நிறைவேறிக் கொண்டிருக்கிறது. 3½ கோடிக்குப் பதிலாக 4½ கோடி. இடைக் கால பட்ஜெட்டில் ஒதுக்கப்பட்டிருக்கிறது. அது இரண்டு வித முறைகளில் திட்டம் இடப்பட்டு செய்யப்பட்டு வருகிறது. 2½ லட்சம் ஏக்கர் உள்ள ஒரு பகுதியை நஞ்சையாகவும், மற்ற ஒரு பகுதியைப் புஞ்சைத் திட்டமாகவும் வைத்து நிறை வேற்றப்பட்டு வருகிறது. பூராவையும் புஞ்சைத் திட்டமாகச் செய்தால் 3 லட்சம் ஏக்கர் வரையில் அப்பகுதியிலுள்ள நிலங்களுக்கு தண்ணீர் வசதி செய்து கொடுக்க முடியும். புதிதாக திட்டங்கள் போடுவதற்கான வசதிகள் குறைவாகயிருப் பதால் பூராவையும் புஞ்சைத்திட்டத்தின்கீழ் கொண்டு வரவேண்டும். அப்படி லோயர் பவானி போன்று செய்தால் இன்னும் 50,000 ஏக்கருக்கு அதிகப்படி தண்ணீர் வசதி செய்து கொடுக்க முடியும். தினசரி தண்ணீர் விடுவது நஞ்சைத் திட்டம், தண்ணீரைப் பகிர்ந்து நான்கு நாட்கள், மூன்று நாட்களுக்கு ஒரு தடவை என்று சொல்வது புஞ்சைத் திட்டம் என்ற அடிப்படை யில் சொல்கிறேன். ஆகவே, லோயர் பவானி போன்று செய்தால் அதிகப்படியான ஏக்கர்களுக்கு தண்ணீர் வசதி செய்து கொடுக்க முடியும், இதை சர்க்கார் கவனத்தில் வைத்துக் கொள்ளவேண்டும். கடந்த 10 ஆண்டு காலமாகவே மேல் பவானித் திட்டம் பற்றி

[Sri K. R. Nallasivam] [12th December 1961

(Sri N. S. Ramalingam in the Chair)

சட்ட சபையில் பலர் பேசியிருக்கிறார்கள். தேர்தல் வரும் காலத்தில் மேல் பவானித் திட்டத்தைப் பொருத்த வரையில் பரிசீலனை செய்யப் போகிறோம் என்று அறிவிப்பு செய்திருக்கிறார்கள். தேர்தலில் ஓட்டுப் பிடிப்பதற்காகச் செய்திருக்கிறார்கள் என்று சொன்ன போதிலும், இதை நம்பி எத்தனை பேர்கள் ஓட்டுப்போடப் போகிறார்கள் என்பதெல்லாம் தேர்தலில் பார்க்கவேண்டிய விஷயங்கள். மேலே அவனாசியும், கடைசிக் கோடியில் ஈரோடு புஞ்சைப் பகுதியாகவும் இருக்கும் என்று நான் நம்புகிறேன். மேல் பவானித் திட்டத்தைப் பொருத்த வரையிலே. இந்த மேல் பவானித் திட்டத்தைப் பரிசீலிக்கும்போது இந்தப் புஞ்சைப் பகுதிகளை இணைத்து பரிசீலனை செய்ய முடியுமா என்று சர்க்கார் யோசனை செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

காவிரி வெள்ளம் காரணமாக வீடிழந்தோருக்கு எவ்வளவோ உதவிகளை சர்க்கார் செய்யப்போவதாகச் சொன்னார்கள். சொன்ன உதவிகள் செய்யப்படவில்லை. ஒரு சில இடத்தில் வீடுகளுக்கும் நிலங்களுக்கும் உதவி செய்யப்பட்டிருக்கிறது. அதாவது 30 ரூபாய் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆனால் அதிகாரிகளுடைய உற்சாகக் குறைவோ அல்லது மந்திரிகளுடைய உற்சாகக் குறைவோ இப்போது காரியங்கள் ஏதும் நடைபெறவில்லை. ஈரோடு பொருத்த வரையில் அநேக வீடுகள், குடிசைகள் இழந்திருக்கின்றனர். இன்றைக்கு அவர்கள் ரோடு புறம்போக்கில் இருந்துகொண்டிருக்கிறார்கள். அவர்களுக்கு வேறு பெரிய உதவி செய்யாவிட்டாலும் ரோடு புறம்போக்கு நிலத்தை நத்தமாக மாற்றி அவர்களுக்குக் கொடுக்க வழி செய்யவேண்டும். இது ஒன்று. இன்னும் வீடுகளைக் கட்டிக்கொள்ள அவர்களுக்குக் கடன் தர ஏற்பாடு செய்யவேண்டும். அவர்களுக்கு சிமெண்ட் தாராளமாகக் கிடைக்க திடமான ஒரு உத்திரவு பிறப்பிக்க வேண்டும்.

அடுத்தபடியாக சென்னை சர்க்கார் சமீபத்திலே பத்திரிகையில் ஒரு குறிப்பு கொடுத்திருக்கிறார்கள். அதாவது டிஸம்பர் 15-க்கு மேல் மந்திரிகள் சுற்றுப்பிரயாணம் செய்யும்போது எந்த சர்க்கார் அதிகாரியும் உடன் வரமாட்டார்கள் என்று சொல்லியிருக்கிறார்கள். இது உண்மையிலேயே ஜனநாயகத்தின் கையை வலுப்படுத்துவதாக இருக்கிறது. அதோடு மற்ற ராஜ்யங்களுக்கு வழி காட்டும் முறையில் இன்னொரு காரியத்தையும் செய்தால் நாம் பாராட்டுவது மாத்திரமல்லாமல் ஜனநாயகத்தில் நம்பிக்கை கொண்டிருக்கிற, ஜனநாயகத்தைப் பாராட்டுகிற அத்தனை பேரும் பாராட்டுவார்கள். இந்த சட்ட சபை முடிந்தவுடனே அநேகமாக ஒரு காபந்து சர்க்கார் வந்து விடலாம். அதற்கு பதிலாக கவர்னர் கையில்—அரசியல் சட்டம் இடம் கொடுக்காவிட்டாலும் அதைத் திருத்தியாவது—ஆட்சியை ஒப்படைத்தால் நிச்சயமாக நல்ல முறையில் தேர்தலில் செயல்பட முடியும். இன்றைக்கு சில பகுதிகளில் மந்திரிகள் என்ன சொல்லுகிறார்கள்? காபந்து சர்க்கார் இங்கிலாந்து போன்ற இடங்களில் நல்ல முறையில் வந்திருக்

12th December 1961] [Sri K. R. Nallasivam]

கிறதே அந்த மாதிரி இருக்கும். இல்லாவிட்டால் நம் மந்திரிகள் "இப்போது நீங்கள் எங்களுக்கு ஓட்டு போட்வேண்டும், இல்லா விட்டால் காரியங்கள் செய்வதில் தடங்கல் ஏற்படும்" என்று பேசும் நிலைமை இருக்கிறது. காபந்து சர்க்கார் ஏற்படுத்துவதற்குப் பதில், தேர்தல் நடந்து அடுத்த சட்டசபை வரும் வரையில் கவர்னர் ஆட்சி இருப்பது ஜனநாயகத்திற்கு உறுதுணையாக இருக்கும் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

கடைசியாக வேறு எந்த ஜில்லாவிலும் இல்லாத புதிதாக ஒன்று நடந்திருக்கிறது. குறிப்பிட்ட யாருடைய தலையீடோ என்னவோ. மதுராந்தகத்தில் சோஷலிஸ்டுகள், திராவிட முன்னேற்றக் கழகம், தமிழ் தேசியக் கட்சி ஆகிய கட்சிகளில் இருக்கக் கூடியவர்களை மட்டும் ரௌடி லிஸ்டில் சேர்த்து இருப்பது போல போலீஸார் இரவோடு இரவு கதவைத் தட்டி இம்மாதிரி செய்து கொண்டிருக்கிறார்கள். வேறு எங்கும் இந்த மாதிரி புகார்கள் வரவில்லை. சட்ட அமைச்சர் இதனைக் கவனிக்கவேண்டும், இது எந்த அரசியல் கட்சியின் தலையீடோ தெரியவில்லை, இதையும் கவனிக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டு முடித்துக் கொள்கிறேன்.

* **Sri S. SAMIKANNU PADAYACHI :** தலைவர் அவர்களே, கனம் நிதி அமைச்சர் அவர்கள் 1962-63-ம் ஆண்டுக்கான நிதி நிலை அறிக்கையையும் அதில் ஏற்படும் திட்டங்களையும் ரொம்பவும் விவரமாகவும் ரொம்பவும் திருப்திகரமாகவும் கொண்டு வந்ததைப் பற்றி நான் அவரைப் பாராட்டுகிறேன். அவர் இதே மன்றத்தில் 10 ஆண்டு காலம் நிதி அமைச்சராகவும் கல்வி அமைச்சராகவும், இந்த மன்றத்திற்கு தலைவராகவும் இருந்து நல்ல பணிகளைச் செய்தார். அதோடு இந்த 5 ஆண்டு காலத்தில் எல்லா அங்கத்தினர்களோடும் நல்ல முறையில் பழகி அவர்களுக்குத் திருப்திகரமாக நடந்துகொண்டார். இந்த மன்றத்தை விட்டு அவர் மக்கள் சபைக்குப் போகப் போகிறார். அப்படியிருந்தாலும், அங்கு போனாலும் நம் நாட்டுக்கு, தமிழ் நாட்டுக்கு என்ன செய்ய வேண்டுமோ அவைகள் அவருடைய மனதில் இருக்கின்றன. அவர் அங்கே போகவேண்டியது தான். நம் தமிழ் நாட்டைச் சேர்ந்தவர், முக்கியமானவர், அறிவாளி அங்கேயும் இருப்பது நலம் என்று நான் கருதுகிறேன். அதோடு அவர் அங்கேயும் நிதி அமைச்சராகவும், கல்வி அமைச்சராகவும் வருவார் என்றே எண்ணுகிறேன். அவருக்கு கடவுள் நல்ல திடகாத்திரத்தையும், நல்ல ஐச்வர்யத்தையும் கொடுக்கவேண்டுமென்று பிரார்த்தித்துக்கொள்கிறேன்.

அவர் கொண்டு வந்திருக்கக் கூடிய பட்ஜெட்டைப் பற்றிப் பேசும்போது முக்கியமாக என்ஜினீரிங் கல்லூரி, வைத்தியக் கல்லூரி, கால் நடை வைத்தியக் கல்லூரி இவைகள் ஒவ்வொரு மாவட்டத்திற்கும் ஒவ்வொன்று கொண்டுவரவேண்டுமென்று அவர்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

[Sri S. Samikannu Padayachi] [12th December 1961

அடுத்தபடியாக கல்வி விஷயத்திலே அவர் 10 ஆண்டு காலத்திலே நல்ல முறையிலே தகுந்த நிதியைக் கொடுத்து நாட்டிலே கல்வி முன்னேற்றம் ஏற்பட எல்லாம் செய்து வந்தார்கள். அதோடு இப்போது 4 வயது முதல் 11 வயது வரையில் உள்ள மாணவர்களுக்கு கட்டாயக் கல்வி கொண்டு வந்திருப்பது ரொம்பவும் திருப்திகரமானது. அதோடு 2 வயது முதல் 4 வயதுள்ள குழந்தைகளுக்கு ஒவ்வொரு மாவட்டத்திலும் கல்வி வசதிக்கு ஏற்பாடுகள் செய்யப் போவதாகச் சொல்லியிருக்கிறார்கள். 2 வயது குழந்தைகள் எப்படி ஸ்கூலுக்குப் போக முடியும் என்று தெரியவில்லை. ஆகவே இதை 4 வயதாகக் கொண்டு வரலாம் என்று சொல்லிக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக வைதியக் கல்லூரி, என்ஜினீயரிங் கல்லூரிகளில் படிக்கும் மாணவர்களில் ஏழை மாணவர்கள் பணக்கார மாணவர்களைக் காட்டிலும் கெட்டிக்காரர்களாக இருக்கிறார்கள். அவர்களுக்கு கல்வி வசதி கொடுப்பதற்கு பெற்றோர்கள் பண வசதி இல்லாமல் விட்டு விடுகிறார்கள். அவர்களுக்கு சர்க்கார் கடன் கொடுப்பதாக இந்தத் திட்டத்தில் கொண்டு வந்திருப்பது வரவேற்கத்தக்கது. அதை இந்த ஆண்டிலேயே கொண்டுவந்து நிறைவேற்றவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

திடீரென்று இறந்து விடக் கூடிய ஆசிரியர்களுக்கும் ஒரு திட்டம் வந்திருக்கிறது. அவர்களுடைய குடும்பம் பின்னால் நல்ல முறையில் நடத்தவேண்டுமே, அவர்கள் அனாதையாகி விடுவார்களே என்று ஒரு திட்டத்தைக் கொண்டு வந்திருக்கிறார்கள். அடுத்த 1962-63-லே இந்த வசதியைச் செய்துகொடுக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

வயது வந்த அனாதைகளுக்கு ஒரு திட்டம் வந்திருக்கிறது. மாதம் 20 ரூபாய் கொடுத்து ஜீவிக்க வழி செய்யும் திட்டத்தைக் கொண்டு வந்திருக்கிறார்கள். அதைப் பார்த்தால் யாரைப் பார்த்தாலும் அனாதையாகத் தெரியுமே, எப்படி நல்ல முறையில் கண்டுபிடித்து செய்ய முடியும் என்று தெரியவில்லை. அதோடு ஒரு மனிதனுக்கு ஒரு நாளைக்கு குறைந்தது 1 ரூபாயாவது வேண்டியிருக்கிறது. ஆகையால் இதை 30 ரூபாய் அளவுக்காவது உயர்த்தவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக, பாசன வசதிகளில் எவ்வளவோ முன்னேறி வந்திருக்கிறது நம் மாநிலம். 15 ஆண்டுகளுக்கு முன்பு இருந்ததை விட இரண்டு மடங்கு பாசன வசதிகள் ஏற்பட்டிருக்கின்றன. நம் மாநிலம் ரொம்பவும் முன்னேறி இருக்கின்றது என்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயம். அப்படி சில திட்டங்கள் இருந்தும் காவேரியிலே வெள்ளப் பெருக்கெடுத்து சமுத்திரத்திலே வீணாகப் போய்ச் சேருகின்ற ஜலத்தை, மேட்டூர் அணைக்கு மேலும் ஒரு வடிகால் வாய்க்கால் வெட்டி, பெண்ணையாறுக்கு விடலாம் என்ற திட்டம் இப்போது சர்க்காருடைய கவனத்தில் இருந்து வருகிறது. அந்தத் திட்டத்தை கைவிடாமல், அதை

12th December 1961] [Sri S. Samikannu Padayachi]

நிறைவேற்றுவதற்கு வழிசெய்யவேண்டும். சில பகுதிகளிலே குடிதண்ணீருக்குகூட மிகவும் கஷ்டப்படுகிறார்கள். இதன்மூலம் அவர்களுக்கும் ஒரு வழி ஏற்படுமென்று நினைக்கிறேன். இதை இந்த மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலேயே போட்டு, அமுல் நடத்த வேண்டுமென்று நான் நிதி அமைச்சர் அவர்களுக்கு ஞாபகப்படுத்திக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக, இப்போது பஞ்சாயத்து யூனியன் என்று ஒன்று புதிதாகக் கொண்டு வந்திருக்கும் அந்த யூனியன்களிலே நடக்கின்ற தலைவர்களுடைய தேர்தல் ரொம்பவும் கஷ்டமான தேர்தல் என்று நினைக்கிறேன். இந்த தேர்தல்களைப் பற்றி எனக்கு நீண்டநாட்களாகத் தெரியும். ஆனால் இந்தத் தேர்தலிலே ரொம்பவும் கஷ்டமும், பணச் செலவும், பல தொந்தரவுகளும் ஏற்படுகிறது. அப்படி இருந்தும், அதில் வரும் தலைவர்களுக்கு எந்தவிதமான அதிகாரமும் கிடையாது. இது ரொம்பவும் வருந்தத்தக்கதாக இருக்கிறது. ஜில்லா போர்டு தலைவராக இருந்தால்கூட, அதிகாரம் உண்டு. இதற்கு அதைப்போல் ஐந்து மடங்கு செலவு செய்தும், கொலையும், இன்னும் பல கஷ்டங்களும் அனுபவிக்க வேண்டியிருக்கிறது. அப்படி இருந்தும் எந்தவிதமான அதிகாரமும் இல்லை. அங்கிருக்கக்கூடிய ஜீப்பை எடுப்பதற்குகூட அதிகாரம் கிடையாது. பணக்காரத் தலைவராக இருந்தால் கார் வைத்துக் கொள்ளலாம். சாதாரணமாக இருக்கக் கூடியவர் ஒரு தலைவராக வந்தால், அவருக்கு இந்த கார் வசதி கொடுக்க வேண்டும். ஜில்லா போர்டு தலைவராக வருவதாக இருந்தால் கூட, 50, 60 பேரைச் சரிகட்டி தலைவராக வந்து விடலாம். ஆனால் இதிலே அதைவிட அதிகமான பேர்களை சரிக்கட்டி, தலைவராக வந்தாலும், எந்தவிதமான அதிகாரமும் இல்லாதது மிகவும் வருந்தத்தக்கதாக இருக்கிறது. அதேபோல் கமிஷனர் இருக்கிறார். தலைவரைக் காட்டிலும், அவருக்கு அதிக பொறுப்பு கொடுக்கப்பட்டிருக்கிறது. அவர் சர்க்கார் தரப்பில் அமர்த்தப் பட்டிருக்கிறார். இதிலே, கமிஷனரும், தலைவரும் ஒத்துழைக்க வேண்டும். அதற்கு சரியான ஒரு விளம்பரமோ அல்லது ஆர்டரோ போட்டு, இவர்கள் இருவரும் நல்லமுறையிலே ஒத்துழைக்கும்படிச் செய்ய வேண்டும். அப்போது தான் அவர்கள் உண்மையிலேயே மக்களுக்குச் சேவை செய்ய முடியும். அவர் ஒரு பக்கம், இவர் ஒரு பக்கம் என்று இருந்தால், எந்தக் காரியத்தையும் நல்ல முறையில் செய்ய முடியாது. ஆகவே, இந்த பஞ்சாயத்து யூனியன் தலைவருக்கு கூடுமான வரையிலே வசதி செய்து கொடுக்க வேண்டும். இதைக் கேட்டுக் கொண்டு, நிதி மந்திரி அவர்கள் நீண்டகாலமாக வாழ்ந்து, நல்ல முறையிலே அவர்கள் மக்கள் சபைக்குச் சென்று, நிதி மந்திரியாகவே இருந்து, தமிழ் மாகாணம் நல்ல பெயர் எடுக்கும்படியான வகையிலே பணி செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். (Deputy Speaker in the Chair) அவர்கள் நீடித்து, நல்ல முறையிலே வாழ வேண்டுமென்று சொல்லிக்கொண்டு என் வார்த்தைகளை முடித்துக் கொள்கிறேன்.

[12th December 1961

* SRIMATHI HEMALATHA DEVI : மதிப்பிற்குரிய உதவி சபாநாயகர் அவர்களே, கனம் நிதி அமைச்சர் அவர்கள் சமர்ப்பித்திருக்கும் 1962-63 ஆண்டிற்கான நிதி நிலை அறிக்கையைப் பாராட்டி, வரவேற்று ஒரு சில கருத்துக்களை எடுத்துக்கூற விரும்புகிறேன். இம்மாதிரியான பாராட்டுரைகள் கூறும்போது, நிதி அமைச்சர் அவர்களையும், நிதி நிலைமை அறிக்கையை சமர்ப்பிப்பதற்காக முயற்சி எடுத்துக் கொண்ட அதிகாரிகளையும் பாராட்டுவதை ஒருசிலர் குறை கூறியும் அவ்வளவு பொருத்தமாக இல்லை என்றும் கூறுகின்றார்கள். ஆனால் அந்த சமயத்தில் திருக்குறளை இயற்றித்தந்த திருவள்ளுவர் கூறிய வார்த்தைகளை நாம் மறந்து விடக்கூடாது.

" எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம், உய்வில்லை
செய்நன்றி கொன்ற மகற்கு"

என்பதை நினைவுப்படுத்திக் கொள்ளவேண்டும். அந்த வாக்கியத்தின்படி, கடந்த 10 ஆண்டுகளாக நிதி அமைச்சராக இருந்து, நமது அரசாங்க நிர்வாக காரியங்களை நல்லமுறையிலே செய்ததற்காகவும், நல்ல திட்டங்களை வகுத்ததற்காகவும், இந்த நிதி நிலை அறிக்கையை ஆண்டுதோறும் சமர்ப்பிப்பதற்கு உறுதுணையாக இருக்கும் அதிகாரிகளையும் இந்த நேரத்தில் பாராட்டாமல் விடுவோம் என்று சொன்னால், செய்நன்றி கொன்றவர்களாவோம் என்பதை நான் இந்த நேரத்திலே எடுத்துக்காட்ட விரும்புகிறேன்.

ஒவ்வொரு ஆண்டு நிதி நிலை அறிக்கையிலும் பல முன்னேற்றத் திட்டங்களை நாம் கண்கூடாக கண்டோம். அதிலும் இந்த 1962-63-க்கான நிதி நிலை அறிக்கையிலே பல அறிய, அத்தியாவசியமான திட்டங்களையெல்லாம் இதிலே சேர்த்திருப்பது, அதற்கான பணத்தையெல்லாம் ஒதுக்கியிருப்பது ஆகியவற்றை நாம் பார்க்கும்போது, வரவேற்காமலும் பாராட்டாமலும் இருக்க முடியாது. குறிப்பாக, எல்லாக் குறிக்கோள்களுக்கும் எடுத்துக்காட்டாக அஸ்திவாரம்போன்று இருப்பது கல்வியாகும். "எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும்" என்று சொல்வதற்கு இணங்க, 23 கோடியே 39 லட்சம் ரூபாயை இந்த கல்வி இனத்திற்காக ஒதுக்கி வைத்திருக்கிறார்கள் என்று சொன்னால், அது நம்முடைய நாட்டிலே இருக்கும்படியான வரப்போகும் குழந்தைகளின் கல்வி முன்னேற்றத்திற்கு பெரிதும் உதவியாக இருக்கும் என்ற அடிப்படையிலே இந்தத் திட்டம் வகுக்கப்பட்டிருக்கிறது என்றுதான் சொல்லவேண்டும். எல்லா வகுப்புகளிலுமே பல பணக்கார குடும்பங்கள் இருக்கலாம். ஆனால் பெருவாரியாக கல்வியில் பிற்போக்காகவுள்ளவை பிற்பட்ட, தாழ்த்தப்பட்ட இனங்களைச் சேர்ந்தவர்கள்தான் என்றறிந்து இந்த இனங்களிலே இருக்கும்படியான எல்லா ஏழைக் குழந்தைகளும் படித்து முன்னுக்கு வந்தால் தான் உண்மையில் நம் நாடு கல்வியில் சிறந்து விளங்க முடியும் என்பதை முக்கியமாக கருத்தில் வைத்துக்கொண்டு, பிற்பட்ட இனங்களுக்கும் கல்விச் சலுகைகளை நம் அரசாங்கம் கொடுத்திருக்கிறது. ஆனால் இச்

12th December 1961] [Srimathi Hemalatha Devi]

சலுகை அப்பேற்பட்ட வகுப்புகளைச் சேர்ந்த எல்லா ஏழை குழந்தைகளுக்கும் கிடைப்பதில்லை. மேலும் முற்பட்ட இனத்திலேயும் பொருளாதாரமின்றி வசதியற்ற பல குடும்பங்கள் இருப்பதால் பொதுவாக பொருளாதார அடிப்படையில் எல்லா ஏழைக் குழந்தைகளுக்கும் எஸ்.எஸ்.எல்.சி. வரை படிப்பதற்கும் வசதிகள் செய்யப்பட்டிருக்கிறது. இப்படி உயர்நிலை பள்ளி படிப்பு வரையிலே இலவசமாக படிக்கக்கூடிய ஓர் அரிய திட்டத்தை வகுத்திருக்கிறார்கள். அது மட்டுமல்லாமல், இப்போது அதற்கு மேலும் பொறியியல், மருத்துவம் போன்றத் துறைகளிலே படிப்பதற்கும் வட்டியில்லாமல் கடன் தொகை கொடுத்து உதவும் திட்டத்தை இன்றைக்கு முதலாவதாக அரசாங்கத்தை நடத்தக்கூடிய நான்-கெஜடட் ஆபீசர்களின் குழந்தைகளுக்கும், ஆசிரியர்களின் குழந்தைகளுக்கும் அளித்திருக்கிறார்கள். இன்றைக்கு அரசாங்கத்தை நடத்தக் கூடியவர்களில் என்.ஜி.ஓக்கள் பெருவாரியாக உள்ளனர். இந்த அதிகாரிகள் நிர்வாகத்திலே பெரும் அளவு முன்னேற்றத்தை நாம் காணும் அளவிற்கு கடமையாற்றி வருகிறார்கள். இந்த முன்னேற்றத்திற்காக பாடுபடும் அவர்களுடைய குடும்பத்தினருக்கு இந்த உதவி செய்வதற்கு, நாம் உண்மையிலேயே நன்றி செலுத்தவேண்டும். அதோடுகூட, நாட்டிலே இந்த மாதிரியான கல்வியை நல்ல முறையிலே பரவச் செய்ய வேண்டுமென்று சொன்னால் அதற்கு ஆசிரியர்கள் காரணம். ஆசிரியரிடத்தில் படித்தவர்கள் பலர் கலெக்டர்களாகவும், என்ஜினியர்களாகவும், மேலும் பெரிய உத்தியோகங்களையும் பணியாற்றி முன்னேறியுள்ளனர். ஆனால் ஆசிரியர்களாக இருப்பவர்கள் மட்டும் என்றைக்கும் ஆசிரியர்களாகவே தான் இருக்கிறார்கள். அவரது குடும்பங்களும் அதே நிலையில் தான் இருக்கிறது. எனவே, அந்த நிலையை மாற்ற வேண்டுமென்று சொன்னால், உண்மையிலேயே இந்தத் திட்டத்தை ஆசிரியர் குடும்பத்திற்கும், அரசிதழ் பதிவு பெறாத உத்தியோகத்திலுள்ளவர்களின் குடும்பத்திற்கும் கண்டிப்பாக இந்த மாதிரியான சலுகை அதாவது வட்டியில்லாமல் கடன் கொடுத்து உதவி பின்னர் தவணைகள் மூலம் வசூலிப்பது போன்ற சலுகைகள் அளிப்பதன் மூலம்தான் அவர்கள் குடும்பங்களை நாம் முன்னுக்குக் கொண்டுவர முடியும். ஆகவே, இந்தத் திட்டத்தை நான் மிகமிக வரவேற்கிறேன், பாராட்டுகிறேன் என்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

அதோடு மட்டுமல்லாமல், இரண்டு வயதுக்கு மேற்பட்ட 5 வயதிற்குள் உள்ள குழந்தைகளுக்கு எல்லாம் பயிற்சி அளிக்கும் ஒரு திட்டத்தையும் வகுத்திருக்கிறார்கள். இதுவும் மிகவும் வரவேற்கக்கூடிய ஒரு திட்டமாகும். குறிப்பாக, கிராமங்களிலே எல்லாம் விவசாயம் செய்யக்கூடிய குடியானவர்கள். அவர்கள் தங்களுடைய சிறிய குழந்தைகளைப் பராமரிப்பதற்காகவே, தங்கள் வீட்டிலுள்ள வயதுவந்த குழந்தைகளைப் பள்ளிக்கூடத்திற்கு அனுப்புவதில்லை. இப்போது இந்த சிறிய குழந்தைகளுக்கு பாதுகாப்பு அளிக்கும் வகையிலே திட்டம் வகுத்துள்ளதாலும்,

[Srimathi Hemalatha Devi] [12th December 1961

அதற்குமேல் 6 வயதிற்கு மேற்பட்டு, 11 வயதிற்குள் உள்ள எல்லாக் குழந்தைகளுக்கும் கட்டாய கல்வித் திட்டத்தை அமுலுக்குக் கொண்டு வந்ததின் மூலமாகவும் எல்லாக் குழந்தைகளும் படித்து முன்னேறுவதற்கு ஏதுவாகும். அதிலும், குறிப்பாக இந்த 2 வயது முதல் 5 வயது குழந்தைகளைப் பராமரிக்கும் திட்டத்தை ஒவ்வொரு கிராமத்திற்கும் கொண்டுவந்து, ஆங்காங்கு ஒரு பயிற்சி நிலையத்தை ஏற்படுத்துவது மிகமிக அவசியம். 1962-63-க்கான திட்டங்களிலே இதற்கு முக்கியத்துவம் கொடுக்கவேண்டும். அப்பொழுதுதான் கிராமத்திலுள்ள பள்ளிக்கூடத்திற்கு போகக் கூடிய வயது வந்த பிள்ளைகளெல்லாம் பள்ளிக்கூடத்திற்கு செல்லு வார்கள். எந்தக் காரணத்திற்காக மதிய உணவுத் திட்டம், உடை கொடை திட்டம் ஏற்படுத்தினார்களோ, அதற்கு ஏற்ற திட்ட மாக இதுவும் ஒரு முக்கியமான அமைப்பாக இருக்க முடியும் என்பதையும் நான் எடுத்துக்கூற விரும்புகிறேன்.

12-00 noon.

அடுத்தபடியாக, 65 வயதிற்கு மேற்பட்ட ஆண்கள், பெண்கள் வயோதிகர்களுக்கு ரூ. 20 உதவித் தொகை கொடுக்கும்படியான ஒரு திட்டம் இருக்கிறதே, அது மிகமிக வரவேற்கத்தக்கது. இதைக் குறித்து கூட ஒரு சிலர் வேறு விதமாக அபிப்பிராயம் கூறினார்கள். 65 வயதிற்கு மேற்பட்டவர்களுக்கு ஒரு விடுதியை ஏற்படுத்தவேண்டும், அனாதைகள் என்று சொன்னால் அதிகம் பேர்கள் வரமாட்டார்கள், அவர்களுக்கு என்று ஒரு விடுதியை ஏற் படுத்தி அரசாங்கமே அங்கே அவர்களை பராமரிப்பதற்கான திட்டங்களை ஏற்படுத்தவேண்டும் என்று சொல்கிறார்கள்.

பெற்றோர்களுக்குச் செய்யவேண்டிய கடமை பிள்ளைகளுக்கு உண்டு, ஆணுக்கும் உண்டு, பெண்ணுக்கும் உண்டு என்பதை நாம் எல்லோரும் அறிந்திருந்தால் கூட, நடைமுறையில் பார்க்கும் பொழுது 'கையிலே காசு இல்லாதவன் செல்லாத காசுக்கு ஒப்பானவன்' என்பதைக் கண்கூடாகப் பார்க்கிறோம். ஒரு பெரிய தனவந்தராக இருந்தால்கூட, ஒரு பிள்ளைக்கு பாகப்பிரி வினையின் போது ஏதோ பட்சபாதமாக நடந்துகொண்டார் என்று தோன்றினால், 'எந்தப் பிள்ளைபேரில் அதிக அக்கரை செலுத்தினீர் களோ அந்தப் பிள்ளையைப் போய் கேளுங்கள்' என்று சொல்லக் கூடிய நிலையைத் தாம் பார்க்கிறோம் ஒரு சில குடும்பத்தில்; அந்த மாதிரி சண்டை வந்துவிடுகிறது. பெற்றோர்கள் பணம் படைத்த வர்களாக இருந்து பிள்ளைகளுக்குப் பணம் வைத்திருந் தால்தான் அந்தப் பெற்றோர்களுக்கு மதிப்புக் கொடுக்கிறார்கள். இல்லையென்றால் பெற்றோர்கள் எந்த நிலையில் இருக்கிறார்கள் என்பதையும் பொருட்படுத்துவதில்லை. ஏழைக் குடும்பங்களில் அவ்வாறு இருப்பதில்லை என்று சொன்னாலும், பெரிய குடும்பத் தில் குறிப்பாகச் சொல்லுவார்கள் 'என்னுடைய தகப்பனார் படத்திற்கு ரோஜாப்பூ மாலை போடவேண்டும், அவருக்கு இன்றைக்கு திவசம்' என்றும் கூறுவார்கள். ஏன் என்றால், அதிகப் பணத்தைத் தேடி வைத்ததால் அவருக்கு அந்தச் செல்வாக்கு. அதே தகப்பன் ஒன்றுமே பணம் வைக்காமல் ஓட்டையாண்டியாக இருந்தால், அவர் மகன் 'என் தகப்பன்

என்னை எந்த நிலைமையில் வைத்திருக்கிறான், அவனுக்கு ரோஜாப்பூ மாலை போடக்கூடிய நிலைமையில் வைத்திருக்கிறானா' என்று கேட்கக்கூடிய நிலையைத்தான் பார்க்கிறோம். அந்த நிலையில் பார்க்கிறபொழுது 65 வயதிற்கு மேற்பட்ட ஆண் பெண் இரு சாராருக்கும், இம்மாதிரி பண உதவி அளிக்க முன்வந்திருப்பது மிகவும் பாராட்டத்தக்கது. இதில் எல்லோரும் வந்துவிட முடியாது; அந்தந்தப் பகுதி ஜில்லா கலெக்டர் மூலம் தான் அத்தாட்சி வாங்கவேண்டும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. நமது சராசரி வயதைப் பார்த்தால்கூட, 65 வயதிற்கு மேற்பட்டவர்கள் அதிகமாக இருக்க முடியும் என்று சொல்ல முடியாது. நாட்டில் விவசாயத்தை வளப்படுத்தி, உற்பத்தியை அதிகப்படுத்தி, மக்கள் சுபிட்சமாக வாழவேண்டும் என்று எல்லோரும் அக்கறை எடுத்துக்கொண்டாலும், நாட்டில் வறுமை இருக்கிறது என்று சொல்லப்படுகிறது. வறுமை, வறுமை என்று சொல்லிக்கொண்டு இருந்தாலும், சினிமா பார்ப்பதற்கு தவறுவதில்லை. சினிமா பார்ப்பதற்கு எங்கிருந்தோ காசைக் கொண்டுவந்து கொட்டி பார்க்கிறார்கள். சினிமா பார்ப்பதற்கு காசு இருக்கிறது, உணவுப் பிரச்னை என்றால் வறுமை என்று வாதாடுகிறார்கள். எது எப்படியிருந்தபோதிலும், வறுமையுள்ள இக்காலத்தில் அவர்களுக்கு ஏதாவது ஒரு சலுகைத் தொகை கொடுக்கிறோம், வயோதிகர்களை பராமரிப்பதற்குக்கூட என்று சொன்னால், உற்றார் உறவினர் இருந்தாலும் அவர்களைக் காப்பாற்றுவதற்கு, பராமரிப்பதற்கு ஒரு நிலைமை ஏற்படும்.

எதிர்க்கட்சியைச் சேர்ந்த சகோதரி அவர்கள் ஒரு திட்டத்தைச் சொன்னார்கள். கூன், குருடு, செவிடு, முதலிய அங்க ஹீனர்கள் சங்கரா சிவ சங்கரா என்று பாடித் திரிபவர்களுக்கு 60 வயது வந்தவர்கள் என்று சொல்லி ஒரு சலுகை அளிப்பதைவிட, அவர்களுக்காக ஒரு விடுதி ஏற்படுத்தி, அவர்களை பல தொழில் முறைகளில் ஈடுபடுத்த வேண்டும். காகிதப் பூ செய்தல், பாய் முடைதல் போன்ற தொழிலில் ஈடுபடுத்தவேண்டும் என்று சொல்லுகிறார்கள். அதைப் பார்க்கும்பொழுது என் மனதில் தோன்றியதை நான் எடுத்துச் சொல்லாமல் இருக்க முடியவில்லை. அங்கஹீனமாகப் போனவர்கள் நாடி தளர்ந்து சக்தி இல்லாதவர்கள். 60 வயதானவர்கள். அவர்கள் அப்படி ஒன்றும் செய்ய முடியாமல் பிச்சை எடுத்துக்கொண்டிருக்கும்பொழுது, அவர்களை அனாதை விடுதியில் பிடித்து வைத்து, வேலையிடுவதென்றால், சிறையில் அடைத்து, கடுங்காவல் தண்டனை அளித்து, அவர்களை கல் உடைக்கச் சொல்லுவது, செக்கு இழுக்கச் செய்வது என்று சொல்லுவது போல் ஆகும். அவர்கள் கையாலாகாதவர்கள், குருடு, செவிடு, நொண்டி, முடம் போன்ற அங்கஹீனம் ஆனவர்களுக்கு நரம்பு தளர்ந்து நாடி தளர்ந்து போயிருக்கும், அவர்களால் எந்த வேலையை உருப்படியாகச் செய்ய முடியும்? அப்படியிருக்கும்பொழுது அவர்களுக்கு வேலைகளைக் கொடுத்து அவர்களுக்கு சிரமத்தைக் கொடுத்து உதவித் தொகை கொடுக்கிறோம் என்று சொல்லுவது அர்த்தமாகுமா? நியாய

மும் ஆகுமா என்பதை நான் எடுத்துக்கூற விரும்புகிறேன். அவர்களுக்கு என்று ஒரு விடுதி ஏற்படுத்தி, அவர்களை அதில் அடைத்து வைக்கவேண்டும், சாப்பாடு கொடுக்கவேண்டும் என்று சொல்லுவது நல்ல முறையல்ல, நியாயமும் அல்ல என்பதைத் நான் வற்புறுத்திக்கூற விரும்புகிறேன்.

அதோடுகூட, இம்மாதிரியான வசதிகளையெல்லாம் செய்யும் காலத்திலே, கைம்பெண்கள் விஷயத்திலேயும் கொஞ்சம் அக்கரை செலுத்தவேண்டும். பெண்கள் ஜனத்தொகையில் பெருவாரியாக இருக்கிறார்கள் என்பது அரசாங்கம் அறிந்ததுதான். விதவைப் பெண்களுக்கு பல நிலையங்களிலே பயிற்சிகள், உத்தியோகங்கள் கொடுத்து வருகிறார்கள் என்றாலும், அந்நிலையங்களில் 30 பேர்களில் 10 பேர்கள் விதவைப் பெண்களுக்கு வேலை கொடுத்து வருகிறார்கள் பயிற்சி கொடுத்து வருகிறார்கள் என்றாலும், 4, 5 குழந்தைகளை வைத்திருக்கும் ஒரு விதவைப் பெண், தன் 4 குழந்தைகளையும் விட்டு விட்டு அவள் மட்டும் தனியாக எப்படி ஒரு நிலையத்திற்குச் சென்று பயிற்சி பெற முடியும்? 65 வயதிற்கு மேலானவர்களுக்கு சலுகை அளிக்கக்கூடிய நிலையில், அப்பேர்ப்பட்ட குழந்தை களோடு கூடிய விதவைப் பெண்களுக்கும் கலெக்டர் மூலம் அத் தாட்சி பெற்று, அன்னாருக்கும் ரூ. 20 தொகை உதவுவது மிகவும் நன்மையாக இருக்கும் என்பதைத் தெரிவித்துக்கொள்ள விரும்பு கிறேன்.

அடுத்தபடியாக, தொழில் துறையிலும் கூட நாம் முன்னேற்றம் அடையவேண்டும், தொழிலில் அபிவிருத்தி அடையவேண்டும், அப் பொழுதுதான் உண்மையிலேயே நம்முடைய பொருளாதாரம் முன்னேறமுடியும் என்ற ஒரு நிலையிலே, 1962-63-க்கான நிதி நிலை அறிக்கையிலே திருச்சியில் பிராந்தியக் கல்லூரி, திருச்சிராப் பள்ளி, திண்டுக்கல், பரமக்குடி, மேட்டூர் ஆகிய இடங்களில் தொழிற் பயிற்சி நிலையங்களை நிறுவ ஏற்பாடு ஆகியிருக்கிறது என்றும், தூத்துக்குடியிலும், மாயூரத்திலும் பொதுப் பொறியியற் பட்டறைகள் நிறுவப்படும் என்றும் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இதற்கெல்லாம் நாம் அரசாங்கத்தை பாராட்டக் கடமைப்பட் டிருக்கிறோம். மேலும், சென்னையில் குழந்தைகளுக்கு ஆஸ்பத் திரியை நிறுவவும் திட்டமிட்டுள்ளார்கள். அதே சமயத்தில் மற்றொன்றையும் நான் எடுத்துக் கூற விரும்புகிறேன். பெண்கள் செய்யும்படியான தொழில்களெல்லாம் என்னவென்று பார்க்கப் போனால், அவர்கள் ஆசிரியர்களாக வேலை செய்ய முடியும், அரசாங்க காரியாலயங்களிலே வேலை செய்ய முடியும், மேல் படிப்பு படித்து பயிற்சி பெறவேண்டுமென்றால், மருத்துவக் கல்லூரியில் படித்து பட்டம் பெறவேண்டும். இந்த மூன்று காரியங்களில் தான் பெண்கள் அதிகமாக அக்கரை கொண்டிருக் கிறார்கள் என்பதை நாம் பார்க்கிறோம். ஏழை மக்கள் முன்னேற்றம் அடையவேண்டும் என்று கருதுகிறோம். ஏழைகளாக இருக்கக் கூடியவர்களுக்கு மருத்துவக் கல்லூரியில் படிப்பதற்கு சலுகைகள் கொடுக்கிறோம் என்று சொன்னாலும் கூட, அதி சீக்கிரத்தில்

மருத்துவக் கல்லூரியில் படிப்பதற்கு அதிகம் பேர்கள் முன்னுக்கு வரமாட்டார்கள். கிராமத்தில் இருக்கக்கூடிய பல குடும்பங்களில் உள்ளவர்கள் உடனே இம்மாதிரி ஒரு பெரிய அந்தஸ்தைக் காண முடியும் என்று எதிர்பார்க்க முடியாது. ஏனென்றால் இப்பொழுது தான் கல்வித் துறையிலே தரப்படுகிற சலுகைகளை பெற்றுக் கொள்ளுவதற்கு பலர் முன் வந்திருக்கிறார்கள். அந்த நிலையில் பார்க்கிறபொழுது, மருத்துவக் கல்லூரி, பொறியியல் கல்லூரி முதலியவைகளில் சேருவதற்கு உதவியாக கடன் தொகை கொடுத்தாலும், இப்பொழுது இருக்கும்படியான நிலையில் அவைகளை புரிந்துகொண்டு சீக்கிரமாக முன்னுக்கு வர அவர்களால் இயலாது. அவர்கள் இப்பொழுது படிப்பு முடிந்தவுடன் ஆசிரியர் பயிற்சியைத் தான் நாடிச் செல்லுகிறார்கள். எஸ்.எஸ்.எல்.ஸி. படித்து முடிந்தவுடன் 'டிரையினிங் செண்டர்' எங்கே இருக்கிறது என்று தான் பார்த்துக்கொண்டிருக்கிறார்கள். ஒவ்வொரு ஜில்லாவிலும் பெண்கள் ஆசிரியர் பயிற்சி நிலையங்கள் இருக்கின்றன. அதே மாதிரி ஆண்களுக்கும் இருக்கின்றன. பெண்கள் அதிகப்படியாக ஆசிரியர் பயிற்சி பெறுவதற்கு முன்வருவதினால், தாலுகாவிற்கு ஒரு பெண் ஆசிரியர் பயிற்சி பள்ளிக்கூடம் நிறுவவேண்டும் என்று இந்த சமயத்தில் எடுத்துக்கூற விரும்புகிறேன்.

அதோடுகூட, அணைத்திட்டங்கள், பெரிய ரோடு திட்டங்கள் இம்மாதிரியான திட்டங்களையெல்லாம் பார்க்கும்பொழுது, பெரிய தார் ரோடு, சிமெண்டு ரோடு, 'ஆஸ்பால்டு காங்க்ரீட் ரோடு' இவைகளுக்கெல்லாம் திட்டங்கள் வகுத்து, அதற்கான தொகையெல்லாம் ஒதுக்கப்பட்டு வரும் காலத்தில், ரோடு வசதியே இல்லாத பல குக்கிராமங்கள் இருக்கின்றன. அந்தமாதிரியான கிராமங்களுக்கு ரோடு வசதி ஏற்படுத்தினால், அந்தப் பகுதியில் இருக்கும்படியான கிராம மக்களுடைய பொருளாதாரம் முன்னேற முடியும், நாகரீகம் முன்னேற முடியும். அவர்கள் விளைவிக்கும்படியான விவசாய தானியங்களையெல்லாம் நல்ல விலைக்கு அடுத்த பிரதேசங்களில் கொண்டுபோய் விற்க முடியும். ஆகவே ரோடு வசதி செய்து கொடுப்பது மிகவும் அவசியம். விடப்பட்டுள்ள அணைத்திட்டங்களெல்லாம் அவசியம், எவ்வளவு சீக்கிரம் அவைகளை எடுத்துச் செய்ய முடியுமோ அவ்வளவு சீக்கிரம் செய்யவேண்டும் என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் ஏதோ தேர்தல் அறிக்கை என்று சிலர் சொல்லுகிறார்கள். ஒன்று மட்டும் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். ஆட்சியில் இருக்கக்கூடிய காங்கிரஸ் கட்சியினர் தேர்தல் வந்துவிட்டால் என்ன சொல்ல முடியும், நாங்கள் ஆட்சியை ஏற்றுக்கொண்ட பிறகு, நிர்வாகத்தில் என்னென்ன காரியங்கள் செய்திருக்கிறோம் என்பதைச் சொல்லித் தான் வோட்டு கேட்க முடியும், அதைத் தான் மக்களிடத்தில் சொல்ல முடியும். அதற்காக வேண்டி மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தையே தேர்தல் அறிக்கை என்று சொல்ல முடியாது. ஆனால், அடுத்த கட்சிக்காரர்கள், மண்ணைக் கயிறாகத் திரிப்போம்,

வானத்தை வில்லாக வளைப்போம், நாங்கள் ஆட்சிக்கு வந்தால் ஆறுகளில் பாலும் தேனும் ஓடச் செய்வோம் என்று சொல்லி வோட்டுக் கேட்க முடியும். ஆனல் ஆளும் கட்சிக்காரர்கள், நடந்ததை எடுத்துச் சொல்லி, நடத்தப் போகும் காரியங்களையும் எடுத்துக் கூறித்தான் வோட்டுக் கேட்கமுடியும். இவைகள்தான் நாங்கள் செய்திருப்பது, செய்யப்போவது, எங்களை ஆதரியுங்கள் என்றுதான் கேட்கமுடியும். எனவே இந்த மூன்ருவது திட்டம் ஒரு தேர்தல் திட்டம் என்று கூறுவது சரியல்ல. ஏன் மூன்ருவது திட்டம் மட்டுமா ? முதல் இரண்டு திட்டங்களும் செய்யவில்லையா ? ஆகவே, இம்மாதிரியான தவருன அபிப்பிராயங்களையும் எண்ணங்களையும் பரப்புவது மியாமாகாது. கட்சிக்கொள்கை வேறு கொள்கை அடிப்படையில் மாறுதலாகப் பேசலாம். ஆனல் எல்லோரும் சேர்ந்து இருந்து செயல்படும் திட்டங்களை தேர்தல் திட்டம் என்று சொல்லுவது நியாயமற்றது என்று கூறி பல நல்ல திட்டங்களை வகுத்துள்ள 1962-63 ஆண்டு நிதிநிலை அறிக்கையை மறுபடியும் வரவேற்று என் பேச்சை முடிக்கிறேன்.

**SRI A. V. P. ASAITHAMBI :** சட்ட மன்றத் துணைத் தலைவர் அவர்களே, இடைக்காலத்திற்கு என்று சமர்ப்பிக்கப் பட்டுள்ள நிதி நிலை அறிக்கையை திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்பில் இதிலுள்ள குறைபாடுகளை சுட்டிக்காட்டிப் பேச நான் விரும்புகிறேன். இந்த நிதி நிலை அறிக்கை கனம் நிதி அமைச்சரின் கடைசி பட்ஜட் என்று அவர்கள் குறிப்பிட்டு இருக்கிருர்கள். உள்ளபடியே, இது காங்கிரஸ் கட்சியின் கடைசி பட்ஜட்டாக இருக்கவேண்டும் என்பது என்னுடைய விருப்பம், ஆனல் கனம் நிதி அமைச்சருடைய கடைசி பட்ஜட்டாக இருக்கக்கூடாது என்று நான் விரும்புகிறேன். ஏனென்றல், எதிர்காலத்தில் ஏற்படும் திராவிட நாட்டின் முதல் நிதி அமைச்சராக அவர்கள் இருக்கவேண்டும் என்பதும் என் விருப்பம் (சிரிப்பு) ஆம், அது தான் என் விருப்பம்.

இந்த இடைக்கால பட்ஜட்டிலே 1,008 திட்டங்கள் இருந்தாலும், ஐந்தாண்டுத் திட்ட சாதனைகளைக் காட்டியிருந்தாலும், எதிர்க்கட்சிக்காரன் என்கிற முறையில், அவைகளை நான் பாராட்டுவதற்கில்லை. காரணம், நாம் இங்கே கூடியிருக்கும் கட்டடத்தைக் கட்டியவர்கள் நாங்கள்தான் என்று வெள்ளைக்காரர்கள் சொன்னலும், மேட்டூர் அணையைக் காட்டி இதைப் பாராட்டுங்கள் என்று வெள்ளைக்காரர்கள் சொன்னலும், பாம்பன் பாலத்தை காட்டி இதையும் நாங்கள் தான் அமைத்தோம், இதைப் புகழ்ந்து பேசுங்கள் என்று வெள்ளைக்காரர்கள் சொன்னலும், உண்மையான தேசீய வாதிகள் அதைப் புகழ்ந்து, பாராட்டிப் பேச மாட்டார்கள்.

**THE HON. SRI C. SUBRAMANIAM :** இங்கிலீஷ்காரர்களை வைத்திருக்கும் அளவில்தான் எங்களையும் வைத்திருக்கிறீர்களா என்று கேட்க விரும்புகிறேன்.

12th December 1961]

**Sri A. V. P. ASAITHAMBI :** வெள்ளைக்காரர்கள் ஆட்சிக்கு உட்பட்டு அடங்கி ஒடுங்கி இரட்டை ஆட்சியை நடத்திய ஜஸ்டிஸ் கட்சிக்காரர்களை எப்படி தேசத் துரோகிகள் என்று சொல்கிறார்களோ, அதேபோல இன்றையதினம் மன்றத்திலே சமர்ப்பித்திருக்கும் பட்ஜட்டை துரோகிகளெல்லாம் சேர்ந்து போட்ட பட்ஜட என்பதை மிக மிக வருத்தத்தோடு தெரிவிக்கிறேன். ஏனென்றால் .........

**The Hon. Sri C. SUBRAMANIAM :** அங்கத்தினர் தனக்கு திராவிட முன்னேற்றக் கட்சியில் இருக்கும் பற்றை அது மாதிரி நிரூபிக்க வேண்டிய அவசியமில்லை. வேறு விதத்தில் காட்டிக் கொள்ளலாம்.

**Sri A. V. P. ASAITHAMBI :** திராவிட முன்னேற்றக் கழகத்திற்கும் எனக்கும் இருக்கும் உறவு முறை சொந்த முறை ; அதைக் காப்பாற்ற என்னால் முடியும், அதற்கு நிதி அமைச்சர் ஆலோசனை தேவையில்லை, அனாவசியம். அந்தக் காலத்தில் ஜஸ்டிஸ் கட்சிக்காரர்கள் எப்படி வெள்ளைக்காரர்களுக்கு உட்பட்டு இரட்டை ஆட்சியை நடத்தினார்களோ அதேமாதிரி ஹிந்தி பேசும் வட நாட்டு ஆட்சிக்கு கட்டுப்பட்டு, இன்றைக்கு இரட்டை ஆட்சி இங்கே நடக்கிறது. அந்த இரட்டை ஆட்சியை நடத்தும் காங்கிரஸ் கட்சியினரால் இறுதியாக இடைக்காலத்திற்கு சமர்ப்பிக்கப்பட்டுள்ள பட்ஜட்டிலே பல திட்டங்கள் இருந்தாலும், எதிர்க் கட்சிக்காரன் என்ற முறையிலே, உண்மையான சுதந்தரத்தை விரும்புகிறவன் என்ற முறையிலே, இதைத் தயாரித்த கனம் நிதி அமைச்சரைப் பாராட்டத் தயாராக இல்லை. ஆனால், நிதி அமைச்சரை ஒரு வகையில் பாராட்டுகிறேன். நான் சார்ந்திருக்கும் திராவிட முன்னேற்றக் கழகத்திற்கு அடிக்கடி உணர்ச்சியையும், ஊக்கத்தையும் கொடுப்பவர் சாக்ஷாத் நிதி அமைச்சர், சுப்பிரமணியம் தான். அடிக்கடி ஏதாவது காரணத்தினால் உறங்குகிறவர்களையும் எழுப்பி, பேசாமல் இருந்தாலும் "ஏன் பேசாமல் இருக்கிறீர்கள்" என்று எழுப்பிவிடும் அந்த அளவுக்கு, அவர்கள் செயல்பட்டு, திராவிட முன்னேற்றக் கழகம் உயிர் பெற்று நல்ல முறையிலே வளரவேண்டும் என்று ஆர்வம் அளிப்பதற்காக—அது பகிரங்கமாக இல்லாவிட்டாலும், அந்தரங்கத்தில் இருப்பதற்காக—அவர்களைப் பாராட்டுகிறேன். இந்த இடைக்கால நிதி நிலை அறிக்கையில் திராவிட முன்னேற்றக் கழகத்திற்கு சாடைமாடையாகச் சுட்டிக் காட்டி இருக்கிறார் என்பதைக் குறிப்பிட்டுக் காட்ட விரும்புகிறேன். ஊழியர்களுடைய ஊதியத்திற்காக மத்திய அரசு நேற்று வரை ரூ 2.5 கோடி அளவில் கொடுத்து வந்தது, ஆனால் அதை இந்த ஆண்டு நிறுத்தி விட்டது என்று சுட்டிக்காட்டி இருக்கிறார். திராவிட முன்னேற்றக் கழகத்திற்கு வேண்டியது அது ஒன்றுதான். ஆனால், அதை நிதி அமைச்சர் எந்த முறையில் சொல்லுகிறார்கள்

[Sri A. V. P. Asaithambi] [12th December 1961

என்ருல், துண்டு விழும் ரூ. 6½ கோடிக்குக் காரணம் என்னென்ன என்று சொல்லும்போது, அதுவும் துண்டுவிழக்காரணம் என்று காட்டுகிருர். அதுதான் திராவிட முன்னற்றக் கழகத்தைத் தூண்டிவிடும் தந்திரம் என்று நான் கருதுகிறேன். மத்திய அரசு நேற்று வரை வழங்கி வந்த ரூ. 2.5 கோடியை நிறுத்தி விட்டது; நீங்கள் வாதாடுங்கள்; நாங்கள் அங்கே போனுல், ஏதாவது கிடைக்கும் என்ற காரணத்தினுல், அவர்கள் அந்த அளவுக்கு எடுத்துக்காட்டி, நிதிக் கமிஷன் விசாரனே இருந்து வருவதையும் குறிப்பிட்டிருக்கிருர்கள். அதற்காக அவர்களே நான் பாராட்டு கிறேன்.

இந்த நிதி நிலே அறிக்கையானது உள்ளபடியே பிச்சைக் காரர்களே அடியோடு புறக்கணித்திருக்கிறது. நான் நினைக் கிறேன், பிச்சைக்காரர்கள் கையில் வோட்டுக் கிடையாது என்று அவர்கள் கருதி இருக்கலாம். நான் சந்தேகிக்கிறேன், பிச்சைக் காரர்கள் எட்டணுக் கொடுத்து வோட்டு பெற்று நிதி அமைச் சரைத் தோற்கடிக்க வரக்கூடாது என்றுதான். ஒரு சுதந்தர நாட்டில் பிச்சைக்காரர்கள் இருக்கிருர்கள் என்ருலே, அங்கு சுதந்தரம் இல்லே என்பதற்கு அது ஒரு எடுத்துக் காட்டு. அந்த அளவு இருக்கும் போது, பிச்சைக்காரர்களே ஒழிக்க திட்டங்களேத் தயாரிக்காமல், அவர்களுக்கு ஓய்வுத் தொகை அளிப்பதும் அவ்வளவு நல்லதல்ல. சுயராச்சியம் அடைந்து 14 ஆண்டுகள் ஆகியும், பிச்சைக்காரர்கள் ஒழியாமலும், நாட்டில் அவர்களே ஒழிக்கப் போதிய திட்டங்கள் வகுக்காமலும் இருப்பது மிக மிக வருந்தத் தக்கது. நிதி அமைச்சர் 10 ஆண்டு காலமாக செய்த பணிகளில் இந்த அளவில் ஒரு மாறுதல் செய்து காட்டியிருந்தால், மிக மிக நன்ருக இருந்திருக்கும். பிச்சைக்காரர்களே ஒழிப்பது அப்படி ஒன்றும் கஷ்டம் இல்லே. பிச்சைக்காரர்கள் பிச்சை எடுப்பதைத் தடைசெய்து, பிச்சைக்காரர்களேப் பராமரிக்க விடுதி களே "ஏ" பிரிவு நகர சபைகளும், கார்ப்பொரேஷனும் நடத்த அனுமதி கொடுத்து, நாட்டிலே பிச்சை எடுப்பவர்களேப் பிடித்து விடுதிகளில் சேர்த்து, அவர்களுக்கு ரோடுபோடுவது, கார் ஓட்டுவது போன்றவைகளில் பயிற்சி கொடுத்து, அவர்களே உபயோகமாகச் செய்யலாம். அவர்களுக்கு கூலியும் மற்றவர்களே விடக் குறைவாகக் கொடுக்கலாம். அதனுல் அந்த விதத்தில் நாளாவட்டத்தில் வருமானமும் அதிகம் வரும். ஆரம்ப காலத்தில் செலவு என்று அரசாங்கம் மிகக் கவலேப்படவேண்டாம். இன்றைக்கு சினிமா மூலம் எண்டர்டெயின்மெண்ட் டாக்ஸ் கிடைக்கிறது. அதை அந்த அந்தப் பகுதியிலிருக்கும் "ஏ" பிரிவு நகர சபைகள், கார்ப்பொரேஷன் இவைகளில் எவை அம் மாதிரி விடுதிகளே நடத்துகிறதோ அவர்களுக்கு அந்த வசூலேக் கொடுத்து, அந்த அளவில் அதைச் செய்யலாம். குறிப்பாக இரண்டு மூன்று ஆண்டு காலங்களுக்கு அம்மாதிரி நடத்தினுல், நாட்டிலே பிச்சைக்காரர்கள் என்பதே இல்லாமல் ஓரளவு அவர்கள் ஒழிகின்ற வழிவகை ஏற்படும். அந்த நிலே ஏற்படக் கூடிய திட்டம் ஒன்றும் இந்த பட்ஜட்டில் இல்லே. அது வரும் எண்ணமும் இருப்பதாகத் தெரியவில்லே.

12th December 1961] [Sri A. V. P. Asaithambi]

அடுத்தபடியாக, நிதி அமைச்சர் இந்த மன்றத்திலே இனி இல்லாமல், வடக்கே போகப் போவதாகச் சொல்லி, பாராட்டிச் சொன்னார்கள். ஆனால் நான் அவருக்குப் பாராட்டுச் சொல்ல விரும்பவில்லை. ஒரு எச்சரிக்கையைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். "வடக்கு" என்பது ஒரு ஆபத்தான இடம் (சிரிப்பு). ஏதோ எங்கள் கட்சியிலே உள்ளவர்கள் சொல்வதாக மாத்திரம் இதை நினைக்கக்கூடாது. சர்க்கார் கொடுத்துள்ள ஆதாரங்களை வைத்துக்கொண்டே நான் இதைச் சொல்லுகிறேன். வடக்கே கோயம்புத்தூரிலிருந்து சென்ற உலகப் புகழ் பெற்ற பொருளாதார நிபுணர் திரு. ஆர். கே. ஷண்முகம் செட்டியார் நிலைத்து நிற்க முடியாமல் திருப்பி அனுப்பப்பட்டார். அதே மாதிரி சென்னையிலிருந்து திரு. டி. டி. கிருஷ்ணமாச்சாரியார் சென்றார். அவராலும் அங்கே நிலைத்து நிற்க முடியவில்லை. திருப்பி அனுப்பப்பட்டார். ஆனால் லால்பாதூர் சாஸ்திரி விலகினாலும்கூட திரும்ப அழைத்துக்கொள்ளப்பட்டார். வடக்குக்கும் தெற்குக்கும் உள்ள பேதம் இதுதான். நமது நிதி அமைச்சர் அவர்கள் அங்கே நிதிப் பொறுப்பிலிருந்தாலும், அதிலிருந்து விழாது நிலைத்து நிற்குமாறு ஜாக்கிரதையோடு இருக்கவேண்டும். அப்படி அவர்கள் திருப்பி அனுப்பப்பட்டாலும், அது லாபமென்றே நான் கருதுவேன். திருப்பி அனுப்பப்பட்ட நிதி அமைச்சர் அவர்கள் அப்பொழுதுதான் உணருவார்கள், "திராவிட நாடு திராவிடருக்கே" என்று சொல்லுவார்கள். அப்பொழுது மூலையில் இருக்கமாட்டார். இந்த நிதி நிலை அறிக்கையைப் பாராட்ட முடியாமல் இருப்பதற்காக நான் வருந்துகிறேன். அவரை வாழ்த்தி வழியனுப்புகிறேன்.

Sri K. S. SUBRAMANIA GOUNDER: கனம் உதவி சபா நாயகர் அவர்களே, நமது கனம் நிதி அமைச்சர் அவர்களுடைய 1962-63-ம் ஆண்டு நிதி நிலை அறிக்கையைப் பாராட்டி ஒருசில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். இதுவரையில் இந்த சபையில் நடந்த விவாதம் ஏதோ எதிர்க்கட்சியில் உள்ளவர்கள் என்ற காரணத்தால் இந்த நிதி நிலை அறிக்கையை பாராட்ட முடியாது. அதனால் எதிர்க்கவேண்டும் என்ற முறையிலே இருந்தது என்பதை ஞாபகப்படுத்த விரும்புகிறேன். எந்தக் காரணத்தால் அதை எதிர்க்கிறோம் என்று ஒரு எதிர்க் கட்சி அங்கத்தினர்கூட பேசவில்லை. நான்கு மாத காலத்திற்காக கொண்டுவந்த பட்ஜட்டாக இருந்தாலும் அதிலே பல சலுகைகள் கொடுக்கப்பட்டிருப்பதை அவர்கள் எதிர்பார்த்திராமல் இருக்கலாம். அவ்வாறு வந்தது அவர்களுக்கு ஒரு பெரிய அதிர்ச்சியாக இருக்கிறது. அதைத்தவிர குறிப்பாக இந்த நிதி நிலை அறிக்கையிலே எது சரியில்லை என்று சொல்லக்கூடிய அளவிலே யாரும் ஒன்றும் சொல்லவில்லை. ஆனால் சில யோசனைகள் சொல்லப்பட்டன. முதியோர்களுக்கு ஓய்வு ஊதியம் கொடுப்பதிலே ஏன் 65 வயது நிர்ணயிக்கவேண்டும், பிச்சைக்காரர்களை ஏன் புறக்கணிக்கவேண்டும் என்றெல்லாம் பேசினார்கள் ஆனால் இங்கே கொடுக்கப்பட்டிருக்கும் சலுகை கூடாது என்றோ

[Sri K. S. Subramania Gounder] [12th December 1961

அல்லது வரவேற்கத்தக்கது அல்ல என்றோ யாரும் சொல்லவில்லை. நான்கு மாத பட்ஜெட்டாக இருந்தாலும் அதிலே பல சலுகை களுடன் இந்தத் திட்டத்தை சமர்ப்பித்ததற்கு நான் கனம் நிதி அமைச்சரவர்களை பாராட்டுகிறேன். இது தேர்தலுக்காக உரிய அறிக்கை என்ற அளவிலே பலர் பேசினார்கள். இது எந்த அளவிலே இருக்கிறது என்பதை நாம் சிந்தித்துப்பார்க்கவேண்டும். எதிர்க்கட்சி அங்கத்தினர்களும் சிந்தித்துப் பார்க்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். சாதாரணமாக, தேர்தலுக்காக சலுகை காட்டவேண்டும் என்ற நமது கனம் நிதி அமைச்சரவர்கள் நினைத்திருந்தால் மற்ற ஆண்டுகளிலே ஒன்றும் செய்யாமல் கடைசி ஆண்டிலே எல்லாம் செய்திருக்கலாம். ஆனால் ஒவ்வொரு ஆண்டிலும் நிதி நிலை அறிக்கையை சமர்ப்பிக்கும்போது பல நல்ல காரியங்கள் தொடர்ந்து செய்து வந்ததை எதிர்க்கட்சியினர் மறுக்க முடியாது. அதே சமயத்தில் தேர்தல் வருகிறது என்ற காரணத்திற்காக சலுகைகள் கொடுப்பதையும் அரசாங்கம் நிறுத்திவிட முடியாது. வருஷா வருஷம் தொடர்ந்து செய்யக் கூடிய காரியங்களை நாலு மாதக் காலமாக இருந்தாலும் கொடுக்க வேண்டும் என்ற அளவிலே இந்தச் சலுகைகளை கொடுத்திருக் கிறார்கள். ஆனால் இந்தமாதிரி சலுகையால் தேர்தல் வரும் போது ஆளும் கட்சியினர் இதைப் பயன்படுத்தி விடுவார்களோ என்று சிலர் வருத்தப்பட்டால் அதற்கு ஆட்சியிலே இருக்கிற காங்கிரஸ் அரசாங்கம் பொறுப்பாக இருக்கமுடியாது என்பதை நான் தெரிவித்துக் கொள்கிறேன். முதியோர்களுக்காக கொடுத் திருக்கக்கூடிய ஓய்வு ஊதியம் உண்மையிலேயே வரவேற்கத் தக்கது. 65 வயது என்ற நிர்ணயம் இருக்கலாமா, அல்லது இன்னும் குறைக்கலாமா என்பதெல்லாம் ஆராய வேண்டிய விஷயம். ஒருவேளை 60 என்று அரசாங்கம் போட்டிருந்தாலும் அதை ஏன் 55-ஆக வைத்துக்கொள்ளக்கூடாது என்ற வாதம் எழும். 60 என்று சொல்லிவிட்டாலும் உடனே அதை யாரும் ஒப்புக்கொள்ள மாட்டார்கள். முதியோர்கள் என்று சொல் வதினாலே 65 என்று வைத்திருக்கிறார்கள், என்று நினைக்கிறேன். தொடர்ந்து சலுகைகள் கொடுக்கும்பொழுது, வேண்டுமானால் நிலைமையைப் பரிசீலனை செய்து வயதை குறைத்தாலும் குறைக்க லாம். பிச்சைக்காரர்கள் ஏன் புறக்கணிக்கப்பட்டுவிட்டார்கள் என்று எதிர்க்கட்சியில் பலர் அதைப்பற்றி பேசினார்கள். அதே நேரத்தில் பிச்சைக்காரர்களுக்கு பல திட்டங்கள் இருக்கின்றன என்பதை யாரும் மறந்து விட முடியாது. ஆனால் பிச்சைக்காரர் களுக்கு ஓய்வு ஊதியம் கொடுக்கவேண்டும் என்பதை யாரும் ஒப்புக்கொள்ள முடியாது என்ற வகையிலே, அவர்களுக்கு வேறு திட்டங்கள் இருக்கின்ற காரணத்தினாலே, இதிலிருந்து அவர்களை நீக்கியிருக்கிறார்கள் என்று நான் கருதுகிறேன்.

அடுத்தபடியாக சேலத்திலே ஒரு என்ஜினியரிங் கல்லூரி ஏற் படும் என்று குறிப்பிட்டிருப்பது உண்மையிலேயே வரவேற்கத் தக்கது. சேலம் ஜில்லாவாசிகள் பல ஆண்டுகளாக இதை வேண்டி வந்தனர். இந்த ஆண்டு அமைச்சரவர்கள் இதைப்பற்றி குறிப்

12th December 1961] [Sri K. S. Subramania Gounder]

பிட்டிருப்பது எல்லோருக்கும் மகிழ்ச்சியைத் தருகிறது என்பதை தெரிவித்துக் கொள்ளுகிறேன். எல்லா ஜில்லாக்களையும்விட சேலம் ஜில்லாவானது நிலப்பரப்பிலும் ஜனத்தொகையிலும் அதிகமாக உள்ளது. அதே சமயத்தில் மிகவும் வறுமைமிக்க ஜில்லா என்பதையும் நாம் மறந்துவிட முடியாது. சேலம் ஜில்லாவிற்கு ஒரு மருத்துவக் கல்லூரி அவசியம் என்பதையும் நான் இந்த சமயத்திலே சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். மருத்துவக் கல்லூரி அமைக்கவேண்டுமானுல் அங்கு ஒரு நல்ல ஆஸ்பத்திரி இருக்கவேண்டும். சேலம் ஒரு பெரிய நகராயிருந்தாலும் அங்குள்ள தலைமை ஆஸ்பத்திரி இட வசதிக்குறைவாக இருக்கிறது. வேறு இடத்திலே ஒரு பெரிய ஆஸ்பத்திரியைக் கட்டுவது உசிதமாக இருக்கும் என்பதையும் நான் இங்கே வலியுறுத்த விரும்புகிறேன். சேலம் ஜில்லாவிலே ஹோசூர் தாலுக்காவிலே இருக்கக்கூடிய கால்நடைப்பண்ணையானது தமிழ் நாட்டிலே மிகவும் சிறந்த வகையிலே இருக்கக்கூடிய ஒரு பண்ணை. அதையொட்டி ஒரு கால்நடைக் கல்லூரி அங்கே அமையுமானுல் உண்மையிலேயே சிறந்ததாக இருக்கும் என்பதை நான் தெரிவித்துக் கொள்கிறேன்.

நீர்ப்பாசன வசதியைப் பொறுத்தவரையில் நம்முடைய தமிழ் நாட்டிலே எந்த அளவுக்கு அதிகமாக வசதிகள் செய்ய முடியுமோ அந்த அளவுக்கு அரசாங்கம் வசதி செய்து கொடுத்திருக்கிறது. அண்டை நாட்டிலுள்ள தண்ணீரையும் பேரம் பேசி நல்ல முறையிலே நாம் பயன்படுத்திக்கொண்டு வருகிறோம். அதற்காக நான் அரசாங்கத்தை பாராட்டுகிறேன். ஆனுல் சேலம் ஜில்லாவிற்கு இன்னும் நீர்ப்பாசன வசதி சற்று அதிகமாக செய்து கொடுப்பதற்கு அரசாங்கம் முன்வரவேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன். மேட்டூரிலே புதிதாக மேகதாது என்ற இடத்திலே ஒரு அணை கட்டுவதாக இருக்கிறது. அதன் மூலமாக சேலம் ஜில்லாவுக்கு தண்ணீர் வசதி செய்து கொடுக்க முடியும். இப்பொழுது ஏற்கெனவே திட்டத்தில் இருக்கக்கூடிய பொன்னியாறு, திருமணிமுத்தாறு ஆகிய திட்டங்களை சீக்கிரத்திலேயே அமல் நடத்துவதற்கு அரசாங்கம் முன்வரவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அவற்றை இன்வெஸ்டிகேஷன் செய்வதற்கு ஏற்பாடுகள் செய்ததற்கு நான் அரசாங்கத்தைப் பாராட்டுகிறேன். அதோடு, இப்பொழுது மேட்டூர் கால்வாய் பள்ளிபாளயத்தில் நிற்கிறது. அதை ஜோடர்பாளையம் வரை கொண்டு போவதற்கான திட்டத்தை சிக்கிரத்தில் மேற்கொள்ளவேண்டுமென்றும் கேட்டுக்கொள்கிறேன்.

12-30 p.m.

மின்சாரத்தைப் பொறுத்த வரைக்கும் தமிழ் நாட்டில் மின்சார விஸ்தரிப்பு நல்ல முறையில் அபிவிருத்தி அடைந்திருக்கிறது என்றுதான் சொல்லலாம். இன்னும் அபிவிருத்தி அடைவதற்கு வேண்டிய வாய்ப்பு இருக்கிறது என்பதை இந்த சமயத்தில் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். மின்சார போர்டுக்கு ராஜ்யம் பூராவும் லைசென்ஸ் கொடுக்கக்கூடிய

அளவிற்கு அதிகாரம் கொடுப்பது என்று ஒரு திட்டம் இருப்பதாகத் தெரிய வருகிறது. அதை சீக்கிரத்தில் அமுல் நடத்தினல் இன்னும் அதிகப்படியான மின்சார விஸ்தரிப்பைக் காணலாம். ஆகவே அதற்கு அரசாங்கம் முன் வரவேண்டும் என்று இந்த சமயத்தில் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

கூட்டுறவு பொறுத்த வரையில் அரசாங்கம் பல வழிகளிலும் உதவி அளித்து வருகிருர்கள் என்பதை இந்த சமயத்தில் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். அதற்கு அரசாங்கத்தை நான் பாராட்டவும் விரும்புகிறேன். இருந்தபோதிலும் தமிழ் நாட்டின் கூட்டுறவு இயக்கம் வெகு வேகமாக முன்னேறிக் கொண்டு வரக்கூடிய அளவில் இருக்கிறது. மற்ற ராஜ்யங்களில் ஏற்பட்ட முன்னேற்றத்தைவிட இங்கு அதிகமாக முன்னேற்ற மடைந்திருக்கிறது என்று கூட சொல்லலாம். ஆனல் மற்ற ராஜ்யங்களில் இல்லாத சில கஷ்டங்கள் தமிழ் நாட்டிற்கு இருக்கிறது என்பதையும் இந்த சமயத்தில் சொல்லிக்கொள்ளாமல் இருக்க முடியவில்லை. அதாவது ரிசர்வ் பாங்கியிலிருந்து விவசாயிகளுக்குக் கிடைக்கக்கூடிய பணம் போதிய அளவில் விவசாயிகளுக்குக் கிடைக்கவில்லை என்ற இந்த சிரமம் இந்த தமிழ் நாட்டில் தான் இருக்கிறது. இதை உணர்ந்து நமது அராசங்கம் சப்ளிமெண்டரி பட்ஜெட்டில் 1½ கோடி ரூபாய் கொடுக்க முன் வந்திருக்கிருர்கள். அதற்கு அரசாங்கத்தை நான் பாராட்டுகிறேன். உண்மையிலேயே பாராட்ட வேண்டியதுதான். விவசாயிகளுடைய சௌகர்யத்திற்காக கூட்டுறவு இயக்கத்தின் மூலமாக எடுத்துக்கொண்ட இந்த முடிவு நல்ல முடிவு தான். இப்படிப்பட்ட தொந்தரவு அடிக்கடி ஏற்படாதவாறு இருக்க அதற்கு நிரந்தரமாக ஏதாவது ஒரு வழி செய்யவேண்டும் என்பதைச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். இப்பொழுதுள்ள நிலைமையில் கூட்டுறவு சங்கம் அதிகப்படியாக கடன் கொடுக்க முடியாத நிலைமையில் இருக்கிறது. ரிசர்வ் பாங்கியில் அதற்கு வேண்டிய டெபாசிட் இல்லாமல் இருப்பதால் கூட்டுறவு சங்கங்களுக்கு அதிகப்படியான பணம் கிடைப்பதாக இல்லை. ஆகவே சர்க்காருடைய காரண்டியை அதிகப்படுத்தினல் விவசாயிகளுக்குக் கொடுக்கக்கூடிய அளவில் கூட்டுறவு சங்கங்கள் அதிகப்படியான பணத்தை ரிசர்வ் பாங்கியிலிருந்து வாங்குவதற்கு வசதியாக இருக்கும். அதற்கு டிபெஞ்சர் என்று ஐந்து வருஷத்திற்கு என்று ஒன்று ஆரம்பித்தால் சீக்கிரத்தில் பணம் சேரும் என்ற நம்பிக்கை இருக்கிறது. அப்படிச் செய்தால் இப்பொழுது இருக்கக்கூடிய 27 கோடி ரூபாய் ஐம்பது கோடியாக ஆவதற்கு வழி ஏற்படும். அதை வைத்துக்கொண்டு விவசாயிகளுக்கு கடன் கொடுக்க முடியும். ஆகவே இதைப்பற்றி யோசனை செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். ஆகவே அரசாங்கத்தின் உதவி இருப்பின் லாண்ட் மார்ட்கேஜ் பாங்கிகளுக்கு டிபெஞ்சர் 5 வருஷங்களாகி இருப்பின் எவ்வளவு பணம் வேண்டுமானுலும் கிடைக்கும் என்ற உறுதி ஏற்படும். அதற்கு அரசாங்கம் உடனடியாக என்ன செய்யவேண்டுமோ அதைச் செய்யவேண்டும் என்று கேட்டுக்

12th December 1961] [Sri K. S. Subramania Gounder]

கொள்ளுகிறேன். அதற்கு வேண்டிய ஏற்பாடு செய்யவேண்டும் என்றும் கேட்டுக்கொள்ளுகிறேன். இன்னும் விவசாயத்தைப் பொறுத்த வரையில் கூட்டுறவு சங்கங்கள் மூலமாக ரசாயன உரங்களை விநியோகம் செய்ய ஏற்பாடு செய்யப்பட்டிருப்பதைக் கண்டு அரசாங்கத்தை நான் பாராட்டுகிறேன். இருந்த போதிலும் உரம் கலப்பதில் அதற்கு என்று ரசாயன உரம் கொடுப்பதில் பாரபட்சம் இருக்கிறது என்பதை நான் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். உரத்தை விற்பவர்கள் கூட்டுறவு சங்கங்களாக இருக்கக்கூடாது. ரசாயன உரம், அம்மோனியம் சல்பேட் கலப்பு உரம் முதலியவைகள் தயார் செய்வது கூட்டுறவு சங்கங்களாக இருக்கவேண்டும். அவர்களுக்குத்தான் விரிவாகக்கொடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

சாதாரணமாக சேலம் போன்ற இடங்களில் கிணறுகளை வெட்டித்தான் விவசாயம் செய்கிறார்கள். பல இடங்களில் கிணறுகளை வெட்டுவதாக இருந்தால் அடியில் பாறைகள் இருக்கின்றன. அதிகமாக ஆழம் வெட்டிக்கொண்டு போக முடியவில்லை. அப்படி வெட்டுவதாக இருந்தாலும் ஐந்தாயிரம் அல்லது பத்தாயிரம் செலவு செய்ய வேண்டியதாக இருக்கிறது. சில இடங்களில் இவ்வளவு செலவுசெய்தாலும் பாறைகள் அதிகமாக இருக்கிறது அங்கு இன்னும் அதிகம் வெட்ட முடிவதில்லை. அங்கெல்லாம் கிணறுகளை வெட்டுவதற்கு நவீன முறையில் கருவிகளைக் கொடுக்க அரசாங்கம் முன்வரவேண்டும். அந்த மாதிரி இடங்களில் ப்ளாஸ்டிக் யூனிட், புல் டோசர் போன்ற கருவிகளை கொடுத்தால் நலமாக இருக்கும். அவைகளை வைத்துக்கொண்டு அதிகமாக ஆழமாக கிணறுகளை வெட்டிக்கொள்வார்கள். ஆகவே வேண்டிய அளவில் புல் டோசர்களையும் ட்ராக்டர்களையும் வாங்கிக்கொடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். இன்றைக்கு ஒவ்வொரு ஜில்லாவிலும் வேண்டிய அளவில் புல் டோசர்களும் ட்ராக்டர்களும் இருக்கிறதா என்றால், போதுமான அளவில் கிடையாது என்றுதான் சொல்லவேண்டும். ஆகவே இன்னும் அதிகமாக புல் டோசர்களையும் ட்ராக்டர்களையும் விவசாயிகளுக்கு வாங்கிக் கொடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அதற்கு வேண்டிய ஏற்பாடுகளை அரசாங்கம் செய்யவேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

குடி தண்ணீர் திட்டத்தை பொறுத்த வரையில் அங்கங்கே கிணறுகளை வெட்டினால் குடி தண்ணீர் நெருக்கடியை சமாளித்துக் கொள்ளலாம். குடி தண்ணீர் கஷ்டத்தைப் போக்க ஒரு திட்டத்தைத் தயாரிக்கவேண்டும் என்று சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். அதைச் செய்தால் குடி தண்ணீர் கஷ்டத்தை ஓரளவில் சமாளிக்கலாம் என்று தோன்றுகிறது. ஒவ்வொரு கிராமத்திலும் பொதுவான இடத்தில் ஒரு கிணறு வெட்டிக் கொடுக்கலாம். நகரங்களில் செய்திருப்பதைப் போன்று பல கிராமங்களை ஒன்றாகச் சேர்த்து ரன்னிங் வாட்டர் சப்ளை ஸ்கிம் என்ற அளவில் பெரிய நகரங்களில் இருப்பது போன்று குறிப்பாக

ஐந்தாறு கிராமங்களை ஒன்ருகச் சேர்த்து ஒரு இடத்தில் தண்ணீர் வசதி செய்து கொடுத்து அந்த இடத்திலிருந்து மற்ற இடங்களுக்கு தண்ணீர் சப்ளை செய்யும் திட்டத்தை மேற்கொள்ளலாம். அதன்மூலம் குடி தண்ணீர் கஷ்டத்தை நிரந்தரமாக போக்கலாம்.

கடைசியாக நல்ல முறையில் இந்த பட்ஜெட்டை சமர்ப்பித்ததற்கு கனம் நிதி அமைச்சர் அவர்களுக்கு என்னுடைய பாராட்டுதலை தெரிவித்துக்கொண்டு என்னுடைய வார்த்தைகளை இத்துடன் முடித்துக் கொள்ளுகிறேன்.

**Sri T. SAMPATH :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, கனம் நிதி அமைச்சர் அவர்களால் சமர்ப்பிக்கப்பட்டிருக்கிற இந்த இடைக் கால வரவு செலவு திட்டத்தை ஆதரித்து சில கருத்துக்களைச் சொல்ல விரும்புகிறேன். என்னுடைய கருத்துக்களைச் சொல்வதற்கு முன்னதாக மற்ற கனம் அங்கத்தினர்கள் எல்லாம் கூறியதுபோல் நம்முடைய கனம் நிதி அமைச்சர் அவர்களை நான் பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறேன். அந்த வகையில் நமது கனம் நிதி அமைச்சர் அவர்கள் கடந்த பத்து ஆண்டு காலமாக இப்படிப்பட்ட பொறுப்புள்ள ஒரு இலாகாவை நல்ல முறையில் நிர்வகித்து வந்ததற்கு அவரை நான் மனமார பாராட்டுகிறேன். இந்த 1962-63 வருடத்திய இடைகால வரவு செலவு திட்டத்தை முதலில் சமர்ப்பித்தது நம்முடைய மாகாணம் தான். சென்னை மாகாணம்தான் முதல் முதலாக இந்த இடைக்கால பட்ஜெட்டை சமர்ப்பித்தது. பொது தேர்தலுக்குப் பிறகு புது மந்திரி சபை ஏற்பட்டு கொள்கைகளையும் திட்டங்களையும் வகுத்து 1962-63-க்கு ஆன விரிவான ஒரு வரவு செலவு திட்டத்தை சமர்ப்பிக்க இருக்கிறது என்று இந்த அறிக்கையில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஒரு வருஷத்தில் இரண்டு வரவு செலவு திட்டம் சமர்ப்பிக்கக்கூடிய ஒரு நிலை ஏற்படுகிறது. இந்த சமயத்தில் என்னுடைய ஒரு யோசனையைச் சொல்லக் கடமைப்பட்டிருக்கிறேன். இந்த யோசனையை புது மந்திரி சபை யோசனை செய்யும் என்று நான் எண்ணுகிறேன். அதாவது இந்த அக்கௌண்டிங் பீரியட் இருக்கிறதே அதை மாற்றி அமைத்தால் அதாவது காலண்டர் வருஷத்தை ஜூலையிலிருந்து ஜூன் வரையிலும் மாற்றி அமைத்தால் இம்மாதிரி இரண்டு வரவு செலவு திட்டங்கள் சமர்ப்பிக்க வேண்டிய சந்தர்ப்பம் ஏற்படாது என்று நான் எண்ணுகிறேன். இந்த ஒரு யோசனையை புது மந்திரி சபை பரிசீலனை செய்ய வேண்டும் என்றும் கேட்டுக்கொள்ளுகிறேன்.

இந்த வரவு செலவு திட்டத்தில் நாம் முக்கியமாக கவனிக்க வேண்டியது நடைமுதல் ஆண்டு அதாவது 1961-62 ஆண்டுக்கும் 1962-63-க்கும் சுமார் 6 கோடி ரூபாய்க்கு மேல் பற்ருக்குறை ஏற்பட்டிருக்கிறது என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. 1962-63-க்கு பற்ருக்குறை அதிகமாக இருக்கிறது என்றும் அவர்களுடைய குறிப்பில் சொல்லப்பட்டிருக்கிறது. அதற்கு காரணங்களும்

சொல்லப்பட்டிருக்கிறது. அந்தக் காரணங்கள் எல்லாம் ஏற்கெனவேயுள்ள காரணங்கள் தான். இந்த சந்தர்ப்பத்தில் என்னுடைய மற்றொரு யோசனையையும் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். அதாவது இப்படிப்பட்ட பற்றுக்குறை வரவு செலவு திட்டம் இருப்பது சரியல்ல என்பதை நான் சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன். பொருளாதார நிபுணர்கள் என்ன சொல்லுகிறார்கள் என்றால் இப்படி பற்றுக்குறை இருக்கக்கூடாது என்றுதான் சொல்லுகிறார்கள். இப்படிப்பட்ட பற்றுக்குறை ஏற்படுவதால்தான் பொருளாதார நெருக்கடி ஏற்படுகிறது என்றும் சொல்லுகிறார்கள். இப்பொழுதுகூட சிலர் குறை சொல்லுகிறார்கள். அதாவது விலைவாசிகள் உயர்ந்து விட்டன என்று. அதற்கும் இதுதான் காரணம் என்றும் சில நிபுணர்கள் சொல்லுகிறார்கள். ஆகையால் இந்த அரசாங்கம் இதை புறக்கணிக்காமல் இதற்கு பரிகாரம் காண பரிசிலனை செய்யவேண்டும் என்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன். இந்த நிலைமையை சமாளிக்க அரசாங்கம் ஏதோ காரணம் சொல்லுகிறார்கள். ஆனால் கனம் அமைச்சர் அவர்கள் ஒரு காரணத்தை மட்டும் சொல்லி இருக்கிறார். மத்திய அரசாங்கத்திலிருந்து அதிகமான பங்கு நமது ராஜ்யத்திற்கு கிடைக்கும் என்ற நம்பிக்கை சொல்லப்படுகிறது. அதோடு மட்டுமல்லாமல், பொருள்கள் மீது மத்திய அரசாங்கத்தாரால் விதிக்கப்படுகிற வரியிலிருந்து நமக்கு அதிகப் பங்கு கிடைக்கும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. நேற்றையதினம் ஒரு கனம் அங்கத்தினர் பேசும்போது, இந்த நிலையில் இந்த வரவு செலவுத் திட்டத்தில் பற்றுக்குறையை அதிகப்படுத்திக் காட்டியிருக்கலாம் என்று கூடச் சொன்னார்கள். 'பூஸ்டிங்' என்று சொல்வார்கள். இந்த பட்ஜெட்டை 'பூஸ்ட்' பண்ணிக் காட்டி, மத்திய அரசாங்கத்திடமிருந்து அதிகப் பணம் வர ஏற்பாடு செய்திருக்கலாம் என்றும் அவர்கள் சொன்னார்கள். அம்மாதிரி கூடச் செய்ததாக எனக்குத் தெரியவில்லை. ஆனால் இந்த நிலைமை நீடித்திருக்கக்கூடாது என்பதுதான் என்னுடைய கருத்து. இதைச் சமாளித்தாக வேண்டும். இதைச் சமாளிக்கவேண்டுமென்றால் வரி அதிகமாக விதிக்கவேண்டும். வரி விதிப்புக்கும் யோசனை கூறப்படவில்லை. இப்பொழுது இருக்கும் வரியே அதிகமாக இருக்கிறது. இனிமேல் வரி விதித்தால் மக்கள் வரிச் சுமையைத் தாங்க இயலாது. எனக்கு ஒரே ஒரு வழிதான் தோன்றுகிறது. அதாவது செலவினங்களைப் பெருமளவு குறைக்கவேண்டும் என்பது. அதைத் தவிர வேறு வழியில்லை. ஆகவே, இந்த நேரத்திலே அரசாங்கம் கவனத்தைச் செலுத்தி, துண்டு விழுவதைச் சரிக்கட்டவேண்டுமென்று தெரிவித்துக் கொள்கிறேன்.

நடைமுதல் ஆண்டில் ஒதுக்கப்பட்ட தொகைக்கு மேலாக, மூன்றாவது திட்டத்திற்கு ஐந்து கோடி ரூபாய் அதிகமாக ஒதுக்கப்பட்டிருக்கிறது. இது மிகவும் வரவேற்கத்தக்க விஷயம். அது மட்டுமல்லாமல், இந்த வரவு செலவுத் திட்டத்தில் 'அபென்டிக்ஸ்' ஒன்று இணைத்திருக்கிறார்கள். அதைப் படித்துப் பார்த்தால் 100 புதிய திட்டங்கள் அதில் சேர்த்திருப்பதாகக் காணப்

படுகிறது. இது இடைக்கால வரவு செலவுத் திட்டம். அதிலே 'வோட் ஆன் அகௌண்ட்' தான் எடுக்கப்படும். இந்தத் திட்டங்கள் முடிவாக இடம் பெறுமா என்பது சந்தேகமாக இருக்கிறது. எல்லாத் திட்டங்களும் இடம் பெறவேண்டும் என்று தான் தெரிவித்துக் கொள்கிறேன்.

புதிய திட்டங்களில் முக்கியமாக இரண்டு பொறியியற் கல்லூரிகள்—திருச்சியிலே ஒன்றும் சேலத்திலே ஒன்றும்—ஏற் படுத்தப் போவதாகக் குறிப்பிடப் பட்டிருக்கிறது. ஆனல், தஞ்சையிலே ஒரு பொறியியற் கல்லூரி ஏற்படுத்த வேண்டுமென்று நீண்ட காலமாகவே கேட்டுக்கொண்டிருக்கிறேம். அதற்கு ஒரு தனிப்பட்ட நபர் பணம் கொடுத்து உதவுவதற்கு முன்வந்ததாகக் கூடக் கேள்விப்பட்டேன். அப்படியிருக்குமானல் தஞ்சை ஜில்லாவில் ஒரு பொறியியற் கல்லூரியை ஏற்படுத்துவது பற்றியும் பரிசிலனை செய்யவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கின்றேன்.

இரண்டு புதிய திட்டங்கள் இதிலே குறிப்பிடப்பட்டிருக் கின்றன. 'பெனிவலண்ட் பண்டு' என்று குறிப்பிடப்பட்டிருக் கிறது. இது அரசாங்கப் பணியாளர்களுக்கும் ஆசிரியர்களுக்கும் நன்மை தரக்கூடியதாக இருக்கிறது. மற்றெரு நன்மையான திட்டம் வயதுவந்த அனுதை முதியோர்களுக்கு என்று வகுக்கப் பட்டிருக்கிறது. இந்தச் சந்தர்ப்பத்தில் மற்றெரு விஷயத்தை யும் நான் குறிப்பிட விரும்புகிறேன். பென்ஷன் ஸ்கீம், பெனிவலண்ட் பண்டு இதுபோன்ற நல்ல திட்டங்கள் அரசாங்கப் பணியாளர்களுக்கும் ஆசிரியர்களுக்கும் தொழிலாளர்களுக்கும் ஏற்பாடாகியிருக்கின்றன. ஆனல், வக்கீல்களுக்கு மாத்திரம் யாதொருவிதமான சலுகையும் கொடுக்கப்படவில்லை. வக்கீல்களை உண்மையிலேயே 'ஆபீஸர்ஸ் ஆப் கவர்ன்மென்ட்' என்றுதான் நான் குறிப்பிட விரும்புகிறேன். நல்லமுறையில் அவர்கள் செய லாற்றுகிருர்கள். அவர்களுக்கு ப்ராவிடென்ட் பண்ட் திட்டம் கிடையாது. இது சம்பந்தமாக தனிப்பட்ட முறையில் நான் ஒரு மசோதா தயார் செய்திருந்தேன். அதை இங்கு சமர்ப்பிப்பதற்கு இந்த மன்றமும் அனுமதி அளித்தது. ஆனல், மசோதாவைப் பரி சிலனை செய்வதற்கு அரசாங்கம் அனுமதி அளிக்கவில்லை. இந்தச் சந்தர்ப்பத்தில் கனம் நிதி அமைச்சர் அவர்களை நான் கேட்டுக் கொள்ள விரும்புவது—என்னுடைய மசோதாவைப் பரிசிலனை செய்து அரசாங்கமே ஒரு நல்ல திட்டமாக இதற்குக் கொண்டுவர வேண்டும் என்பதுதான்.

மற்றெரு விஷயத்தை நான் குறிப்பிட விரும்புகிறேன். இதில் குறிப்பிடுகிற பெனிவலண்ட் பண்டு திட்டமானது கெஜட் பதிவில் லாத அரசாங்கப் பணியாளர்களுக்கு உண்மையிலேயே நல்ல திட்டமாகும். அரசாங்க ஊழியர்களும் நல்ல முறையில் சேவை செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்ள விரும்புகிறேன். அரசாங்கம் இன்னும் திறம்பட நிர்வாகத்தை நடத்துவதற்கு அவர்கள் உதவவேண்டும். 'எபிஷியன்ஸி இன் அட்மினிஸ்ட்ரேஷன்' ஏற்பட அவர்கள் உழைக்கவேண்டும். நிர்வாகம் நல்ல முறையில் திறமையாக நடப்பதற்கு வேண்டிய ஒத்துழைப்பை அவர்கள்

12th December 1961] [Sri T. Sampath]

கொடுக்க வேண்டும். அரசாங்க அலுவலகங்களில் 'டிலே இன் டிஸ்போஸல்' அதிக அளவில் இருக்கிறது. அதற்கு இடமே கொடுக்கக்கூடாது. பேப்பர்கள் சீக்கிரமாகப் பைசல் செய்யப் படவேண்டும். அரசாங்கம் அவர்களுடைய சிப்பந்திகளுக்குச் செய்கிற நன்மைகளை மனதில் வைத்துக்கொண்டு, நிர்வாகத் துறையில் இருப்பவர்கள் இன்னும் நல்ல முறையில் செயல்பட்டு, மக்களுக்கு அதிகப் பயன் ஏற்படுமாறு அவர்கள் உழைக்க வேண்டும் என்று நான் தெரிவித்துக் கொள்கிறேன்.

வயதான முதியவர்களுக்கு வகுக்கப்பட்டிருக்கும் திட்டத்தில் 65 வயது என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. அதை 60-ஆகக் குறைத்தால் இந்த நன்மை இன்னும் பல பேர்களுக்குக் கிடைக்கக் கூடும். அந்த வகையில் இதைப் பரிசீலனை செய்து வயதை 60-ஆகக் குறைக்கவேண்டுமென்று நான் கேட்டுக் கொள்கின்றேன்.

நிதி நிலை அறிக்கையில் 3-வது பாராவிலும் 5-வது பாராவிலும் மூலதனச் செலவு அதிகமாக்கப்பட்டுள்ளது. மின்சாரத் திட்டங் களுக்கு ரூ. 15.41 லட்சத்திற்குப் பதிலாக ரூ. 18·20 லட்சமாக உயர்த்தப்பட்டிருக்கிறது. நீர்ப்பாசனத் துறைக்கு 7 கோடியி லிருந்து 17 கோடியாக உயர்த்தப்பட்டிருக்கிறது. இதை நான் மிகவும் வரவேற்கிறேன். நம் ராஜ்யத்தில் பெரிய மின்சாரத் திட்டங்கள் எல்லாம் நிறைவேற்றப்பட்டுவிட்டன. சிறிய நீர்ப் பாசனத் திட்டங்களில் அரசாங்கம் அதிகக் கவனம் செலுத்த வேண்டுமென்று நான் கேட்டுக் கொள்கிறேன். குறிப்பாக, தஞ்சை ஜில்லாவில் சிறிய நீர்ப்பாசனத் திட்டங்கள் வகுத்து நிறைவேற் றப்படவேண்டும். வடிகால், பாய்க்கால் திட்டங்கள் தஞ்சை ஜில்லாவில் நல்ல அளவில் அமையவேண்டும், வாய்க்கால்கள் செப் பனிடப்படவேண்டுமென்றும் நான் கேட்டுக் கொள்கிறேன். தஞ்சை ஜில்லாவிற்கென்றே ஒரு தனி இன்ஜினிரிங் யூனிட் அமைக் கப்போவதாகச் சொல்லப்பட்டது. அது இன்னும் செயல்பட வில்லை. அதை உடனடியாகச் செயல்படுத்தவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன்.

நேற்று கனம் அங்கத்தினர் திரு. ஸ்ரீனிவாசய்யர் ஒரு விஷயத் தைக் குறிப்பிட்டார்கள். காவிரி ஆற்றில் மற்றொரு அணை ஹொக்கனக்கல் என்னும் இடத்தில் கட்டுவது பற்றி. நிதி அமைச்சர் அவர்கள் ஒரு சந்தர்ப்பத்தில் பேசும்போது, தஞ்சை ஜில்லாக்காரர்கள் புதிய அணைக்கட்டுத் திட்டங்கள் போடுவதை ஆட்சேபணை செய்கிறார்கள் என்று சொன்னார்கள். எங்களுக்கு யாதொரு ஆட்சேபணையும் இல்லை. நீர்ப்பாசன வசதிகள் மற்ற ஜில்லாக்களுக்கும் நல்ல முறையில் ஏற்படவேண்டுமென்பதுதான் எங்களுடைய எண்ணமும். நீர்ப்பாசன வசதி ஏற்படுவதோடு கூட, மின்சார அபிவிருத்தியும் எல்லா இடங்களிலும் அதிகமாக்கப் படவேண்டும் என்பதிலும் எங்களுக்கு ஆட்சேபணை இல்லை. ஆனால், ஒரு விஷயத்தை மாத்திரம்—கனம் அங்கத்தினர் திரு. ஸ்ரீனிவாச அய்யர் குறிப்பிட்டதுபோல்—நான் இங்கே குறிப்பிட விரும்புகிறேன். தஞ்சை ஜில்லாவானது நெல் களஞ்சியம் என்று

[Sri T. Sampath] [12th December 1961

ஏற்கனவே பெயர் எடுத்திருக்கிறது. மற்ற ஜில்லாக்களுக்கு அது உதவுகிறது. அந்த அளவிலே சில நீர்ப்பாசன உரிமைகள் (இர்ரிகேஷன் ரைட்ஸ்) தஞ்சை ஜில்லாவுக்கு அளிக்கப்பட்டிருக்கின்றன. அந்த உரிமைகள் பாதிக்கப்படாது, அந்த உரிமை பறிபோகாது என்று எங்களுக்கு உறுதி கொடுத்தால் போதுமானது. எங்கள் ஜில்லாவுக்கு இருந்துவருகிற நீர்ப்பாசன உரிமைகள் (இர்ரிகேஷன் ரைட்ஸ்) பாதிக்கப்படாத அளவுக்கு மேற்கொண்டு அணைக்கட்டுத் திட்டங்களை வகுத்து நிறைவேற்றுவதில் எங்களுக்கு யாதொரு ஆட்சேபணையும் இல்லை என்று நான் கூறிக்கொள்ள விரும்புகிறேன்.

* **Sri T. R. RAMAMIRTHA THONDAMAN:** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த மன்றத்தில் நிதி அமைச்சர் அவர்கள் கொண்டுவந்திருக்கக்கூடிய இடைக்கால நிதி நிலை அறிக்கையை வரவேற்பதுடன், சென்ற பத்து ஆண்டுக் காலமாகத் தமிழகத்திற்கு அவர் செய்த சேவையையும் பாராட்டிச் சில வார்த்தைகள் நான் சொல்ல விரும்புகிறேன். பத்து ஆண்டுக்காலமாக இந்த மாநில சர்க்கார் பல திட்டங்களைத் தீட்டி நல்ல முறையில் அவைகளை நிறைவேற்றி வந்திருக்கிறது. அறியாமையிலிருந்து நாட்டு மக்களை விடுதலை செய்யவேண்டுமென்ற நிலையிலும், பசியின் கொடுமையிலிருந்து மக்களைக் காப்பாற்றவேண்டுமென்ற நிலையிலும், மனிதன் அடிமைத் தனத்திலிருந்து நீங்கி, மனித தன்மையுடன் மனிதன் மனிதனை வாழவேண்டுமென்ற குறிக்கோளோடும், அரசாங்கம் சென்ற பத்து ஆண்டுக் காலமாக எடுத்துக்கொண்ட முயற்சிகள் வெற்றி பெற்றிருப்பதை இன்று நாம் காண்கிறோம். சென்ற இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களில் (குறைந்த அளவு) இதைத்தான் நாம் நிச்சயமாகக் காண முடிகிறது. இந்த அளவில் தமிழ்நாட்டில் ஒரு பெரிய புரட்சிகரமான மாறுதலை எல்லாத் துறைகளிலும் ஏற்படுத்தியிருக்கிறோம் என்பதில் ஐயமில்லை. மேற்கொண்டு நிறைவேற்ற வேண்டிய திட்டக் காரியங்களுக்கும் உரிய வேலை திட்டங்களை மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்த்திருக்கிறோம் என்ற பெருமை தமிழ்நாட்டு அரசாங்கத்திற்கு உண்டு. இதைக் குறித்து தமிழ்நாட்டு மக்கள் மட்டுமல்ல, மற்ற மாநிலங்களிலிருந்து வரக்கூடியவர்களும், உலக நாடுகளிலிருந்து வரக்கூடிய பார்வையாளர்களும் கூட, தமிழ்நாடு, உணவு, உடை, கல்வி, மின்சாரம் இவைகளில் முன்னேறியிருப்பதை நேரில் வந்து பார்த்து பாராட்டு தெரிவித்திருக்கிறார்கள். சுதந்திரம் பெற்ற சில ஆண்டுகளுக்குள்ளாகவே, ஜனநாயக முறையில் மக்களுக்கு அதிகாரம் வழங்கி மக்களால் ஆட்சி நடக்கிறது என்ற முறையில் இயங்கிவரும் ஒரு நாட்டில், திறமையான முறையில் நிர்வாகத்தை நடத்தி, முன்னேற்றகரமான கொள்கைகளையும், திட்டங்களையும் வகுத்துச் செயல்படுவதில் நமது மாநிலம் முன்னணியில் இருக்கிறது என்பதைப் புகழ்ந்து பாராட்டியிருக்கிறார்கள். இதற்கெல்லாம் காரணம் கர்மவீரர் திரு. காமராஜ் தலைமைதான் என்பதை மக்கள் உணர்ந்து இருக்கிறார்கள். அதன் காரணமாகத்

12th December 1961] [Sri T. R. Ramamirtha Thondaman]

தான் "நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்ற தமிழ் முதுமொழிப்படி கனம் நிதி அமைச்சர் சுப்பிரமணியம் அவர்கள் மத்திய நிதி அமைச்சராக வரவேண்டும் என்று அழைக்கிறார்கள். தமிழ்நாட்டு மக்களுடைய எண்ணத்தில் அவர் நிரந்தரமான தொரு இடம் பெற்ற காரணத்தினால், தமிழ்நாட்டு மக்களுக்கு அவர் செய்திருக்கும்படியான அரிய சேவையினால், அவர் இன்றைக்கு மத்திய அரசினால் அழைக்கப்படுகிறார். அவரது சேவை தமிழ்நாட்டுக்கு மட்டும் பயன்பட்டால் போதாது, மற்ற மாநிலங்களில் இருக்கக்கூடிய பிற்பட்ட தன்மையை ஒழிப்பதற்கும், மனிதத் தன்மையையற்ற இழிநிலையை அழிப்பதற்கும், ஆங்காங்குள்ள பொருளாதார ஏற்றத்தாழ்வுகளை ஒழித்து, சாதி மதபேதமற்ற, சமுதாயத்தை அதாவது சோஷலிஸ சமதர்ம சமுதாயம் உருவாவதற்குப் பயன்படவேண்டும் என்று விரும்பு கிறார்கள். அத்தகைய பெரும்பணியை ஏற்றுக்கொள்ள அவரால் தான் சாத்தியப்படும். மத்திய அரசில் மட்டும் இருந்தால் போதாது, ஐக்கியநாட்டு ஸ்தாபனத்தின் மூலம் அவரது சேவை உலகநாடுகளுக்கு எல்லாம் பயன்படவேண்டும் என்பது தமிழ் நாட்டு மக்களது அவாவும், எனது கருத்துமாகும். எனக்கு முன்னால் பேசிய கனம் ஆசைத்தம்பி அவர்கள் இது காங்கிரஸ் கடைசி பட்ஜெட் என்றும், நிதி அமைச்சர் தி.மு.க. வில் சேர்வார் என்றும் சொன்னார்கள். நிச்சயமாக அத்தகைய துரோகத் தன்மை எங்களுடைய சரித்திரத்தில், எங்களுடைய பரம்பரையில் எங்கள் வம்சத்தில் ஒரு நாளும் இருந்ததும் இல்லை. எங்களுடைய தூய பரம்பரையில் வந்துள்ள—உருவாகியுள்ள கனம் நிதி அமைச்சர் சுப்பிரமணியத்திடம் அந்த எண்ணம் கொஞ்சங்கூட கிடையாது. சென்ற காலத்தில் சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபட்டு, விடுதலை இயக்கத்தில் தன்னை அர்ப்பணித்துக்கொண்டு பலவிதமான தியா கங்களை எல்லாம் புரிந்த காங்கிரஸ் ஸ்தாபனத்தில் இடம் பெற்ற வர். நிதி அமைச்சர் அவர்கள் எங்களை எல்லாம் அந்தப் பக்கம் இழுத்தது திரு. சுப்ரமணியம் சார்ந்திருக்கும் காங்கிரஸ் ஸ்தாபன மும் மகாத்மா காந்தியும்தான். அந்த தியாகத் தீயில் தன்னை அர்ப பணித்துக் கொண்ட நமது திரு. சுப்பிரமணியம் அவர்களைப் பார்த்து வடக்கே போய் இடிபட்டுத் திரும்பிவருவீர் என்றால் இது தென்னாட்டு மக்களையே இழிவுபடுத்துவதாகும். நம் மிடத்திலேயே நமக்கு நம்பிக்கையில்லாத பேச்சே தவிர அத் தகைய துரோக சிந்தனை உடையவர்கள் நாங்கள் அல்ல, காங்கிரஸ் அல்ல, நிதி அமைச்சர் அவர்களும் அல்ல என்பதை இங்கே நான் குறிப்பிட விரும்புகிறேன். உலக நாடுகளிடையே ஏற்பட்டிருக் கக் கூடிய பல செயல்களுக்கு—உலகநாடுகளிடையே எழுந்துள்ள அமைதியின்மையைத் தணிக்க எங்களுடைய நிதி அமைச்சர் அவர்கள் பணிபுரிய முடியும் என்ற நம்பிக்கை எங்களுக்கு உண்டு. பத்தாண்டு காலமாக அவர் இந்த மாநிலத்திற்குச் செய் துள்ள அரிய சேவைகளைப்போல, மத்திய சர்க்காரிலும் சென்று நல்ல பணிபுரிந்து இந்த மாநிலத்திற்குப் பெருமையும், புகழும் தேடித் தரவேண்டுமென்று வேண்டிக்கொள்கிறேன்.

[Sri T. R. Ramamirtha Thondaman] [12th December 1961

அடுத்தபடியாக இந்த நிதி நிலை அறிக்கையில் பிச்சைக்காரர் களுக்கு எவ்வித வழிவகையும் இல்லையென்று பல மெம்பர்கள் சொன்னார்கள். பிச்சைக்காரர்கள் என்று ஓர் இனம் இந்த நாட்டில் இருக்கவேண்டுமா? அத்தகைய ஓர் இனம் உண்டாகக் கூடிய வகையில்தான் இந்த நாட்டு நிர்வாகம் நடைபெற வேண்டுமா? அல்லது பிச்சைக்காரர்களே இல்லாமல் செய்வது இந்த நாட்டு நிர்வாகத்தின் முக்கிய குறிக்கோளாக இருக்க வேண்டுமா என்பதை நாம் சிந்திக்கவேண்டும். ஏதோ ஒரு குறையை எடுத்துக்காட்ட வேண்டும் என்பதற்காக பிச்சைக் காரர்களை எடுத்துச் சொல்லி குற்றம் சாட்டுவது கையாலாகாத தன்மையே தவிர வேறு ஒன்றும் கிடையாது. மேலும் "இந்தச் சர்க்கார் திறமையற்ற சர்க்கார், இந்தச் சர்க்காரினுடைய— காங்கிரஸ் சர்க்காரினுடைய கடைசி பட்ஜெட்டே இதுதான் என்று எண்ணுகிறேன்" என திரு. ஆசைத்தம்பி அவர்கள் சொன்னார்கள். அவருடைய இந்த எண்ணம் வெறும் கனவு என்றுதான் நான் கூற விரும்புகிறேன். ஒரு சாயபு கண்ணாடிக் கடையை வைத்துக்கொண்டு—கண்ணாடிக்கு பின்னால் தெரிந்த ஒரு பெண்ணின் படத்தைப் பார்த்து, "இவளைத்தான் நான் மணந்து கொள்ளப்போகிறேன்" என்று அந்தப் படத்தை காதலித்துவிட்ட தாக கற்பனை செய்து, மணந்துகொண்டு "அப்பெண்ணை இப்படிக் காலால் உதைப்பேன்" என்று உதைத்து கண்ணாடியை உடைத்து, தன் முதலையும் இழந்தான் என்ற கதை அநேகமாக எல்லோருக் கும் தெரியும். அத்தகைய ஒரு கற்பனையின் பிரதிபலிப்பாகவே கனம் அங்கத்தினருடைய எண்ணம் ஆகுமே தவிர அது உண்மை யல்ல என்று நிச்சயமாகச் சொல்ல விரும்புகிறேன். கடந்த பத்து ஆண்டு காலமாக இந்த மாநிலத்தில் காங்கிரஸ் சர்க்கார் செய்தி ருக்கும்படியான சாதனைகளை மக்கள் அறிவார்கள். அவர்களுடைய நல்லெண்ணத்தை எந்தத் தீய சக்தியாலும், பிற்போக்குத் சக்தி யாலும், வகுப்புவாதச் சக்தியாலும், பூர்ஷ்வா கும்பலினாலும் எதிர்க்க முடியாது. எதிர்ப்பதற்கு எந்த ஒரு தனி எதிர்க்கட்சி யாலும் முடியாது என்று உணர்ந்து தி.மு.க. என்ற பிரிவினைகட்டு, வகுப்புவாத முஸ்லீம் லீக், பூர்ஷ்வா சுதந்திரா கட்சி இன்னும் சோஷலிஸ்ட் நான்கு எதிர்கட்சிகளும் ஒன்றாகச் சேர்ந்து எப்படி காங்கிரஸ் ஆட்சியை இழுத்தெறிவது என்று தடுமாறி தடுமாறி தடுக்கி விழுந்துகொண்டிருக்கிற ஒரு நிலையில் இவர்கள் பேசுவது இவர்களுடைய சக்தியற்ற நிலையைத்தான் தெளிவாக்குகிறது. இந்த ஒரு பட்ஜெட் மாத்திரம் அல்ல, இனி அடுத்த சட்டமன்றக் கூட்டத்தொடரிலும் காங்கிரஸ் கட்சி பட்ஜெட்தான் வரும், இப் போதுள்ள அங்கத்தினர்கள் எண்ணிக்கையைவிட அதிகமான அங்கத்தினர்கள் காங்கிரஸ் கட்சியின் சார்பில் வரத்தான் போகி றார்கள், என்பதை நிச்சயமாக நான் கூறும்போது, அடுத்த பட்ஜெட் உரையிலே நிச்சயமாக நான் இங்கே வந்து இருந்து தமிழக ஏழை மக்கள் குரலை, உழவர்கள் குரலை, தொழிலாளர்கள் குரலையை பேசுவேன் என்பதையும் உறுதியாகச் சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன்.

12th December 1961] [Sri T. R. Ramamirtha Thondaman]

இந்த இடைக்கால நிதி நிலை அறிக்கையிலே 65 வயதுக்கு மேற்பட்ட முதியவர்களுக்கு பென்ஷன் கொடுப்பது, கல்வி சம்பந்தப்பட்டவரையில் இரண்டு வயது முதல் ஐந்து வயது வரையில் உள்ள இளம் குழந்தைகளுக்கு—தொட்டில் பழக்கம் சுடுகாட்டு மட்டும் என்று சொல்வார்கள், அந்த அடிப்படையில்—நல்ல கருத்துக்களை நல்ல பழக்கங்களை ஏற்படுத்துவதற்கு முன்னோடியாக ஒரு திட்டம் தீட்டியிருப்பது மிகவும் போற்றத்தக்கதாகும். மேலும் கல்லூரிகளில் படிக்கின்ற ஏழை எளிய மாணவர்கள் உதவி யில்லாது படிப்பை நிறுத்திவிடும் நிலை ஏற்படுகிறது என்பதை உணர்ந்து இதர எல்லா கல்விக்கும், தொழிற்கல்விக்கும், பண உதவி கடனுக அளிப்பது என்று வகுத்திருப்பது மிகச் சிறந்த ஒன்ருகும். மேலும் நம்முடைய மாநிலத்திலே மிகவும் குறுகிய காலத்திற்குள்ளாகவே நிர்வாகத்தைப் பரவலாகப் பஞ்சாயத்து, பஞ்சாயத்து யூனியன்கள் என்று பிரித்துக்கொடுத்து அவை களெல்லாம் இன்றையதினம் நல்லமுறையில் நடந்து வருகின்றன. கிராமங்களுடைய நிர்வாக முன்னேற்றம் ஒரு புரட்சிகரமான முன்னேற்றம். இதே நேரத்தில் இன்னும் மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்க்கவேண்டிய ஒன்றிரண்டு திட்டங்களைச் சொல்கிறேன். ஆடுதுறையில் ஒரு விவசாயக் கல்லூரியை ஏற்படுத்துவதற்கும், சுந்தரப் பெருமாள் கோவில், மூபனர் கருப்பையா இனமாகக் கொடுக்க முன்வந்த உதவியைப் பெற்றுக் கொண்டு ஒரு என்ஜினீரிங் கல்லூரியை ஏற்படுத்துவதற்கும் முன் வரவேண்டும் என்று கேட்டுக்கொண்டு, மிகவும் பின் தங்கிய உடையார்பாளையம் தாலூகாவையும் முன்னேற்றம் அடையச் செய்வதற்கு வழிவகை காண வருகின்றவர்களுக்கு வழிகாட்டிச் செல்லவேண்டும் நமது நிதி அமைச்சர் என்று வேண்டிக்கொள் வதோடு, நான் ஐந்தாண்டுகளாக கொடுத்திருக்கும் என் தொகுதி திட்டங்களை செய்யவேண்டும் என்று கேட்டு, நிதி அமைச்சர் திரு. சுப்பிரமணியம் அவர்கள் நீண்டகாலம் வாழ்க, வாழ்க என்று வாழ்த்தி முடித்துக்கொள்கிறேன்.

* **Sri M. KULANDAISAMI GOUNDAR** : கனம் உதவி சபா நாயகர் அவர்களே, இந்த 1962-63-ம் ஆண்டு நிதிநிலை அறிக்கையை ஆதரித்து சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். சேலம் ஏற்காடு தொகுதியில் உள்ள மலை ஜாதி மக்களுக்கு ஒருவித வசதி யும் செய்யப்படாமல் இருக்கிறது. மலைக்கு மேல் இருப்பதால் அங்குள்ள மக்கள் வீடு இல்லாமல் மிகவும் கஷ்டப்படுகிருர்கள். ஹரிஜன மக்கள், அருந்ததி மக்கள், மலைஜாதி மக்கள் போன்ற வர்கள் அங்கு வாழ்கிருர்கள். அவர்களுக்கு வீடு கட்டிக் கொடுக் கும்படி கேட்டுக் கொள்கிறேன். ஏற்காடு தொகுதியில் படிக்கும் மலை ஜாதியைச் சேர்ந்த பிள்ளைகள் மிகவும் பிற்போக்கான நிலையில் இருக்கிருர்கள். அவர்கள் பள்ளிக்குச் சென்று சும்மா உட்கார்ந்திருக்கிருர்கள், கேட்டால் அப்பா சிலேட், புத்தகம் வாங்கிக் கொடுக்கவில்லை என்கிருர்கள். உபாத்தியாயர்கள் அவர் களைக் கேட்டால், எங்களுக்கு வசதியில்லை, படிக்காவிட்டால் வேண்டாம் என்கிருர்கள். ஆகவே மலை ஜாதி மக்களின் குழந்தை

1-00 p.m.

[Sri M. Kulandaisami Goundar] [12th December 1961

களுக்கு படிப்பதற்காக வேண்டி, ஸ்லேட், புத்தகங்கள் வாங்கிக் கொடுத்தால் பத்து வருடத்தில் அவர்கள் நன்கு படித்து இந்த அரசாங்கத்தை ஆதரிக்க முன்வருவார்கள். ஏற்காட்டில் பிளாக்காடி வாழவந்தி இருந்து, 25 மைலில் ஒரு ரோடு போகிறது ஏற்காடுக்கு டவுனுக்கு வரவேண்டுமென்றால் நடந்துதான் வர வேண்டும். பஸ், அல்லது மாட்டு வண்டி, குதிரை வண்டி ஒன்றும் போக வசதியில்லை. சைக்கிள் கூட போகமுடியாது. பிளாக்காடி, வாழவந்தி கிராமங்களுக்கு பஸ் வசதியிருந்தால் அங்குள்ள மக்கள் சேலம் போன்றயிடங்களுக்கு சென்று விஷயங்களை தெரிந்து கொள்ளமுடியும். சென்னையிலிருந்து பேப்பர் போனாலும் ஒரு நாள் தங்கி மறுநாள்தான் போகிறது. புலியூர் என்று ஒரு கிராமம் இருக்கிறது, அங்கு வேறு 30 ஊர்கள் இருக்கின்றன. அங்குள்ள மக்கள் ஸ்கூலுக்கு வர சேலம் வரவேண்டும். ஏற்காட்டில் ஒரு ஸ்கூல்தான் இருக்கிறது. 30 ஊர்கள் இருப்பதற்கு இன்னும் ஒரு ஸ்கூல் ஏற்பாடு செய்யவேண்டும். மலைஜாதி மக்கள் ஆஸ்பத்திரி யின்றி கஷ்டப்படுகிறார்கள். ஆகவே அங்கு ஒரு ஆஸ்பத்திரியும் இருந்தால் மக்கள் ஜன்னி, சீதளம், மலேரியா போன்ற வியாதிகள் வந்தால் அங்கு போய் சிகிச்சை பெற்று சுகமாக இருக்கமுடியும். ஆகவே புலியூர் கிராமத்தில் ஒரு ஆஸ்பத்திரியும், ஒரு ஸ்கூலும் இருந்தால் வசதியாகயிருக்கும். சேர்வராயன் மலை அடிவாரத் திலிருந்து ஓமலூருக்கு இடையில் சரபங்கனேரி ஆறு ஓடுகிறது. அங்கு கட்டப்பட்ட பாலம் உடைந்து ஐந்து வருடம் ஆகிறது. அதுபற்றி, தாசில்தார், கலெக்டர், என்ஜினியர் இவர்களுக்கு எழுதியும் ஒன்றும் கவனிக்கப்படவில்லை. அதுபற்றி மந்திரிக்கு கூட எழுதிக் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆகவே அந்த சர்ம நங்கநேரி ஆற்றில் ஒரு பாலம் கட்டிக் கொடுத்தால் மக்களுக்கு உதவியாக இருக்கும். அங்கு ஒரு பாலம் கட்டுவதோடு தண் ணீரையும் தேக்கிக் கொடுத்தால் ஓமலூர் மக்களுக்கு குடி-தண்ணீர் வசதியும் செய்து கொடுக்கலாம். கடவாய்பட்டி என்ற ஊர் இருக்கிறது. அங்கு 150 குடி பட்டா இல்லாமல் விவசாயம் இல்லாமல் கூலிகளாகயிருக்கிறார்கள். குடும்பம்படி கிராமத்தில் சும்மா கிடக்கிற 900 ஏக்கர் நிலத்தை இந்த மலைஜாதி மக்களுக்கு கொடுத்தால் அவர்கள் நன்கு ஜீவனம் நடத்த முடியும். அடுத்த படியாக, வடகம்பட்டி—டேனீஸ்பேட்டை, சேலம் போகிற ரோடு இருக்கிறது. நடுவில் ஒரு ஆறு இருக்கிறது. அந்த ஆற்றில் ஒரு சிறு பாலம் கட்டிக் கொடுத்தால் ஜனங்கள் சேலம் சென்று வர சௌகரியமாகயிருக்கும், அதைச் செய்து கொடுக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். தீவட்டிப்பட்டி டேனீஸ்பேட்டைக்கு ஒரு ரோடு இருக்கிறது, அந்த ரோட்டை ஜல்லி போட்டு நன்றாக ஜல்லி ரோடாகச் செய்யவேண்டும். தர்மபுரிலிருந்து நடுப்பட்டிக்கு செல்கிற ரோடு ஒரு மைல் இருக்கிறது, அதையும் ஜல்லி போட்டு ஜல்லி ரோடாகச் செய்யவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். அடுத்தபடியாக, ஹரிஜனமக்களுக்கு கொடுப்பதைப் போல் மலை ஜாதி மக்களுக்கும் வேண்டிய சலுகைகள் கொடுத்து மலை ஜாதி மக்களை ஆதரிக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டு என் உரையை முடித்துக் கொள்கிறேன்.

12th December 1961]

**SRI P. S. SANTHANAM :** கனம் சட்டமன்ற உதவித் தலைவர் அவர்களே, நமது மாநில நிதியமைச்சர் அவர்கள் கொண்டு வந்திருக்கும் 1962-63-ம் ஆண்டு நிதிநிலை அறிக்கையையொட்டி நான் எனது அபிப்பிராயத்தை தெரிவிக்க விரும்புகிறேன். இன்று பலர் பலவிதக் கோணங்களில் அதிகாரத் தொனியில் பேசுவதைக் கண்டு மகிழ்ச்சியடையலாம். திருக்குறளை எடுத்துச் சொன்னார் கள், புகழேந்தியை எடுத்துச் சொன்னார்கள். நானும் ஒரு பாடலை சொல்ல பிரியப்படுகிறேன். ஒரு சினிமாவில் ஒரு பாடல் பாடி னார்கள், "சிலர் அழுவார், சிலர் சிரிப்பார், நான் அழுது கொண்டே சிரிப்பேன்" என்று பாடினார்கள். அதேபோல் இங்கும் சிலர் அழுவதுபோலவும், சிரிப்பது போலவும் பேசிப் பாராட்டி என் பகுதியில் அது இல்லை, இது இல்லை, கவர்னர் பதவி வேண்டாம் என்று சொல்கிறார்கள். இப்படியெல்லாம் சொன்ன நிலையைத்தான் இந்த மாமன்றத்தில் நான் எடுத்துக் காட்ட விரும்புகிறேன். நிதி நிலை அறிக்கையைப்பற்றி பேசும்போது, தேர்தலுக்கும் நிதிநிலை அறிக்கைக்கும் ஒரு சம்பந்தமும் இல்லை. தேர்தலில் வோட்டு பெற்று பாட்டாளி, பாமர மக்கள் தவிக்கும் தவிப்பை எடுத்துச் சொல்வதற்காகத்தான் இங்கு வந்திருக்கிறோம். 65 வயது வந்தவர் களுக்கு உதவித்தொகை கொடுப்பதால் வோட்டு கிடைத்து வந்து விடலாம் என்று சொல்லவில்லை. எந்தெந்தப் பகுதியிலிருந்து வந்திருக்கிறோமோ அந்தந்தப் பகுதி மக்களின் குறைகளை எடுத்துச் சொல்லி நிவர்த்தி காணவேண்டும். அதை விட்டு விட்டு மீதிப் பேர் சார்ந்திருக்கிற இயக்கத்தை தாக்குவதினால் ஒரு பயனும் கிடையாது. மக்களுக்கு என்ன வாக்குறுதி அளித்து விட்டு வந்திருக்கிறோமோ அதை சட்டமன்றத்தில் எடுத்துச் சொல்லி மக்களுக்கு வேண்டிய பலனைப் பெறச் செய்யவேண்டுமே தவிர அதை விட்டு விட்டு இங்கு எதை எதையோ சொல்கிறார்கள். அதிகாரம் தங்கள் கையில் இருக்கிறது என்ற காரணத்தினால் எக்காளமிட்டு பேசுகிறார்கள். அது மாத்திரமல்லாமல் இன்னும் கூறுகிறார்கள் மீண்டும் வருவோம் என்று. அங்கு ஏழைகள் உண்ண உணவின்றி, இருக்க இடமின்றி, ஓயாது உழைத்து வெய்யிலிலே வாடுகின்றான். இப்போதைய நான்கு மாத பட்ஜெட்டைப் பார்க்கும்போது உண்மையிலேயே ஒரு பக்கத்தில் வாழ்த்தவேண்டியிருந்தாலும் மற்றொரு பக்கத்தில் வாழ்த்த முடியாத நிலைமைதான் இருக்கிறது. நான் சார்ந்திருக்கின்ற திராவிட முன்னேற்றக் கழகத்தின் கொள்கை அடிப்படையில் சொல்லவில்லை. நாட்டின் முதுகெலும்புபோல இருக்கக்கூடிய தாழ்த்தப்பட்ட மக்களுடைய நிலைமையை ஆராய்ந்து பார்க்கின்ற நேரத்தில் அவர்களுக்கு ஒதுக்கப்பட்டிருக்கிற தொகை சொற்ப மாக இருக்கிறது. ஹரிஜன முன்னேற்றத்திற்கு ஒதுக்கப்பட்ட தொகை 34 லட்சம் என்று கூறப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு சமயத்திலே நான் வேதனைப்படுவது உண்டு. ஏனென்றால் ஹரிஜன முன்னேற்றம், ஹரிஜன விடுதி என்று இருக்கிறதே தவிர, ஹரிஜன மக்களின் பெயரால் நடத்தப்படுகிற நிர்வாகிகளின் நிலைமையைப் பார்க்கும் நேரத்தில் மிகவும் வேதனையாகத்தான் இருக்கிறது.

[Sri P. S. Santhanam] [12th December 1961

ஹரிஜன் வெல்பபேர் ஆபீஸர் என்று இருக்கிறார்கள். அங்கே நிர்வாகம் எந்த முறையில் இருக்கிறது என்று ஆராய்ந்து பார்த்தால், தமிழகத்தில் 6-ல் ஒரு பங்கு இருக்கக்கூடிய மக்களுக்கு நியாயம் வழங்கக்கூடிய முறையில் இல்லை. ஹரிஜன விடுதிகளைப் பார்த்தால், ஹாஸ்டல்களைப் பார்த்தால் அங்கே விகிதாச்சார பங்கு தான் இருக்கிறது. அந்த காலத்தில் ஜஸ்டிஸ் காலத்தில் சொன்னார்கள், விதாச்சார பங்கு வேண்டும் என்று—கம்யூனல் ஜீ.ஓ. வேண்டுமென்று. இன்றையதினம் ஹரிஜன மக்கள் பெயரால் மட்டும் நடைபெறுகிறது. அங்கே பார்த்தால் தாழ்த் தப்பட்ட மக்கள் 20 சதவீதம், உயர்ந்த ஜாதி மக்கள் 15 சதவீதம், ஹரிஜன மக்கள் 40 சதவீதம் என்று விதாச்சாரப் பங்கில் ஹாஸ் டல்கள் நடைபெறுகின்றன. ஸ்காலர்ஷிப்பை எடுத்துக் கொண்டால், ஹரிஜன நல இலாகா என்ற பெயரால், ஆதித் திராவிட மக்கள் நல இலாகா என்ற பெயரால், பச்சையாகச் சொல்லப் போனால் பறையன் இலாகா என்ற பெயரால் இருக் கிறதே தவிர, கரையான் புற்று எடுக்க கருநாக குடி கொண்டதாம் என்பது போல, ஏழை எளியவன் பெயரால் மண்டபம் கட்டி, செல்வாக்கு இருக்கின்றவர்கள் அதில் குடியிருப்பதற்கொப்ப இன்றைய நிலைமை இருக்கிறது. ஹரிஜனங்கள் என்ற பெயரால் ஹாஸ்டல்கள் வைத்து அங்கே விதாச்சாரம் புகுந்திருக்கிறது. உண்மையிலேயே இந்த நிலைமை ஒரு கண் துடைப்பு என்று நான் கருதுகிறேன்.

இது ஒரு புறம் இருக்க, இது வரையில் பேசியவர்கள் சொன்னார்கள் மிகவும் உற்சாகமாக—65 வயதுக்கு மேற்பட்டவர் களுக்கு உதவித் தொகை கொடுப்பதைப்பற்றி. நான் சட்ட மன்றத்திலிருந்து வெளியே போய்க் கொண்டிருந்த போது—

"உண்பது நாழி; உடுப்பது நான்கு முழம்;
எண்பது கோடி நினைந்து எண்ணுவன; கண் புதைந்த
மாந்தர் குடி வாழ்க்கை, மண்ணின் கலம்போல,
சாந்துணையும் சஞ்சலமே தான்"—

என்று சபை நடவடிக்கைகளைப் பார்த்துக்கொண்டிருந்து விட்டு திரும்பிக்கொண்டிருந்த ஒரு பெரியவர் சொல்லிக்கொண்டு வந்தார் 65 வயது உள்ளவர்களுக்கு உதவித் தொகை கொடுக்கப் போவதாகச் சொல்லுகிறார்களே, உண்மையிலேயே நான் அதை வாங்குவேனா, தேர்தலுக்குப் பின் வருமா, இந்த ஐந்தாண்டுத் திட்டத்தில் வருமா, ஏதோ சொல்லுகிறார்களே, உண்மை தானா என்று கேட்டார். நானும் புத்தகத்தைப் பார்த்தேன், 60-65 வயதுக்கு மேற்பட்ட அனாதைகளுக்கு கொடுக்கப் போவதாகச் சொல்லுகிறார்கள் என்று நான் சொன்னேன். 60 வயதுக்கு மேற் பட்ட அங்கஹீனர்களுக்கு மட்டும் உதவித் தொகை கொடுக்கப் படும் என்று சொல்லப்படுகிறது. உண்மையிலேயே எனக்கு முன்பு பேசிய கனம் அங்கத்தினர் குறிப்பிட்ட மாதிரி, ஒரு சிறு குழந்தை பள்ளிக்கு செல்லும்போது ஒரு சைக்கிள் விபத்தில் சிக்கிக்கொண்டாலும் கை கால் போகிறது. இந்த மாதிரி அங்க

ஹீனர்களுக்கு 60 வயதுக்கு மேல் என்று இருப்பதை நீக்கிவிடவேண்டும். டில்லிக்கு அருகில் உள்ள ஒரு பள்ளியில் பயிற்சி பெற்ற ஒரு கண் இழந்தவர் இன்றைக்கு அம்பத்தூர் தீக்குச்சித் தொழிற்சாலையில் வேலையில் இருக்கிறார். அந்த மாதிரி அங்கஹீனர்களுக்கு பயிற்சி கொடுத்தால், உண்மையிலேயே சிறப்பானதாக இருக்கும், வருவாயும் வரும், மக்களும் நல்ல நிலைமையில் இருப்பார்கள். கனம் அமைச்சர் திரு. பக்தவத்ஸலம் தொகுதியில் காலம் சென்ற திரு. வேதாசலம் வீட்டின் எதிரில் தினந்தோறும் 100 பேர், 200 பேர் பெருவியாதியால் பீடிக்கப்படவர்கள் வருகிறார்கள். என்னைப் போன்றவர்களுக்கு ஒன்றுமில்லை, பணம் படைத்தவர்கள் பார்த்தால் வாந்தி எடுக்கும் அளவுக்கு, ஆபாசம் என்று சொல்லும் அளவுக்கு இன்றையதினம் நிலைமையைப் பார்க்கிறோம். இதற்கு திட்டம் ஒன்றும் காணோம். இந்த மாதிரி நோயினால் பீடிக்கப்பட்டவர்களுக்கு, அங்கஹீனர்களுக்கு ஒரு விடுதி கட்டி அவர்களை அங்கு வைத்து அவர்களுக்கு சிகிச்சை அளித்தால் இந்த வியாதியும் இருக்காது, பார்க்கின்றவர்கள் ஆபாசப்படவேண்டியதும் இல்லை. அம்மாதிரி கொண்டு வந்திருந்தால் நான் நிச்சயம் வரவேற்றிருப்பேன். இன்றைய தினம் காலேஜில் படிக்க உத்தியோகத்தில் இருக்கக்கூடிய கிளார்க் போன்றவர்களின் பிள்ளைகளுக்கு சலுகை கொடுக்கப்படும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. உண்மையிலேயே நான் இதைக் கண்டு கொஞ்சம் வேதனைப்படுகிறேன். வானத்தை நம்பி, ஆண்டவனை நம்பி, விவசாயம் செய்யக் கூடியவர்களும், மற்றும் தாழ்த்தப்பட்டவர்களுக்கும் சலுகை கொடுக்க வேண்டும் என்றால் அதற்கு கடன் கொடுக்க முடியவில்லை. திரு. ராஜகோபாலாச்சாரியார் இங்கே இருந்தபோது வண்ணான் மகன் வண்ணானாக இருக்கவேண்டும் என்று சொன்ன மாதிரி உத்தியோகஸ்தர் மகன் உத்தியோகஸ்தராகவே இருக்கவேண்டும் என்ற குறிப்பைத்தான் நான் இதிலே காண்கின்றேன். இத்தகைய நிலை கண்டு நான் வேதனைப்படுகிறேன்.

புதிய திட்டங்கள் என்பதைப் பார்த்தால் 100 திட்டங்கள் என்று சொல்லுகிறார்கள். வரும் காலத்தில் வாழ்வு கொடுக்க திட்டங்கள் இருக்கின்றனவே, இன்றைக்கு வாழ்வு கொடுக்க திட்டங்கள் இருக்கின்றனவா என்று பார்த்தேன். முக்கியமான திட்டங்களெல்லாம் வருங்காலத்தில் வாழ்வு கொடுக்கக்கூடிய திட்டங்களாகத்தான் இருக்கின்றன. கைத்தொழில் நிலையங்களே இல்லாத வரண்ட வட ஆற்காடு மாவட்டத்திலும், தென் ஆற்காடு மாவட்டத்திலும், செங்கற்பட்டு மாவட்டத்திலும் கைத்தொழில் நிலையங்களை ஏற்படுத்தவேண்டுமென்று கடந்த ஐந்து ஆண்டு காலமாகக் கேட்டுக்கொண்டு வருகின்றோம். ஜவ்வாது மலையில் நிறைய சந்தன மரங்கள் இருக்கின்றன. சாத்தனூர் அணைத் திட்டப் பகுதியில் நிறைய கட்டிடங்கள் இருக்கின்றன. சந்தன எண்ணெ தயாரிக்கும் தொழிற்சாலையை ஏற்படுத்தினால் ஏறக்குறைய வேலையில்லாமல் இருக்கின்ற 2,000 மக்கள் தொழில் செய்வார்கள். சுகாதாரத்தைப் பார்க்கும்போது அதிகமான அளவில்

பணம் ஒதுக்கப்பட்டிருக்கிறது. வட ஆற்காடு ஜில்லாவிலேயும் தென் ஆற்காடு ஜில்லாவிலேயும் குடலுருவி வியாதியால் பலர் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். பிளானிங் கமிட்டி கூட்டத்திற்குப் போகும்போது இந்த வியாதிக்குக் காரணம் வறுமைதான் என்று சொன்னார்கள். காலரா அல்ல இது. வறுமையால் பாதிக்கப்படுகின்றவர்களுக்குத்தான் வருகிறது. நேற்று முன் தினம் அமைச்சர் அவர்கள் சொன்னார்கள் ஆயிரக்கணக்கான பேர்கள் இந்த நோயினால் பீடிக்கப்பட்டிருக்கிறார்கள் என்று. இதற்குக் காரணமான வறுமையைப் போக்க இன்றைக்கு ஆளும் கட்சி நடைமுறையில் நடவடிக்கை எதும் எடுக்கவில்லை. இத்தகைய குறைபாடுகளை நீக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டு, இந்த வாய்ப்பினைக் கொடுத்த தலைவர் அவர்களுக்கு வணக்கத்தை சொல்லிக் கொண்டு முடித்துக்கொள்கிறேன்.

* **SRI V. ARUNACHALA THEVAR :** மதிப்பிற்குரிய உதவித் தலைவர் அவர்களே, நமது அன்புக்குரிய நிதி அமைச்சர் அவர்கள் இந்த இடைக்கால நிதிநிலை அறிக்கையை அதாவது 1962-63-க்கான அறிக்கையை சமர்ப்பித்திருப்பதை நான் வரவேற்று, அவரைப் பாராட்டி சில வார்த்தைகள் பேச முன்வந்துள்ளேன். இப்போது நமது ராஜ்யத்திலே 65 வயதிற்கு மேற்பட்ட முதியவர்களுக்கெல்லாம் ஒரு பென்ஷன்போல் ரூ. 20 கொடுக்கலாம் என்று நமது அமைச்சர் அவர்கள் குறிப்பிட்டிருக்கிறார்கள். அதைப் பற்றி நாம் அவரைப் பாராட்டாமல் இருக்க முடியாது. ஆனால் 65 வயது என்பதை இன்னும் கொஞ்சம், அதாவது உத்தியோகத்திலிருந்து விலகும்போது உள்ள 55 வயதை ஒரு குறிக்கோளாக வைத்துக்கொண்டு அந்த வயதிலே உள்ளவர்களுக் கெல்லாம் கொடுக்க முன்வந்தால், மிகவும் நல்லதாக இருக்குமென்று நான் சொல்ல ஆசைப்படுகிறேன்.

அடுத்தபடியாக, அங்கஹீனமாக உள்ளவர்களுக்காக வகுக்கப்பட்டுள்ள திட்டத்தை நாம் கவனிக்க வேண்டியது மிகவும் முக்கியமான ஒரு விஷயமாகும். இந்த அங்கஹீனமாக உள்ளவர்கள் விஷயத்திலே எவ்விதக் கண்டிஷனும் இல்லாமல், அவர்கள் பிறவிலேயே அங்கஹீனமாக இருந்தாலும், இடையிலே அங்கஹீனமான நிலைமை ஏற்பட்டாலும் அவர்களுக்கு கருணை காட்டும் வகையிலே ஒரு மானியம் போன்ற தொகையைக் கொடுத்து உதவ வேண்டுமென்பது என்னுடைய அவாவாகும். அதேபோல், பிச்சைக்காரர்கள் நம்முடைய ராஜ்யத்திலே இருப்பதால், அவர்களுக்கு ஒரு மானியமோ அல்லது உதவித் தொகையோ கொடுக்க வேண்டுமென்பது அத்தியாவசியமில்லாத காரியம். இங்கிலாந்திலே பிச்சை எடுப்பவர்கள் அதிகமாகப் பரவிய ஒரு விஷயத்தை நான் படித்திருப்பது என்னுடைய ஞாபகத்திற்கு வருகிறது. எப்படி என்றால், வாலிபர்கள் எல்லாம் திடீரென்று பிச்சை எடுக்க ஆரம்பித்து விட்டார்களாம். அதற்கு ஒரு லீடர் ஒரு இடத்தில் இருந்துகொண்டு, மற்றவர்களை ஆங்காங்கே சென்று யாசகம் வாங்கி வரும்படி செய்வது வழக்கமாம். அப்படி யாசகம் எடுத்து, அவர்கள் சதையை நல்லமுறையிலே வளர்க்க ஆரம்பித்தார்கள்.

12th December 1961] [Sri V. Arunachala Thevar]

அது பரவி, வாலிபர்கள் எல்லாம் ஒவ்வொரு இடங்களிலும் பிச்சை எடுக்க ஆரம்பித்து விட்டார்களாம். இதைப் பார்த்த அரசாங்கம், பிச்சை எடுப்பவர்களை எல்லாம் அரஸ்ட் செய்யும்படி ஒரு உத்திரவு போட்டது. உடனே எல்லாம் பிச்சை எடுப்பதை நிறுத்தி, வேலை செய்ய ஆரம்பித்து விட்டார்களாம். இதை நான் படித்திருக்கிறேன். ஆகையினாலே, இப்போது நமது ராஜ்யத்திலே பிச்சைக்காரர்கள் என்ன செய்ய வேண்டுமென்றால், தாலுகா வாரியாக குறிப்பிட்டு, உண்மையாகவே பிச்சை எடுப்பவர்கள் அங்குள்ள தாசில்தாரிடம் சர்டிபிகேட் வாங்கியோ அல்லது வில்லேஜ் மணியத்திடம் சர்டிபிகேட் வாங்கியோ வந்தால், அவர்களுக்கு ஓர் இடத்திலே ஆகாரம் கொடுக்கப்பட்டு, அவர்களை வேலை செய்யும்படி செய்தால் அவர்கள் நாளடைவில் பிச்சை எடுப்பதை அறவே ஒழித்துவிடுவார்கள். அப்போது நமது ராஜ்யத்திலே பிச்சைக்காரர்களே இல்லாமல் செய்யலாம் என்பதை நான் அரசாங்கத்திற்கு தெரிவித்துக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக, நமது ராஜ்யத்திலே புதுக்கோட்டை இணைந்த பிறகு, நான் இந்த மன்றத்திலே விவசாயத்திற்காக தண்ணீர் பிரச்னையைப் பற்றி பல தடவை எடுத்துச் சொல்லி இருக்கிறேன். ஆனால் அதை அரசாங்கம் கவனித்தபாடில்லை. அதையும் தவிர, புதுக்கோட்டைப் பகுதியில் வெள்ளாறு, அக்கினி ஆறு, காட்டாறு ஆகியவற்றில் அணைக்கட்டுகள் கட்டும்படி கடந்த 12 வருஷங்களாக எடுத்துச் சொல்லியும், 12 வருஷங்களாக அதற்கான எஸ்டிமேட்டுகள் தயார் செய்யப்பட்டு, சென்னைக்கு வருவதும், திருச்சிக்குப் போவதுமாக இருக்கிறதே ஒழிய, வேலை நடந்தபாடில்லை. இந்த கடந்த ஐந்தாண்டுகளாக இந்த மன்றத்தில் பலமுறை இதைப்பற்றி எடுத்துச் சொல்லியும், இன்னமும் அணைக்கட்டு கட்டுவதற்கான ஏற்பாடுகள் செய்யப்படவில்லை. தவிர, எந்த விதமான ஒரு நீர்ப்பாசனத் திட்டமும் இதுவரை நிறைவேற்றப்படவில்லை. ஆகவே, இதை நமது நிதி மந்திரி அவர்கள் கவனிக்க வேண்டுமென்று சொல்லிக் கொள்வதோடு, காவேரியில் இப்போது ஏற்படக்கூடிய வெள்ளத்தின் காரணமாக, பரிசீலனை செய்து கொண்டிருப்பதை கவனித்து, அப்படி அதிகப்படியாக கிடைக்கக்கூடிய தண்ணீரை ஜடார்பாளையத்திலிருந்து ஒரு கால்வாய் புதுக்கோட்டைக்கு வருவதற்கு ஏற்பாடு செய்ய வேண்டுமென்று நான் மன்றாடிக் கேட்டுக் கொள்கிறேன். நமது நிதி மந்திரி அவர்களுக்கு புதுக்கோட்டையைப்பற்றி நன்கு தெரியும். அநேக தடவைகள் அவர் அங்கு வந்திருக்கிறார். ஆகவே, அவர்கள் கவனித்து புதுக்கோட்டைக்கு முக்கியத்துவம் கொடுத்து மணப்பாறை, விராலிமலை மார்க்கமாக புதுக்கோட்டை அறந்தாங்கி வரையிலும் அதாவது அந்தப் பகுதியிலே வாழக்கூடிய 8 லட்சம் மக்களுக்கு தண்ணீர் கிடைக்க வழி செய்யும்படியாகக் கேட்டுக் கொள்கிறேன். அதன்றி வேறு வழி கிடையாது. இப்போது அநேக இடங்களிலே மழை பெய்தாலும்கூட, பயிர்கள் காய்ந்து போய்தான் இருக்கின்றன என்பதை நான் இந்தச் சபையிலே வருத்தத்தோடு சொல்லிக்கொள்கிறேன்.

[Sri V. Arunachala Thevar] [12th December 1961

அடுத்ததாக, நமது நிதி மந்திரி அவர்கள் இதற்கு முன் ஐந்து வருஷங்கள் பணியாற்றி, இப்போது இந்தச் சபையிலேயும் ஐந்து வருஷ காலமாக நல்ல முறையிலே நமது ராஜ்யத்திலே பணியாற்றி, இப்போது அவர்கள் மத்திய சர்க்காரில் பணியாற்றுவதற்கு போக இருக்கிறார்கள். அவர்களுக்கு ஆண்டவன் நீண்ட ஆயுளையும், நல்ல தேக சுகத்தையும் கொடுக்கும்படி பிரார்த்திப்பதோடு, மத்திய சர்க்கார் நிதி நிர்வாகத்தில் பங்கு கொண்டிருக்கும்போது எங்களுடைய காடாரம்பமான புதுக்கோட்டைப் பகுதியை ஞாபகத்தில் வைத்துக்கொண்டு, அதை முன்னேற்றத்திற்கு கொண்டுவர வழிவகை செய்யவேண்டுமென்று அவர்களிடத்திலே தெரிவித்துக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக, புதுக்கோட்டைப் பகுதியிலே 1909-ம் ஆண்டிலே புதுக்கோட்டை தர்பாரில் கண்டுபிடிக்கப்பட்டிருக்கிற இரும்பு, உலோகம் உள்ளதாக உள்ள ஒரு ரிப்போர்ட்டைச் சுருக்கமாகச் சொல்கிறேன். அதையும் கவனிக்க வேண்டுமென்று நான் கேட்டுக் கொள்கிறேன்.

*Mines and Minerals—Availability of iron ore in Pudukottai Division—Exploration of.*

The Pudukottai Division is rich in magnetic iron ore deposits and the erstwhile Pudukottai Darbar made fervent attempt to explore deposits.

In the year 1909, the Pudukottai Darbar engaged one Mr. Primrose, a geologist of Kothagiri in Nilgiris district for the exploration of the minerals in the State. His contract was for a very short period and within that time he examined a few places in Kulathur taluk. He found out the occurrence of magnetic iron ore of high order in Mallampatti of Perambur vattam in Kulathur taluk and he has submitted an elaborate report to the Darbar. He sent four packets of sample ore along with his report. The Darbar got those sample ore examined by the Geological Survey Office, Calcutta. The Geological Survey Office intimated the Darbar that the samples of ore contained about 68 per cent of iron. The Darbar then considered the possibility of commercial exploitation of the ore. It approached a commercial body at Calcutta to offer its opinion. The said body opinioned "Mr. Primrose's work seems to point out to a considerable amount of iron ore. If such work indicates a considerable thickness of high grade ore, then it would be advisable to call in a geologist to give". The said commercial body published an advertisement in the Commercial journal inviting any firm to undertake extensive survey of the mineral ores available in that spot. The Darbar approached the Travancore State to lend any of its geologists for this purpose, but the Travancore State Government negatived the request on the plea that their geologists were fully engaged and that there was none to spare. The Darbar's effort to get one from the Mysore

12th December 1961] [Sri V. Arunachala Thevar]

Government was also in vain. Later when the Manamadurai Chord Line was laid in the year 1929, the very same company was approached but it was not prepared to undertake the work on some pretext or other. The efforts of the Darbar to have the ore explored by some other companies in Bombay such as "Best and Company", were also of no avail.

(மணி அடிக்கப்பட்டது.)

இரண்டு நிமிஷங்கள் அவகாசம் கொடுங்கள். இதைச் சொல்லி முடித்துவிடுகிறேன்.

The political status of Pudukkottai Darbar at that time was such that it had to correspond through Mysore Government to get any help from the British rulers. Lack of transport facilities, good living conditions, etc., deterred to a certain extent. The further exploration of the ore which remain unto this day unexplored.

In response to the advertisement in the Commercial Journal, one "Burn and Company", Raneeganj, made enquiries of the ore and sought for further particulars about the availability of transport and other facilities. At that time, i.e., in 1910, Electricity was not available even at Tiruchirappalli. The Manamadurai Chord Line was not laid then—only the survey operations had been completed. The particulars were furnished to the company. The company expressed its reluctance to explore the iron ore. It intimated the Darbar "If the ore is to be worked successfully, it would be necessary to ship at least 10,000 tons per month and unless the railway and shipping arrangements are good, it will not be possible to achieve this end" and it finally withdrew from the scene replying that "it would be impossible to work this ore by exporting to English ports at a profit unless the proposed railway was completed."

SRI M. P. SUBRAMANIAM: Is the hon. Member reading? 1-30 p.m.

DEPUTY SPEAKER: The hon. Member is not reading but referring to his notes.

SRI V. ARUNACHALA THEVAR: The conditions have now changed. The erstwhile Pudukkottai State has become part and parcel of the Madras Government. The Indian geologists are piercing through the crest of the earth in quest of raw industrial materials such as iron, coal, etc. Unlike in olden days the ore can be worked in our own steel plants. The proposed steel plant at Salem can be more profitably worked if this ore is exploited and added to what is available in the Salem ore. The Darbar office old records that dealt with the iron ore at Mallampatti may be available in the Darbar office records. They may be perused and immediate orders issued for full scale exploitation of the rich iron ore deposits.

[Sri V. Arunachala Thevar] [12th December 1961

ஆகையினுலே இந்தத் திட்டம் ஒரு நல்ல திட்டம். இதை நமது அரசாங்கம் உடனடியாக பரிசீலனை செய்யவேண்டும். குளத்தூர் தாலுகா, நீர்ப்பழனி Firka மேலம்பட்டி கிராமத்தில் இரும்பு, காந்தம் உலோகம் கண்டுபிடிக்கப்பட்டிருப்பதை பரிசீலனை செய்யவேண்டும் என்று கேட்டுக்கொண்டு, இத்துடன் என் பேச்சை முடித்துக் கொள்ளுகிறேன்.

1-32 p.m. DEPUTY SPEAKER : The House will now adjourn and meet again at 8-30 a.m. tomorrow.

The House then adjourned.

## IV—PAPERS LAID ON THE TABLE OF THE HOUSE.

### A. Statutory Rules and Orders.

* 411. Notification issued with G.O. No. 4014, Revenue, dated 20th September 1961, exempting from the payment of sales tax in respect of hostels and canteens run exclusively for the benefit of students of recognized educational institutions in the State, whether run by the educational institutions themselves or by students' committees. [*Laid on the table of the House under section* 53 (5) *of the Madras General Sales Tax Act*, 1959 (*Madras Act I of* 1959).]

412. Notification issued with G.O. Rt. No. 803, Revenue, dated 21st October 1961 exempting from liability to entertainment tax, the film show proposed to be shown on the 16th November 1961, by the British Women's Association of Madras, in aid of South Indian Charities. [*Laid on the table of the House under section* 16 (4) *of the Madras Entertainments Tax Act*, 1939 (*Madras Act X of* 1939).]

413. Notification issued with G.O. Ms. No. 4664, Revenue, dated 27th October 1961, appointing the 22nd November 1961, as the date on which the provisions of the Madras Estates (Abolition and Conversion into Ryotwari) Act, 1948, other than sections 1, 2, 4, 5 7, 8, 58-A, 62, 67 and 68 which have already come into force, shall come into force in the Mascaskhanpattai Zamindari village in Ponneri taluk of Chingleput district. [*Laid on the table of the House under section* 67 (4) *of the Madras Estates (Abolition and Conversion into Ryotwari) Act*, 1948 (*Madras Act XXVI of* 1948).]

### B. Reports, Notifications and other papers.

* 272. Speeh of the Hon. Finance Minister presenting the Final Supplementary Estimates for 1961–62.

* 273. Demands for Grants for Further Expenditure and Detailed Supplementary Estimates thereof for the year 1961–62.

* 274. Notice of Demands for Further Grants during the year 1961–62.